ஓம் :

10-1

# மோக்ஷ நிலை

அல்லது

# குருவும் சீடனும்



இற்றியவர் :

ஸ்வாமி நித்யாநந்தம்,

[illegible] ளமனார்.

ஓம்:

# மோக்ஷ நிலை

அல்லது

# குருவும் சீடனும்





இயற்றியவர்

**ஸ்வாமி நித்யாநந்தம்**

விலை ரூ. 1—6—0

---

கிடைக்குமிடம் :—

SWAMY NITHYANANDAM,
PRESIDENT,
Sri Krishna Aiyar High School Committee,
DEVI MANDIRAM, CHINNAMANUR,
MADURAI DISTRICT.

10-1

# முன்னுரை.

---

அன்பர்களுக்கோர் வேண்டுகோள் :—

(1) இப்பரந்த உலகில் நீதியும் நேர்மையுமற்று, தெய்வீகமும் பண்டையப்பண்புமற்று, உண்மை ஹிந்து தர்ம கலாசாரங்கள் கெட்டு, நாஸ்தீகம் ஓங்கியும், ஆஸ்தீகம் சிறுகச் சிறுக மங்கியும், மக்கள் தங்கள், தங்களுக்குத் தோன்றும் லக்ஷியமே பெரிதெனக் கருதி, சீரும் சிறப்புமற்ற சூன்ய வாழ்வை நோக்கிச் செல்கின்றன ரென்பது இன்றைய நடை முறையில் காணும் காக்ஷியாகி விட்டது.

(2) நிற்க, இத்தகைய சுபீக்ஷமற்ற வாழ்வு நீங்கி, நீதியும், நேர்மையும் கொண்ட உண்மை தர்மத்தை நிலை நாட்ட வேண்டுமே யானல், கடவுளின் கருணை யிருந்தாலன்றி வேறெதைக் கொண்டும் ஆகாதென்பது தெளிவு. இவ்விஷயங்களை உலகவாழ் மக்கள் அனைவரும் தங்கள் மனதில் உணர்த்திக் கொள்ளும் பொருட்டும், மனிதப்பிறவியெடுத்த சகலரும் எவ்வழியைப் பின் பற்றினல் உண்மை தர்மத்தை நிலைநாட்டிச் சீரான வாழ் வெய்த முடியுமோ அதையே அடிப்படையாகக் கொண்டும் இயற்றப் பட்டுள்ளதே **“மோக்ஷ நிலை அல்லது குருவும் சீடனும்”** என்ற இந்நூலாகும்.

(3) சென்ற இரண்டு ஆண்டுகளுக்கு முன்னர் அடியேனல், இயற்றி வெளியிடப்பட்டுள்ள **“ஞான ஒளி அல்லது ஜோதி”** என்ற நூலையே ஆதாரமாகக் கொண்டும் அதில் அடங்கியுள்ள கருத்துக்களுக்கு விளக்கம் கூறும் வகையிலும், மனிதன் எளிதில் பின்பற்றி செல்லக்கூடிய தெய்விக மார்க்கங்களை எடுத்துக் காட்டும் வகையிலுமே

இந்நூல் இயற்றப்பட்டுள்ள தென்பதை தெரிவித்துக் கொள்கின்றேன். இதில் அடங்கியுள்ள ஒன்று முதல் ஐந்து அத்தியாயங்கள் வரையில் கண்டுள்ள விஷயங்கள் யாவும், சாதாரண உலக பழக்கத்தை யொட்டியும், மனித வாழ்வுடன் தெய்வீகத் தன்மை எவ்வகையில் பிணைக்கப்பட்டுள்ள தென்பதையும், குருவுக்கும் சீடனுக்கும் ஏற்படும் சம்பாஷணை ரீதியாக (வினவும் விடையுமாக) எடுத்து விளக்கப் பட்டுள்ளது. மேலும், இதில் கண்டுள்ள மூன்று நான்கு அத்தியாயங்களில் மனிதன் கடைபிடித்தொழுக வேண்டிய வழிபாட்டு முறைகள் எளிய நடையில் விமர்ஸனம் செய்யப்பட்டுள்ளது.

(4) ஆரம்பம் முதல் கடைசி வரையில் காணும் விஷயங்கள் யாவும், அடியேனின் சத்குரு நாதரின் உபதேசத்தினாலும், பரந்தாமனின் கடாக்ஷப்ரபாவத்தினாலும், வாழ்க்கையிலேற்படுகின்ற அனுபவத்தைக் கொண்டும், அவ்வப்பொழுது மனதில் உதயமாகும் விஷயங்களைச் சிறுகச் சேகசித்து ஓர் சிறந்த நூலாக இயற்றபட்டுள்ளதே இம்மோக்ஷ நிலையென்ற புத்தகமாகும். பொதுவாய் சொந்த அனுபவத்தையும், புத்தியின் உதவியைக் கொண்டும் இயற்றபட்டுள்ள இந்நூலில் குற்றம் குறைகள் காண்பதும் சகஜமே, என்றுலும் இதில் கண்டுள்ள முக்கிய விஷயங்கள் தெய்வீகத் தர்மங்களுக்குப் புறம்பானதல்ல என்பதை மட்டிலும் நன்கு ஊன்றி படித்தாலே விளங்கிவிடும். ஆகவே இதில் காணும் குற்றங் குறைகளை நீக்கி உண்மை தத்துவ விஷயங்களை மட்டிலும் கிரஹித்துக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளுகின்றேன்.

(5) இந்நூலை யியற்றுவதற்கு எந்த ஈஸ்வரன் மறைமுகமாய் நின்று உதவி யளித்தானே, அப்பரந்தாமனின்

10/1



பாத கமல சரணங்களிலே சஹஸ்ர கோடி வந்தனங்களுடன் இந்நூலை சமர்ப்பிக்கின்றேன். மிகக் குறுகிய கால ஆராய்ச்சியைக் கொண்டு இயற்றி உருவாக்குவதற்கு, சர்வேஸ்வரனே, மனித உருக்கொண்டு சத்குரு நாதனய் வந்து பனே சாக்ஷி மூலம், ஆவிர்பவித்து உதவியும் ஊக்கமுமளித்த குரு தேவரின் பாத கமல சரணங்களில் பல கோடி தண்டனிட்டு இந்நூலைச் சமர்ப்பிக்கின்றேன்.

இந்நூலுக்குச் சிறப்புரை யெழுதிய ஸ்ரீ கிருஷ்ணய்யர் உயர் நிலைப்பள்ளி உதவி யாசிரியர் **ஸ்ரீ ராமகிருஷ்ணன்,** B.A., L.T. அவர்களுக்கும், **ஸ்ரீ ச. சுடலைமுத்து பிள்ளை** யவர்களுக்கும், இப் புத்தகத்தை சிறந்த முறையில் அச்சிட்டு தந்துதவிய மதுரை "ஸம்பத் அச்சு இயந்திர சாலை"யின் உரிமையாளர் **ஸ்ரீ ஆருவமுத அய்யங்கார்** அவர்களுக்கும் அடியேனின் நன்றியை தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

தாஸன்

T. R. V. நித்தியாநந்தம்.
11—2—53.

# மதிப்புரை.

அன்புடையீர்,

இவ்வுலகில் மானிட ஜென்ம மெடுப்பது மனிதன் முன் பிறவியில் செய்த நற் செய்கைகளைக் கொண்டு தான் என்பது ஆன்றோர் துணிபு. அத்தகைய ஜென்ம மெடுப்பதும் ஓரளவிற்கு மனிதன் முற் பிறப்பில் செய்த பாவங்களின் பயனே யாகும். மானிடனாய்ப் பிறந்த ஒருவன் அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்குவித பொக்கிஷங்களையும் அடைவது தான் ஜென்மாவின் தத்துவமாகும். மோக்ஷ வீட்டை அடைவது எளிதல்ல. அதை எய்த மனிதன் தான் ஈட்டும் பொருளைக் கொண்டு அற வழியில் நின்று எல்லாம் வல்ல சர்வேசுவரனை அல்லும் பகலும் வழிபடல் வேண்டும்.

பல மதங்களும் போதிக்கும் தத்துவம் ஒன்றே. நம் சகோதரர்களுக்கு அன்பு காட்டுவதே கடவுளை வழி படுவதாகும். சர்வ வல்லவரான கடவுள் ஒவ்வொருவருடைய மனதிலும் இருக்கிறார். இத் தத்துவத்தை, மனிதனிடம் ஒன்று பட்ட கடவுள், மனிதனிடம் இயங்கும் கடவுளாவது என்றும் சொல்லலாம்.

கடவுளை வழி படுவதற்குரிய முறைகளுண்டு. அவற்றைக் குருவாயிலாகக் கற்றுக்கொள்ள வேண்டும். ஒருவன் மனதை எப்படிக் கட்டுப்படுத்த வேண்டும், ஜென்மா எடுத்ததின் நோக்க மென்ன, கடவுளை பூஜிப்பதின் வழிகள், சரீரம் அழிந்த பின் ஆத்மாவிற்கு என்ன கதி கிடைக்கின்றது என்ற அரிய பெரிய விஷயங்களை விளக்கமாக எடுத்துரைப்பது தான் **மோக்ஷ நிலை அல்லது குருவும் சீடனும்** என்ற இந்நூலின் நோக்கமாக அமைகின்றது.

இந்நூலாக்கியோர் குருவாயிலாகத் தத்துவங்களைக் கற்றறிந்து நடைமுறையில் அவைகளைக் கையாண்டு வரும் பிரம்ம ஸ்ரீ நித்தியானந்த சுவாமியவர்களாகும். அன்னார் மதுரை ஜில்லா சின்னமனூர் என்ற க்ஷேத்திரத்தில் உயர்

கிலேப் பள்ளி ஒன்று நடத்தும் பொறுப்பேற்று அதை செவ்வனே நடத்தியும் வருகிறார். அத்தகையார் இச் சிறந்த நூலில் அடங்கிய தத்துவங்களை மிக எளிய நடையில் குரு சிஷ்ய சம்பாஷணை முறையில் இயற்றியுள்ளார். எனவே, இந்நூலைப் படிக்கும் யாவருக்கும் இது புத்துயிரளித்து ஞான வொளியை வீசும் என்பதில் ஐயமில்லை. சுவாமியவர்கள் மேற்கொண்டிருக்கும் திருப்பணியை இயற்ற எல்லாம் வல்ல சர்வேசுவரன் அவர்களுக்கு அருள் புரிய பரம்பொருளை வேண்டி நிற்கும்,

சின்னமனூர்,
நந்தன ஸூ
தைத் திங்கள்
29-ஆம் நாள்.
11—2—1953.

அன்பன்,
**ந. இராமகிருஷ்ணன்.**

---

## ஸ்ரீ :
## நூலின் சிறப்பு.

---

(1) சமத்துவம், சர்வத்தம் என்னும் அறப்பொருள் ஆகிய பெருஞ் ஜோதியின் உறைவிடம் என்னும் இப்பாரந்த உலகத்தில் இல்லறம் அல்லது நல்லறம் அன்று என்னும் நான்மறையின் சாராம்சத்தை 'கடுகைத் துளைதது எழு கடலை புகட்டி குறுகத் தரித்த குறள்' என்னும் தெய்வத் திருவள்ளுவனார் திருவாய் மலர்ந்து அருளிய திருக்குறளுக்கு இணங்க 'பற்றுக, பற்றற்றான் பற்றினை, அப்பற்றை பற்றுக பற்றுவிடற்கு' என்பதுபோல் தாமரை யிலையில் தேங்கியும் தேஙகாத் தண்ணீர் போன்றும் சத்துவ சாத்மீக குணம் படைத்து இல்லற வாழ்வில் யீடுபட்டு இவ்வுலகோர் உற்றிவிக்கும் பொருட்டு ஞான ஒளி அல்லது ஜோதி என்னும் அருட் பெரும் ஜோதியை புஸ்தக ரூபத்தில் ஜோதியாகவே தந்தருளிய **T. R. V. நித்தியானந்த ஸ்வாமி** அவர்கள் அஜ்ஜோதியின் அன்பெனும் பெருக்காற்றினல் அன்பு என்பது

ஒன்றின் தன்மை அதை அமரரும் அறிந்தது என்றால் என்பதை நிசர்த்து மற்றொரு தத்துவஞான புத்துணர்ச்சியை **மோக்ஷ நிலை, அல்லது குருவும் சீடனும்** என்னும் இந்நூலை இவ்வுலகிற்கு தந்தருளியிருக்கிறார். முன் சொன்ன ஜோதியின் பெருமையோ அளவிடற் கரிது. அதனினும் இத்தகைய இந்நூல் எவ்வளவு பெரிதென்று என் போன்ற சிஷ்ய குணம் படைத்தவர்களுக்கு அளவிட்டு உரைத்தல் சாலாது. இருப்பினும் இந்நூலை படித்ததினால் ராஜத தாமத குணம் ஒழிந்து அன்பும் ஐம்புல உணர்ச்சியும் உண்டாக்கக் கூடிய இந்நூலுக்கு சிறப்புரை எழுத ஒருவாறு முன் வந்துள்ளேன்.

(2) இப்பரந்த உலகில் பலப்பல மத போதனைகள் அரசியல் உதவி கொண்டு பரப்பப்படுகின்ற காலத்தில் இந்து மதம் ஒருவாறு க்ஷீணதசை அடைந்து யிருந்தாலும் 'காந்தம் அசையாது இருந்தும் எதிர் இருக்கும் இரும்பு ஊசி, கம்பித்தார் போன்றும், தேனீக்கள் தேன் யிருக்கும் இடத்தைத் தேடிச் செல்வது போன்றும்', தனது உயர்வினை உடைய தன்மையால் இந்து மதம் ஒருவாறு நிலைத்திருக்கின்றது. உயர் கருத்தும் உணர்ச்சியிற் பெருக்கும் பனத்து தகர்ந்தை அழுக்கு அறுத்து யோகநிலை நாடிச் செல்லும் நமது **ஸ்ரீலஸ்ரீ T. R. V. நித்தியானந்த ஸ்வாமி** ஸ்ரீ அவர்கள் அருளித தந்த இவ்விரு ஞான நூல்கள் அறம் பொருள் இன்பம் விடு என்னும் மோக்ஷார்த்த நிலைக்குத் தேடிச் செல்லும் மக்களுக்கு புத்துணர்ச்சி அளிக்கும் தன்மையை பாராட்ட வேண்டியது அவஸ்யத்திலும் அவஸ்யமே.

(3) இவ்விரு ஞான நூல்களும் 'நூல் பலகல்' கற்றுணர்ந்து அடங்கல் என்னும் மூதுரைக்கு இணங்க பல சந்தேகங்கள் உடையவர்களுக்கு தெளிவுதனில் தெளிவு தரும் என்பது போன்ற காரண விடை யளிக்கும் தன்மையில் நுட்பத்தின் நுட்பம் ஆகிய வியாக்கியானம் செய்யப்பட்டிருக்கின்றன.

ஆகவே இந்நூலே 'கற்க கசடு அற நிற்க அதன் பின் அதற்கு தக' என்றபடி கற்று அறிபவர்களுக்கு இந்நூல் கள் இரண்டு பூரணத்துவம் அடைந்திருக்கின்றது.

(4) 1. உடம்பிணைப் படைத்த பயன் யாது?
திடம் பட ஈசனைத் தேடுவதே ஆகும்.

2. அவனை எங்கே தேடிக் காண்பது?
உடம்பினுன் உத்தமனைத் தேடு.

3. தேடுவது எப்படி? ஜீவனை ஐக்கியப்படுத்தி தத்துவ ஞானத்தை அடைந்தால் அன்றி மற்றவையால் ஆகாது. அதுவும் தனக்குத்தானே ஞானம் தலைப்பட்டு வுறுகினுல் தேனுர் அமுதனை கண்டு தெளியலாம் என்கின்ற முறையனைத்தும் ஸ்வாமி ஸ்ரீ அவர்கள் இயற்றிய இவ்விரு நூல்களில் முழுதும் குறைவர தெளிவு படுத்தி யிருக்கின்றது என்பதை எனது மனம் உமர்ந்த உட்கருத்தில் எழுந்த அவாப் பெருக்கினுல் உலகோர்க்கு அறை பறைய ஆசைப் படுகின்றேன்.

(5) கல்விக் கரையில் கற்பவர் நாட் சில என்பதற்கு இணங்க குறுகிய ஆயுள் நாட்களை உடைய மக்களுக்கு சுருங்கச் சொல்லல், விளங்க வைத்தல் என்ற இலக்கண விதிப்படி இலகுவில் தத்துவ ஞானத்தை இவ்விரு நூல் களும் போதிக்கின்றன.

(6) என் போன்ற போலீஸ் உத்தியோகஸ்தன் மெய்யை நிலை நாட்டும் பொருட்டு பொய்யை வண்ணுன் அழுக்கு அறுக்க உவர்மண்ணை உபயோகப்படுத்துவது போலும், இரண்டு கண்களையும் மூடித் தூங்குகின்ற

காலத்து புலி வந்து பாய்ந்தது போலும் கனவு கண்டு விழித்தெழுந்து பார்க்கும்போது மனைவி, மக்கள், மாடு, ஆடு, ஆகிய பொருட்கள் கட்புலனுக்கு தென்படுகின்றது. மெய்யாகிய சாகரத்து வந்ததே ஒப்பாகும் என்பதை கடை பிடித்தான இந்நூலுக்கு சிறப்புரை எழுத புகுந்து வியம் பினும் வியப்பேயாம். இதை ஒருவாறு பொருட் படுத்தாது எனது அன்பின் இருதயத்திற்கு ஆறுதல் அளிக்க இச் சிறப்புரையை அச்சிடுமாறு வேண்டிக் கொள்ளுகிறேன்.

இந்நூலை இயற்றி அருளிய ஸ்ரீலஸ்ரீ **T. R V. நித்தியானந்த ஸ்வாமி** அவர்களுக்கு எங்கெங்கும் நாதபடி எங்கும் நிறைந்துள்ள பரந்தாமன் நீண்ட ஆயுளையும் சேவை மன பாசத்தையும் அருளுமாறு பிரார்த்திக்கின்றேன். இந்நூலை படிப்பவர்களுக்கு சீரும் சிறப்பும் உற்று தெய்வீகப் பண்பு நிறைந்த சுபீக்ஷ வாழ்வு எய்தி பல்லாண்டு வாழ ஈசன் அருள் புரிவார் என்று திட நம்பிக்கையுடன் இருக்கும்

**ச. சுடலைமுத்து பிள்ளை,**
போலீஸ் சப் இன்ஸ்பெக்டர்.

ॐ

गुरुर्ब्रह्मा गुरुर्विष्णुर्गुरुर्देवो महेश्वरः ।
गुरुः साक्षात्परं ब्रह्म तस्मै श्रीगुरवे नमः ॥

# மோக்ஷ நிலை

அல்லது

# குருவும் சீடனும்.

—o—

அடியேனைத் தேடி வந்து, அன்பென்னும் அமுதமூட்டி— அறிவென்னும் விளக்கையேற்றி பேரின்பக் கடலைக் காண நல்லதோர் மார்க்கம் காட்டி நாத பிந்து தன்னை நளினமாய் உணர வைத்து ஓமென்றொரு அக்ஷரத்தை உலகெல்லாம் எடுத்துரைக்க, என்னையாண்டருள வந்த சத்குரு தேவா சரணம்,

## முதல் அத்தியாயம்.

சி:— ஸ்வாமி நமஸ்காரம்.

கு:— அன்பனே, எங்கே யென்னைத்தேடி. வந்தாய் ?

சி:— நீண்ட நாளாய் தங்களிடம் சில முக்கிய விஷயங்களை கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டுமென்ற அவாக் கொண்டிருந்தேன். அதற்கேற்ற தருணம் இது வரை யில் கிட்டவில்லை. இப்பொழுதே சமயம் கிட்டியது. தங்களையும் தேடி வந்தேன்.

கு:- என்னிடம் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டிய விஷய மென்னவோ அதை விவரமாய் தெரிவி.

சி:- ஸ்வாமி, எனக்கும், மற்றைய சமூகத்திற்கும் தேவை யான அநேக விஷயங்களுண்டு. அவைகளில் சிலவற்றை மட்டிலும் தங்களிடம் தெரிந்துகொள்ளவே ஆசைப் படுகின்றேன். நிற்க, என்னுடைய சந்தேகங்கொண்ட வினக்களை, சாதாரணமென்று கருதாமல் என் மனம் தெளிவடையும் வகையில் விளக்கமான விடையளிக்கும் படி கேட்டுக்கொள்ளுகின்றேன்.

கு:- உனது சந்தேகம் கொண்ட விஷயங்களை தெரிவித்தால், இயன்ற அளவு அதற்கு விடையளிக்கலாம்.

சி:- ஸ்வாமி உலகில் எங்கு பார்த்தாலும் கொலையும், களவும், உயர்வு, தாழ்வென்ற பாகுபாடுகளும் ப்ரபுக்களென்றும் எளியவரென்றும், கடவுள் உண்டென்றும், இல்லை யென்றும், மதச்சண்டைகளும், ஜாதிச் சண்டைகளும், தோன்றுவதும், மறைவதுமாகவிருக்கின்றனவே இதன் காரணமென்ன?

கு:- இவைகளைத் தெரிந்து கொண்டு செய்யப்போவ தென்ன?

சி:- செய்வதொன்றுமில்லையென்றாலும் உலகில் தோன்றும் சுபிக்ஷமற்ற வாழ்வும், சூன்ய நிலையும் ஓங்கியிருப்பது கண்டு அதற்கேதேனும் மாற்றுவழி காணமுடியுமா வென்பதை தெரிந்துகொள்ளலாமென்றுதான்.

கு:- நீ கேட்கும் விஷயங்கள், ரொம்பவும் முக்கியமாயும், அவசியமாயும் தெரிந்துகொள்ள வேண்டியதுதான், ஆனால் அதற்கு விடையளிப்பதென்பது அவ்வளவு சுலபமல்ல.

சி:- ஏன் அப்படி சுருக்கமாய் எளிதல்லவென்று சொல்லி விட்டீர்கள், நான் தங்களை கேட்ட விஷயங்கள் ஒன்றும் நூதனமல்லவே. சகலருக்கும் தோன்றும் அதே சந்தேகங்கள் தானே தங்களிடமும் கேட்கப்பட்டன.

கு:- நூதனமொன்று மில்லையென்றாலும், பொதுவாய் எது ஒன்றைக் கேட்கும்பொழுதும், அதைச்சுலபமாய் தெரிந்துகொண்டுவிடலாமென்று தோன்றுவது இயற்கைதான். ஆனால் அடிப்படை யுண்மைகளை, தெரிந்துகொள்வதுதான் எளிதல்லவென்பதை யுத்தே சித்தே, அப்படிக் கூறப்பட்டது. பிறக, உலகில் சகலரும் செய்து வருகின்ற எந்தக்காரியமும் அவரவர்களின் மனோ உணர்ச்சி வசப்பட்டுச் செய்கின்றதேயாகும். மேலும் எதுவும் தங்களுக்கு தோன்றுவதையே செய்து தீர வேண்டுமென்பதையும், இதற்கெல்லாம் காரணபூத மாயுள்ள ஈஸ்வர சங்கல்ப மொன்று தனித்திருப்பதை யுணராமலும், தங்களுக்கு தோன்றிச் செய்வதை விட பரமேஸ்வரனின் உதவியோ, அல்லது கடாக்ஷமோ எதுவும் அவ்வளவு முக்கியமல்லவென்று, உதாசீனமாய் எண்ணிக்கொண்டிருக்கும் பொழுது, மனிதன் சுபீக்ஷ வாழ்வை எப்படிக் காண முடியும்? மக்கள் எதையும் பூர்ணமாய் தெரிந்துகொண்டுவிட்டால் தானாகவே தெளிவடைந்து விடுவார்கள்.

சி:— தாங்கள் கூறும் விஷயங்களை என்னால் சிந்தித்தறிய முடியாதென்று கருதுகின்றீர்களா?

கு:— அப்படி ஒரு தனி மனிதனை மட்டிலும் குறிப்பாய் நினைக்கக் காரணமில்லை. எவருமே பிறர் சொல்லக் கேட்டு, அதைப்புரிந்துகொள்ளும் வன்மை, கூரிய அறிவுடையவர்களுக்குத்தான் சாத்யமாகலாமென்பது பொதுவான கருத்து. அத்தகைய புத்தி கூர்மை உன்னிடம் நிரம்பியிருக்கும் பக்ஷத்தில் மிக்கச்சந்தோஷமே.

சி— நான் கேட்ட விஷயங்களை எடுத்துகொள்ளலாமல்லவா?

கு:— விஷயங்கள் ஒவ்வொன்றாய் ஆராய்ந்து முடிவுகொள்வோம். அதற்கிடையில் ஒரு முக்கியமான கருத்தையறிந்து கொள்வதவசியம்.

சி:— அது என்ன?

கு:— கீதையில் பகவான், கிருஷ்ண பரமாத்மா, அர்ஜுனனுக்கு எடுத்துரைக்கும் போதனைகளில், அது முக்கியமாக வற்புறுத்தப்படும் கடமைகளும் ஈஸ்வர சிந்தனையை பற்றியதாகும்.

சி:— அதை இங்கு ஞாபகப்படுத்திக்கொள்ள வேண்டிய அவசியமென்னவோ?

கு:— நீ கேட்டுள்ள வினாக்களும் அதற்களிக்கப்படும் விடைகளும் ஈஸ்வர சங்கல்பத்தையும். அவன் சம்மந்தத்தையும் பிணைத்துக்கொண்டுதான் வரும். ஆகவே அதை

ஆரம்பத்திலேயே சூஜனையாக காட்டிவிட்டால், பின்னர் உண்மை விஷயங்களை யெடுத்துக்கொண்டு ஆராய்ந்து அறிந்துகொள்ள எளிதாகிவிடும்.

சி:— இதன் கருத்து எனக்கு விளங்கவில்லையே.

கு:— நன்றாய் கேள், எப்பொழுதெல்லாம், உலகில் ஈஸ்வர சிந்தனையும், தெய்வ பக்தியும் குன்றி மனிதனால் இயற்றப்படும் சட்ட திட்டங்களும், காரியங்களும் ப்ரதானமாய்க் கருதி, ஓங்கி வளர்கின்றதோ, அப்பொழுதெல்லாம் ஈஸ்வரன் மனித சமூகத்தினிடமிருந்து தனித்தவனாய் விடுகின்றான். அவன் உதவியும், அருளும் மனிதனுக்கு கிட்டுவதில்லை. அப்படி அவனிச்சையில்லாமல், செயல்படும் எந்தக்காரியங்களும் நற்பயனை யளிக்காது. அதுமட்டிலுமல்ல; அதை சகலரும் நன்றாய் உணரும்பொருட்டு தீயசக்திகளுக்கே அதிக ஊக்கமளித்து விடப்படுகின்றது. தீய சக்தியே ஆதிக்கம் கொள்ளும் காலத்தில் தர்மம் குன்றி நீதியும் நேர்மையுமற்ற செயல்கள்தான், எங்கும் தாண்டவமாடும். அதுவே சுபிக்ஷமற்ற வாழ்வின் அறிகுறியாகும். அதைக் கண்டு நல்லோர்கள் மிகவும் வருந்தி ஈஸ்வரனை உள்ளன்புடன் பிரார்த்திக்கும் பொழுது, அதற்கேற்றபடியே பகவான் மறைமுகமாய்த் தோன்றி தீய சக்திகளை யழித்து, உண்மை தர்மத்தை நிலைநாட்டுகின்றார் என்பதேயாகும். இனி கேட்டவைகளை ஆராய்ந்தறிவோம்.

சி;— தாங்கள் கூறும் பன்மைப் பொருளின் கருத்தென்ன? இங்கிருக்கும் நம் இருவரில் என்னைவிட தங்களுக்கு எதிலும் சந்தேகமெழக் காரணமில்லையென்றும், மேலும் அவைகளை விளக்கும் ஆற்றல் தங்களுக்குத் தான் அதிகமாயிருக்குமென்றும் நினைத்தேன், ஆனால் இப்பொழுது எனக்கேற்படும் சந்தேகம் தங்களுக்கு உண்டோவெனத் தோன்றுகின்றதே.

கு:— அதை யெப்படி தீர்மானித்துக்கொண்டாய்?

சி:— என்னுடன் தங்களையும் சேர்த்து கூறுவதாகப்படுவதினால்தான்.

கு:— எதையுமெடுத்துச் சொல்பவன் ஒருவனாயிருந்தாலும் அது பலருடைய செவிகளில் புகுந்து ஒவ்வொன்றையும் நன்றாய் சிந்திக்கச்செய்யும். அது மட்டிலுமல்ல, எந்த ஒரு சத் விஷயத்தையும் சகலருக்கும் பொருத்தமாயுள்ள வகையில்தான் எடுத்துக் கூறவேண்டும். ஏனென்றால் நன்மை பயக்கும் எதுவுமே ஒரு குறிப்பிட்டவருக்குத் தான் பொருந்துமென்றோ அல்லது சொந்தமென்றோ கூறுவதற்கில்லை. நிற்க, மனித பிறவியை பொருத்த மட்டிலும், சகலரும் ஒரே அமைப்பைக்கொண்ட ஒரு இனத்தவர் தானே, அப்படியிருக்க ஒருவருக்குதிக்கும் சந்தேக எண்ணங்கள் மற்றவருக்கு உதிப்பதும் சகஜந் தானே, அதையொட்டித் தான் பொதுப்படையாகவே எடுத்துரைக்கப்படுகின்றது. இதுவும் தவிர ஒரு மனிதன் எவ்வளவுதான் கற்றறிந்தவனாயிருந்தாலும்

அல்லது திருஷ்டியுடையவனாயிருந்தாலும், சில நுணுக்கமான விஷயங்களையெடுத்து ஆராயும்பொழுது அதன் உண்மைப் பொருள் விளங்காமல், சில சந்தேகங்கள் ஏற்பட்டுவிட ஹேதுவுமுண்டு என்பது மறுக்க முடியாதவை.

சி:— அதற்குக் காரணம்?

கு:— மற்றெதையும் கூறுவதைக் காட்டிலும் ஈஸ்வரன் ஒருவனைத்தான் அதற்குரிய காரண வஸ்துவாய் கொள்ள முடியும், எப்படியெனில் அவனிடமிருந்து தோன்றி மறையும் மாய்கை சக்தியே, எதிலுமுள்ள சூக்ஷ்ம ரஹஸியத்தை புத்திக்கெட்டாதவாறு திரையிட்டு மறைத்துக்கொள்ளுகின்றது. எதையும் பலருக்கு உபயோகப்படும் வகையில் போதிப்பதாயிருந்தாலும் அதை ஒரு தனி மனிதனை வ்யாஜமாய் வைத்துக் கொண்டுதான் செய்யமுடியுமென்பதையுணரவேண்டும். அதை சகலருக்கும் உணர்த்துவதின் பொருட்டே, கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் ஏற்பட்ட சம்வாதத்தை கீதா சாரமாக குறிப்பிட்டிருக்கிறது.

சி:— நான் தங்களைக்கேட்ட விஷயங்களும், அதற்கு தாங்கள் பதிலளிப்பதும் ஒன்றிற்கொன்று சம்மந்தமற்றதாயிருக்கின்றனவே.

கு:— அதெப்படி நிச்சயமாய்ச் சொல்லமுடியும். அவ்விஷயங்கள் ஒன்றையுமே இன்னும் சிந்தனைக் கெடுத்துக் கொள்ளவில்லையே.

சி:— இனியவைகளை யெடுத்தாராயலாமல்லவா?

கு:— அதற்கு ஏன், இவ்வளவு அவசரப்படுகின்றாய்?

சி:— தங்களிடம் எதை யுத்தேசித்து நாடிவந்தேனோ அவைகளைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்ற ஆர்வத்தினால் தான் அவசரப்பட்டேன்.

கு:— ஆர்வம் அதிகமாயிருப்பது மெச்சத் தகுந்தது. ஆனால் முதலில் எதிலுமுள்ள ஆசை, சிறுகச் சிறுக குறைந்து அதில் அலக்ஷியமுமேற்பட்டு கடைசியில், தெரிந்து கொண்ட விஷயங்களையே மறந்து விடுவதும் மனிதனுடைய இயற்கை ஸ்வபாவம். அம்முறையில் நடந்து கொள்ளக் கூடாதென்பதற்குத் தான் எதையும் எடுத்து விளக்காமலிருந்தேன். இனி விஷயங்களைக் கவனிப்போம் ஆரம்பத்தில் கேட்ட வற்றில் ப்ரபு என்று சொல்லிய உன் கருத்து யாரைப்பற்றி குறிப்பிட்டது?

சி:— உலகில் செல்வம் படைத்துள்ளவர்களை ப்ரபுக்களென்றும், அவர்களால் செய்யப்படும் காரியங்களை ப்ரபுத்வம் நிறைந்ததாகவும் சகலரும் கூறுகின்றனரே அதுதான் உண்மையா?

கு:— நடைமுறை யுலகை பொருத்தமட்டிலும் அது உண்மையாகவுமிருக்கலாம், மற்றவர்களைக் காட்டிலும் செல்வம் படைத்தவர்கள் உயர்வானவர்கள் என்று கருதப்படுவதினால் ப்ரபுக்கள் என்று கூறிக்கொள்ளலாம். அல்லது கூறப்படலாம். ஆனால் அவர்களுடைய செயல்களைப்

ப்ரபுத்வமென்று திட்டமாய்க் கூறமுடியாது. ஏனென்ருல் பொருள் படைத்திருந்தாலும் கூட அவர்களும் மற்றய மனித சுபாவத்தை யொட்டியவர்கள்தானே. அப்படியிருக்க செயலைபற்றி உயர்வென்றும் தாழ்வென்றும் எப்படி நிர்ணயிக்கமுடியும்? இது ஒருபுறமிருக்கட்டும். உண்மை ப்ரபுக்கள் யாரென்றும் எத்தன்மை கொண்ட செயல்கள் ப்ரபுத்வமென்றும் நம் புத்திக்கு எட்டாமையினுல், அப்படி நினைத்துவிடுகின்ரோம்.

எதற்கும் அடிப்படைக் காரண வஸ்து ஒன்று இருப்பதை நாம் சிந்திக்கமாட்டாமல், நடைமுறை உலகை யொட்டிய விஷயத்தை மட்டிலும், கவனத்தில் வைத்துக்கொண்டு விடுகின்ரோம். அதனுல் நமக்கு முன்னுல் தோன்றுகின்ற விஷயத்திற்கு அதீதமாயுள்ள மற்றெதுவும் புலப்படுவதில்லை.

சி:— தாங்கள் கூறுவது எனக்கு விளங்கவில்லையே; நம் கண்முன்னுல் பார்க்கும் சகலரும் என்னையொத்த அபிப்பிராயத்தைத் தானே கொண்டுள்ளார்கள்.

கு:— அப்படி நினைப்பது சரியல்ல, உலக பழக்க வழக்கங்களை மட்டிலும் கொண்டு இதுதான் நிச்சயமென்ருே, ஸ்திரமென்ருே, அவரவர்களுக்கு தோன்றிய வகையில் முடிவு கொண்டு நிர்ணயித்துவிடலாகாது. ஏனெனில், உலகில் தொன்றுதொட்டு வந்த பழமை நீங்கி புதுமை புகுத்தப்பட்டு வருகின்றது, அதற்கேற்ற கொள்கைகளும், திட்டங்களும், உருவாக்கப்படுகின்றன. அதையொட்டிய

செயல்களும் நடைபெற்று வருவதும் இயற்கைதானே. ஆனால் இதை மட்டிலும் ஆதாரமாய் வைத்து எதையும் நமக்குச் சாதகமானதாய் கருதி திட்டமிடும் பக்ஷத்தில் உண்மையில் எதை தெரிந்துகொள்ள வேண்டுமோ அவையனைத்தையும் மறந்து நம்மை நாமே ஏமாற்றிக் கொண்டதாகிவிடும்.

சி:– இதன் உண்மை விஷயமெதுவோ ?

கு:– சகல ஜகத், ஸ்ருஷ்டி, ஸ்திதி ஸம்ஹாரம் போன்ற தொழில்களை தன் இச்சாமாத்திரத்தில் சாதிக்கும் வலி மையை எவன் பெற்றுள்ளானோ அவன் ஒருவன் தான் உண்மையில் ப்ரபு என்றுக் கூறத்தக்கவன். அவனுடைய லீலாவினோத செயல்களையே ப்ரபுத்வம் நிறைந்தவை களாய்க் கொள்ள முடியும்.

சி:– அப்படியானால் மனித சமூகத்தில் உயர்வென்று கருது கின்றவர்களையும், சமுதாயத்திற்கு தாங்களே யஜமானர் களாய் நினைத்துக் கொண்டிருப்பவர்களையும், இகத்தில் சகல சுகபோக வாழ்விற்கு, தாங்கள்தான் உரிமை யாளர்கள் என்று நினைத்துக் கொண்டிருப்பவர்களையும், ப்ரபுக்களாய் கருதலாகாதா ?

கு:– அப்படி கருதப்படுமேயானால் அவரவர்களின் புத்தியின் ப்ரகாச குறைவேயன்றி வேறெதுவும் கூற இயலாது.

சி:– இது எனக்கு புரிய வில்லையோ.

கு:– முதலில் கூறும் எவ்விஷயத்தையும் புரிந்துகொள்ள முடியாவிட்டாலும், அதைப்பற்றி தீர யோசித்த பின்னால் தானகவே விளங்கிவிடும். நிற்க, கடவுளின் தன்மைக்கும் இதுவரையில் பிரபுக்களாய் திகழ்கின்றவர்களுக்கு முள்ள வெளிப்படையான தொடர்பை பற்றி சிந்தித்தலே நலம். அவர்கள் அவயளிக்கும் சகல வஸதிகளேயும், மற்றும் அநேக தோற்றங்களேயும் உற்பத்தி செய்து, அதை உலகெங்கும் அவரவர்களின் தரத்திற்கேற்றபடி பகிர்ந்தளித்து திரும்பவும் அது நம்மிடையே நிலேத்திருமல் கண்முன்னின்று மறைத்து ஆட்டுவிக்கின்ருனே அவன் தான் சாக்ஷாத் பரமேஸ்வரனென்ற ப்ரபு.

சி:– ஸ்வாமி தாங்கள் கூறுவதிலிருந்து, சகலவற்றிற்கும் அதிபதியாய் விளங்குபவன், ஈஸ்வரன் ஒருவன் தான் என்பதை தெரிந்தும், மறந்தல்லவா இருக்கின்ருேம்.

கு:– ஆம் அப்படித்தான் சொல்லவேண்டும். நாம் மட்டிலும் மறந்துவிடவில்லே. அவனே உலகில் தோன்றும் தீய சக்திகளேக்கண்டு, நம்மிடமிருந்து மறைக்கப்பட்டிருக்கின்ருன் என்றும் கூறலாம்.

சி:– நாம் அவனேக் காண முடியாதா ?

கு:– முடியும் அல்லது முடியாதென்று திட்டமாய் கூறுவதற்கில்லே. நிற்க, மற்ற விஷயங்களே நன்ருய் தெரிந்துகொண்ட பின்னர் தான் அதை யோசிக்க வேண்டும். அதற்குள் அவசரமேன் ?

சி:— மற்ற விஷயங்களெதுவோ?

கு:— காம, க்ரோத, மத, மாச்சர்யங்களை பற்றியது.

சி:— ஆம், அதைக்கேட்க மறந்து விட்டேன்.

கு:— இப்பொழுதாவது, மனிதனுக்கு தன் மனதில் எதையும் ஸ்திரமாய் வைத்துக்கொள்ள முடியாதென்பதை தெரிந்து கொண்டாயா?

சி:— ஆம் ஸ்வாமி.

கு:— சகலவற்றையும் மனதில் வைத்துக்கொள்ள முடியுமென்று சொன்னுயே?

சி:— அது என் அறியாமையினுல் தான்.

கு:— கேட்ட விஷயங்கள் எல்லாவற்றையும் தெரிந்துகொண்டு விட்டாயா?

சி:— ஒன்றும் தெரிந்து கொள்ளவில்லை. என் அறியாமைக்கு மன்னித்து. என் சந்தேகங்களை தெளியவைக்க கேட்டுக் கொள்ளுகிறேன்.

கு:— அறியாத்தன்மை யென்பது உனக்கு மட்டினுமல்ல, உலகில் உள்ள சகலருக்கும், அத்தன்மை குடிகொண்டுள்ளது, என்பது பொதுப்படை. அதற்கு வருந்துவதை விட அதை நம்மை விட்டு அகற்றுவதற்கு முயல்வதுதான் அவசியம். போகட்டும், இனியாவது கூறுவதை நன்ருய் மனதில் பதிய வைத்துக்கொள்.

நீ கேட்டுள்ள, ஒவ்வொரு விஷயமும் மனிதன் மண்ணில் பிறந்து, வாழ்ந்து, மடியும் மட்டிலும் .அவனை விட்டக லாமல் கவ்விக்கொண்டுள்ளதாகும். அதில் ஒன்றைக் குறித்துச் சொல்லும் பொழுது மற்றவைகள் மறந்து விடுவதுமுண்டு, ஆனல் எடுத்துக்கொண்டு ஆராயும் எவ் விஷயத்தையும் ஊன்றி கவனித்தால் மறதியென்பது தானகவே யகன்றுவிடும்.

சி:– அடுத்தபடியாக காமம் என்பதை பற்றி கொஞ்சம் எடுத் துரைக்க கோருகின்றேன்.

கு:– ஆம், அதையே அவசியம் தெரிந்துகொள்ள வேண்டும். அதைப்பற்றி என்ன அபிப்ராயம் கொண்டுள்ளாய்?

சி:– சகலரும் சுகமென்று கருதி, நாடி விரும்பும் சிற்றின்ப வேட்கையைத்தான் காமமென்று நினைத்துக்கொண் டிருக்கின்றேன், அதுதான் உண்மையா ?

கு:– அப்படி நினைக்கக் காரணம் ?

சி:– மானிட வர்க்கத்தினற்கேற்படும் தன்னையறியாத ஒரு உணர்ச்சி எனக்கு ஏற்படுவதினலும் அப்பொழுது மனதிற்கு எல்லையற்ற இன்பமளிப்பதினலும் அப்படிச் சொன்னேன்.

கு:– உணர்ச்சியென்ருயே, அதை எத்தனை நேரம் அனுபவிக் கின்ருய் ?

சி:– அதை திட்டமாய்ச் சொல்ல முடியவில்லையே.

கு:— ஏன் அப்படி?

சி:— எப்பொழுதெல்லாம் சிற்றின்பத்தைப்பற்றி மனதினுல் நினைக்கின்றேனே அப்பொழுதெல்லாம் அவ்வுணர்வேற் படுகின்றது. அதற்கு காலமோ, நேரமோ அல்லது தன்மையோ எதையும் என்னுல் கூறமுடியவில்லை.

கு:— அது எப்பொழுதும் உன் சரீரத்துடன் தங்கியிருப்ப தாய்க் கொள்ளமுடியுமா?

சி:— அப்படியும் சொல்வதற்கில்லை, அவ்வப்பொழுது தோன்றி மறைந்துவிடுகின்றது.

கு:— அப்படியிருக்க அதையேன் இன்ப உணர்ச்சியென்ருய்?

சி:— எனக்கு அது பற்றி ஒன்றுமே தெரியாததினுலும், அதையே என் மனம் விரும்புகிறதினுலும்தான் அப்படிக் கூறத் தோன்றியது.

கு:— இதை நன்ருய் ஆராய்ந்து பார்த்தாயா அல்லது மற்ற வர்கள் கூறுவதை கேட்டுக்கொண்டு சொல்லுகின்ருயா?

சி:— இவ்விஷயத்தை மட்டிலும் பிறரை யொத்துச் சொல்ல முடியாதென்றே நினைக்கின்றேன். தவிர உணர்ச்சி யென்பது அவரவர்களின் சரீரத்தின் அனுபவத்தின் முடிவைக்கொண்டுதான் நிர்ணயிக்கப் படுவதாயும் நினைக்கின்றேன்.

கு:— உன் அபிப்ராயத்தைப் போலவே மற்றவர்களுக்கிருக்கு மென்று நம்புகின்ருயா?

சி:— எல்லாவற்றிலும் ஒத்திருக்குமென்று நம்பவில்லை. ஆனால் ஒரு சிலவற்றில் மட்டிலும் ஒத்திருக்கலாமென உத்தேசமேயன்றி, நிச்சயித்துக்கூறவில்லை. ஆகவே காமமென்பதின் உண்மைப் பொருளை தெரிந்துகொள்ள விரும்புகின்றேன்.

கு:— நல்லது, காமமென்பதின் ஒரே பொருள் மனித வர்க்கம் சகலருக்கும் ஒரு பொருளின் மீது ஏற்படும் இச்சை அல்லது ஆசை யென்பதேயாகும். அதையே பெரும்பாலோர் சிற்றின்ப உணர்ச்சி யென்றும் கருதலாம். அதை நன்றாய் சிந்திக்குமளவில், ஆசைதான் காமத்தின் இருப்பிடமென்பது விளங்கும். ஒரு மனிதன் ஒரு பொருளை யடைய வேண்டுமென்று மனதில் விருப்பம் கொள்ளுகின்றான். அவ்விருப்பமே உணர்ச்சியாக மாறி விடுகின்றது.

சி:— ஸ்வாமி நான் கொண்ட அபிப்பிராயத்திற்கும், தாங்கள் கூறும் கருத்திற்கும், வித்தியாச மிருப்பதாய் தெரிகின்றனவே.

கு:— முதலில் அப்படி தோன்றினாலும், முடிவில் முறண் பட்டதல்லவென்பது நன்றாய் விளங்கும். ஆனால், அறிவை சற்று விசாலமாய் உபயோகித்து ஆராய வேண்டும். நிற்க, எது ஒன்றையும் பிறரிடமிருந்துதான் தெரிந்துகொள்ள வேண்டுமென்ற முடிவான எண்ண மிருக்கும்பொழுது தனக்கென்று ஒரு தனியான கருத்தை மனதில் வைத்துக்கொண்டு கேட்டால், அதன்

முடிவு சந்தேகத்தில்தான் கொண்டுபோய் விட்டுவிடும். தனக்குத் தெரியாத ஒன்றை தெரிந்து கொள்ள ஆர்வ மிகுந்த எவரும் தனக்கென்ற தனி அபிப்ராயத்தைக் கொள்ளலாகாது.

சி:— தாங்கள் கூறுகின்றபடி காமமே ஆசை யென்றாலும் அது ஏற்படக் காரண மென்ன?

கு:— மனிதன் உலகில் வாழும் வரையில் தன் முன்னால் காணும் சகலமும் உண்மையென்றும் ஸ்திரமாய் நிலைத் திருக்குமென்றும் நம்பி, எல்லாவற்றையும் அனுபவிக்க வேண்டுமென்ற எண்ணம் எவரையும் கேட்டுக்கொண்டு உதயமாவதாய் கூறுவதற்கில்லை. இதை முற்றிலும் அறிவதென்றால், பரமேஸ்வரனின் தத்துவ ரகஸியங் களைக் கொண்டுதான் நிர்ணயித்துக் கொள்ள முடியும்.

சி:— அப்படியானால் கடவுளின் குண விசேஷங்களின் லக்ஷ ணம் என்னவோ?

கு:— என் ஒன்றை விட்டு ஒன்றைக் கேட்டுக்கொண்டிருக் கின்றாய்? எதையும் சற்று நிதானமாய் அறிய வேண்டும். நிற்க, கடவுளைப்பற்றி தெரிந்துகொள்வதற்கு முன்னர் அதற்கு அநுசரணையாயிருக்கும் மற்ற விஷயங்களைத் தெரிந்து கொண்டு விட்டால் உண்மை விஷயம் புலப் படும். பின்னால் தொடர்ந்துவரும் விஷயங்களிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

சி:— குரோதம் என்பதின் பொருளென்னவோ?

கு:— அதில் உனக்குத் தோன்றும் சந்தேகமெதுவோ?

சி:— காமத்திற்கும் (ஆசைக்கும்) க்ரோதத்திற்கும் நெருங்கிய சம்மந்தமுண்டா?

கு:— அவ்விரண்டும் ஒன்றைவிட்டொன்று பிரியா நண்பர்களென்றே கூறலாம்.

சி:- அதெப்படி?

கு:— எங்கெல்லாம் ஒன்றையடைய வேண்டுமென்ற அவா ஏற்படுகின்றதோ, அங்கெல்லாம் குரோத குணமும், ஒருவரைக் கேளாமலே தானகவே முன் வந்து நிற்கும்.

சி:— அவ்விரண்டு குணங்களும் மனிதனிடம் எப்படி வியாபிக்கின்றது, அதன் லக்ஷணமென்ன?

கு:— அதில் கவனம் செலுத்தி ஆராயப்புகுவதைவிட விட்டு விடுவதே நலம். அதனுல் அடையப்போகும் உபயோகமான விஷயமொன்றுமில்லை.

சி:— ஏன்? தெரிந்துகொண்டால் என்ன? அதற்கே மனதில் இடந்தந்து விடுவேனென்ற சந்தேகமா?

கு:— நீ சொல்வதைப்போல் எந்த சந்தேகமுமில்லை. எந்த விஷயங்களைத்தெரிந்துகொண்டு, அமைதியான வாழ்வை பின் பற்ற வேண்டுமென்று விரும்புகின்ருயோ, அதற்கு இடையூருகவுள்ளவற்றை சிந்திக்கச் செய்யலாகாதென்பதினுல்தான் அவ்விதம் கூறினேன்.

சி:— தாங்கள் கூறுவது எனக்கு விந்தையாகவே இருக்கின் றது. இதற்கு முன்னால் ஒவ்வொன்றையும் நன்றாய் ஆராய்ந்த பின்னர்தான் மனம் தெளிவடையுமென்றீர் கள். இப்பொழுது ஒரு சிலவற்றை சிந்திக்க வேண்டா மென்பதின் நோக்க மென்ன ?

கு:— ஆம், அது உண்மைதான். ஏனெனில் சிலவற்றை வெளிப்படையாகவும், சிலவற்றை மறைமுகமாயும் விளக்குகின்றேன். பொதுவாய் மனிதன் மேன்மை யடைய விரும்பினால், கூடுமான வரையில் நல்ல விஷயங் களை மட்டிலும் எடுத்துக்கொண்டு, சிந்தித்தறிந்தாலே போதுமானதாகும். அதுதான் நற்பயனை யடைய வழி காட்டும்.

சி:— நன்மை, தீமை, இவ்விரண்டையும் நன்றாய் தெரிந்து கொண்டு அவற்றிலுள்ள குண தோஷங்களை யகற்றி நல்லனவற்றை மட்டிலும் கைக்கொள்ளலாகாதா ?

கு:— அதுவும் சரிதான். ஆனால் இரண்டையும் எடுத்துக் கொண்டு சிந்திக்கும் பொழுது நன்மையை விட தீய விஷயங்களைத்தான் அதிகமாய் நினைக்கச் செய்யும். தவிர எது ஒன்றும் மனதில் ஊன்றிவிட்டால் அதை அகற்றி விடுவது அவ்வளவு சுலபத்தில் முடியாது. இது மனிதனுக்கேற்பட்ட இயற்கை சுபாவம். நிற்க, தேவை யற்ற ஒன்றை மனதில் புகுத்திக்கொண்டு அதைத் தெரிந்துகொள்ள வீண் காலத்தையும் நேரத்தையும் விரயம் செய்வானேன்; பிறகு அதை நீக்குவதற்கு அதிக முயற்சி எடுத்துக்கொள்வானேன்? என்பதை

ஊன்றிக் கவனிக்கவேண்டும். அப்படியே நன்மை, தீமை இவ்விரண்டையும் எடுத்துக்கொண்டாலும் பின்னர் அது தீயதாய் இருக்கும் பக்ஷத்தில் மனதைவிட்டு அகற்றுவதற்குண்டான திடத்தன்மை வேண்டும்.

சி:— அப்படியானால் அதைத் தெரிந்துகொள்வதுதான் எப்படி ?

கு:— தீய விஷயங்களைப்பற்றிக் கூறுவதற்கு அதிக ஆராய்ச்சியோ, அல்லது புத்திக் கூர்மையோ எதுவும் தேவையில்லை. சாதாரண நடைமுறை உலகப் பழக்க வழக்கங்களை கண்ணினால் பார்த்தாலே தெரிந்து கொள்ளலாம்.

சி:— அஃதிருக்கட்டும், நன்மை தீமை யென்ற குணங்களுக்கும் குரோத புத்தியின் தன்மைக்கும் உள்ள சம்பந்தத்தையாவது தெரிந்துகொள்ளலாமல்லவா ?

கு:— ஆம், அவசியம் தெரிந்துகொள்ளத்தான் வேண்டும். சொல்கின்றேன் கேள். ஒரு மனிதன் ஒரு பொருளை கண்ணினால் கண்டவுடன் அவனுடைய மனமானது அதை அடைய வேண்டுமென்ற இச்சையுடன் அப்பொருளைக் கவ்விக்கொள்கின்றது. அவன் காரிய விசேஷத்தினாலோ, (அல்லது ஜென்மாந்திர வினைப் பயனினாலோ), தான் ஆசை கொண்டு அடைய விரும்பிய காரியம் கைகூடாவிட்டால் அதற்கென்ற உண்மைக் காரணத்தைத் தெரிந்து கொள்ளாது, வேறு எந்த தீய வழிகளைக் கடைப்பிடித்தேனும் தான் நினைத்தவற்றைச் சாதிக்க வேண்டுமென்ற எண்ணமும் மனோ எழுச்சி

யும் கொள்கின்றான். (அதாவது தனக்கு ஏற்பட்ட தோல்வியை சகிக்க மாட்டாதவனாகின்றான்). தன் எண்ணத்தைப் பிறரிடம் தெரிவிக்கும் பொழுது அவனது மனோவேகமும், ஆத்திரத்தன்மையும் என்ன வென்பது வெளிப்படையாகப் புலப்பட்டு விடுகின்றது. அத்தகைய செயல்களுக்கு ஊக்கமளிக்கும் சக்திதான், குரோதமென்ற குணத்தின் லக்ஷணம்.

சி:— காமம், குரோதம் இவ்விரண்டு குணங்களிடத்தினும் நன்மைக்கு இடமில்லையா?

கு:— தீமைக்கே உரியதும், இருப்பிடமானதுமான, ஒரு குறிப்பிட்ட வஸ்துவினிடம் நன்மை யென்று சொல்லக் கூடிய எந்த விஷயத்தையும் எப்படிக் காண முடியும்? நிச்சயமாய் முடியாதென்றே கூறலாம்.

சி:— ஸ்வாமி, இவ்விரண்டு குணங்களுடைய மனிதனின் லக்ஷணம் என்ன? அதை எப்படி நடை முறையில் காண்பிக்கிறான்?

கு:— இதை யெல்லாம் மனிதனைப் பார்த்த மாத்திரத்தில், திடீரென்று எதையும் நிர்ணயம் செய்து கூறிவிட முடியாது. ஒவ்வொருவரின் நடைமுறைச் செயல்களிலிருந்துதான் தெரிந்து கொள்ள வேண்டும் ஒன்றை மட்டிலும் ஓரளவு நிச்சயமாய்க் கூறலாம்.

சி:— அதென்னவோ?

கு:— தன் காரிய முயற்சியின் தோல்வியினால் ஏற்படும், க்ரோதம் வெளிப்படும் பொழுது கோபமாக மாறி விடுகின்றது. (அறிவு மழுங்கிவிடுகின்றது). அதன் பயனாய், தான் எதைச் செய்கின்றான் என்பதை அறியா மலேயே அநேக விபரீத செயல்களைப் புரிய தூண்டி விடப்பட்டு விடுகின்றான்.

சி:— அப்படி ஏற்படும் எண்ணத்தை அகற்ற முடியாதோ?

கு:— முடியும், முடியாதென்று சொல்வதிற்கில்லை. ஏனென்றால் அதற்கு ரொம்பவும் சகிப்புத் தன்மையும் ஸாதனை வலிமையும் வேண்டும். நிற்க எது ஒன்றையும் தீர ஆலோசியாமல், ஒன்றை அடைய வேண்டுமென்ற இச்சைக்கு இடந்தரலாகாது. அதுவும் தவிர நம்முடைய முயற்சியினால் கிடைக்காத ஒன்றிற்கு, மனதில் கிலேசமோ, அல்லது அதிக ஆர்வமோ கொள்ளக்கூடாது என்பதுதான் பொதுவாய் உள்ள முறை. அந்தக் கிலேசத்தின் முடிவுதான் முதலில் குரோதமாயும், பின்னர் கோபமாயும் மாறிவிடுகின்றது, அதை மனதிலிருந்து அகற்ற வேண்டுமேயானால், நீண்ட நாளைய ஸாதனைக்குப் பின்னர்தான் அனுபவத்திற்குக் கொண்டுவர முடியும்.

சி:— ஸ்வாமி, இதற்கடுத்த படியாகவுள்ள லோபத் தன்மையைக் கொஞ்சம் எடுத்துக் கூறுங்கள்.

கு:— லோபமென்பது எதையும் பிறருக்கு ஈயாமை (அல்லது கொடுக்காமை) என்பதே பொதுப்படையான கருத்

தாகும். இக்குணம் படைத்த மனிதனைத்தான் லோபி என்றும் கூறுவதுண்டு.

சி:— இவன் லக்ஷணமென்னவோ?

கு:— எவன் ஒருவன் தன்னிடம் தேவைக்கு அதிகமான தனங்கள் குவிந்திருந்தும் (செல்வம்) அதைப்பிறருக்கு ஈயாமல் (ஆண்டவனால் தரித்திரர்களாய்—வறுமை நிறைந்தவர்களாய் படைப்பிக்கப்பட்டுள்ள மற்றய எளியவர்களுக்கு) கொடுத்துதவாமலும் தன் செல்வத்தைக் கொண்டு தானும் அனுபவிக்காமலும், தன் திரண்ட பொருளைக் கண்டு மகிழ்ந்து கொண்டிருக்கின்றானோ அவனே லோபியாவான்.

சி:— ஸ்வாமி, உலகில் ஒருவரை ஒருவர் தர்மிஷ்டர்களென்று சொல்லிக்கொண்டிருக்கின்றார்களே அதன் உண்மையென்ன ?

கு:— ஆம்: பல கோடி மக்கள் வாழும் மண்ணுலகில் ஏதோ ஒரு சிலர் வேண்டுமானால், தர்மிஷ்டர்களென்று பெயர் பெற்றிருக்கலாம். அதுவும் ஓரளவிற்குத்தானே யன்றி பெரும்பாலோர் அப்படி யிருக்க மாட்டார்கள்.

சி:— பொருள் படைத்தவர்களிடம் யார் போய், எது கேட்டாலும் கொடுத்துவிட வேண்டும் என்பதுதான் தங்கள் அபிப்ராயமா ?

கு:— அன்பனே! என் கருத்து அதுவல்ல. தனக்கு சர்வேஸ்வரனால் அளிக்கப்பட்ட தனத்தை தோன்றிய வகையில்

செலவிடுவது தவறுதான். அதை தர்மமென்று சொல்வதும் பொருந்ாது. எந்த தர்மம் செய்ய வேண்டுமானாலும் அதன் தரத்தை நன்றாய் யோசித்து, தேவைக்கு அதிகமாகவுள்ள வற்றில் ஒரு பகுதியை பொதுவாயுள்ள நல்ல காரியங்களுக்கும், ஒரு பகுதியை எளியவர்களுக்கும் கொடுத்துதவ வேண்டுமென்பதே விதி முறையாகும்.

சி:- எளியவர்களுக்கு தர்மம் செய்வதென்றால் அவர்களுடைய பசியறிந்து உணவு அளிக்க வேண்டுமென்பது தானே?

கு:- உணவிற்குக் கூட இல்லாதவர்களுக்கு உதவ வேண்டிய தவசியம்தான், என்றாலும் அதை மட்டிலும் குறிப்பாக ஒரு தர்மமென்று சொல்லிவிட முடியாது. ஏனென்றால் ஏதோ ஒரு ஏழைக்கு என்றோ, ஒரு நாள் ஒரு வேளைக்கு உணவளித்துவிட்டால் போதுமா? அது எப்படி தர்மமென்று சொல்வது? இதில் எந்த தர்மத்தை எப்படிச் செய்ய வேண்டுமென்று நிச்சயமாய் தெரிந்துகொள்ள வேண்டுமேயானால் தீர யோசித்துத் தான் அதைச் செய்ய முன் வரவேண்டும். எவர் தன் தேவைக்கு வேண்டியவற்றை தன்னால் தேடிக்கொள்ள சக்தியற்ற அங்க ஹீனர்களாய் இருக்கின்றார்களோ (தன் சரீர உழைப்பினால் சம்பாதித்துக்கொள்ள லாயக்கற்றவர்கள்) அவர்களுக்கு அதன் உண்மையறிந்து நிரந்தரமாய் எதுவும்—கிடைக்கும் வகையில் செய்வது தான் உண்மை தர்ம லக்ஷணம். அதை விட்டு தன் செல்வத்தினால் பிறர் தம்மைப் புகழ்வதற்கென்ற

எண்ணத்தை மறை முகமாய் வைத்துக்கொண்டு தானும் ஏதோ ஒரு தர்மத்தைச் செய்வதாய் மனதில் நினைத்துக்கொண்டு. உலகில் தோன்றிய வகையில் சோம்பித் திரியும் (தன் சரீர உழைப்பைக்கொண்டு சம்பாதித்துக்கொள்ள இஷ்டப்படாமல்) இருக்கும் ஒருவனுக்கோ. அல்லது ஒரு கூட்டத்தினருக்கோ செய்யும் எந்த உதவியும் தர்மத்துடன் சேர்ந்ததல்ல என்பதை உணர வேண்டும். இப்படிச் செய்வதினால் ஒவ்வொருவரின் உழைக்கும் தன்மையை அகற்றி தன் வாழ் நாள் பூராவும் பிறரை அண்டியே இரந்து பிழைப்பதற்கும், சோம்பித் திரிவதற்கும் தூண்டியவர்களாகி விடுகின்றார்கள். இப்படிச் செய்யும் தர்மத்தைவிட லோபத்தன்மையே பாதகமில்லை யென்ற நிலை ஏற்பட ஹேதுவாகிவிடும்.

சி:— ஸ்வாமி, தான் சேமித்த பொருளை பிறருக்குக் கொடுக்க மனமில்லாத காரணம்?

கு:— இதைக் கூடவா தெரிந்து கொள்ள முடியவில்லை? தன் பொருளைக்கொண்டு எப்பொழுதும் சுகத்தையே அனுபவித்துக் கொண்டிருக்கப் போவதாய் வீணில் நினைத்துக்கொண்டிருப்பதாகும்.

சி:— எளியவர்களுக்கு உதவ வேண்டுமென்பதில் ஒரு குறிப்பிட்ட சமூகத்தினருக்குத்தான் அது பொருந்து மென்று திட்டங்கள் ஏதேனும் உண்டா?

கு:— அப்படி இதற்கென்று எந்தத் திட்டமும் கிடையாது, தவிர ஆண்டவனுல் சிருஷ்டிக்கப்பட்டுள்ள சகலரும் தனவந்தர்களென்ருே, அல்லது சகல வசதிகளும் பெற்றவர்களென்ருே கூறுவதற்கில்லை. நிற்க, வறுமை யென்பது ஒருவருக்குண்டு ஒருவருக்கில்லை யென்பது இல்லை. ஆகவே வறுமையடைந்தவர்களில் பாகுபாடு களோ அல்லது வித்யாசமோ காண்பிக்க வேண்டு மென்ற அவசியமே யில்லை. தர்மமென்று ஒன்றைக் குறிப்பிடும் பொழுது அது சகலருக்கும் பொருந்து மென்பதேயாகும். நிற்க, செல்வந்தர்களென்றும் எளியவர்களென்றும், ஈசனுல் பிரிக்கப்படவில்லை என்ருலும் அவ்விதம் நினைத்துக்கொள்வது மனித சமூகத்தின் அறியாத்தன்மையன்றி வேறல்ல. அப்படியே இரு பிரிவாக இருந்தாலும், செல்வந்தர் களிடம் உள்ள பொருளானது எம்முறையில் செல விடப் படுகின்றது என்பதை பரீக்ஷிக்கும் பொருட்டே கூன், குருடு முதலிய அங்க ஹீனர்களை சிருஷ்டித்து அவர்கள் மூலமே உண்மை தர்மிஷ்டர்களின் தரத்தை ஈசன் அறிந்து கொள்கின்ருர்.

சி:— காம, க்ரோத, லோப இம்மூன்று குணங்களும் ஒன்றையொன்று பிணைக்கப் ட்டுள்ளது தானே?

கு:— அப்படிச் சொல்வதிற்கில்லை. ஏனெனில், இம்மூன்று குணங்களிலும் லோபத்திற்கும் மற்ற இரண்டு குணங் களுக்கும் வித்தியாசம் உண்டு. காமக்குரோத குணங் களைக் கொண்டவர்கள் தன்னுடன் பொருட் செல்வம்

இருப்பினும் சரியே, இல்லாவிட்டாலும் சரியே, எதையும் அடைய வேண்டுமென்ற இச்சைக்கு இடமளித்து, நினைத்த வற்றைப் பெறுவதற்கு எதுவும் செய்யத் துணிந்து விடலாம். நிற்க, லோபிகளின் விஷயம் அப்படியல்ல, எதையும் தன் கைப்பொருளைச் செல விட்டு அதை அடையவேண்டு மென்று நினைக்கமாட்டார்கள். அது மட்டிலுமல்ல, தங்களுக்கு நன்மை பயக்கும் காரிய மென்று தெரிந்தாலும் கூட பொருள் செலவில்லாமல் தங்களை வந்தடைந்தால் ஏற்றுக்கொள்வார்கள். அப்படிக்கில்லையேல் அதையும் விரும்பமாட்டார்கள். அவர்கள் விரும்புவது ஒன்றுதான் உண்டு. என்னவெனில், தன் பொருளை மதிப்பிட்டு பிறர் தங்களைப் பிரபுக்களென்று கருத வேண்டுமென்பதே யாகும்.

சி:— மதமாச்சரியங்களைப்பற்றிச் சிந்திக்கலாமா ?

கு:— ஆம், இவ்விரண்டு விஷயங்களும் ரொம்பவும் ஆராய வேண்டியதே.

சி:— மத மென்பது சாதாரணமாய் மனித சமூகத்திலுள்ள ஜாதிப் பிரிவினை தானே ?

கு.— இவ்விரண்டும் தனியானவை. ஜாதிப்பிரிவென்பது தொன்று தொட்டு வேத கால முதல் மக்கள் அவரவர்கள் செய்துவந்த தொழில்களைக் கொண்டு நிர்ணயிக்கப்பட்ட பிரிவினையாகும். மதம் என்பது எந்தத் தொழில்களைக் கொண்டும் நிர்ணயிக்கப்பட்டதல்ல.

சி:- அப்படியானால் அதன் விஷயம் என்ன?

கு:- மதம் என்பது தெய்வீகப் பண்பாடுகளைக் கொண்ட அடிப்படைக் கொள்கைகளை செயல் முறைகளில் அனுஷ்டித்து வரும் ஒவ்வொரு கூட்டத்தையும் தனித் தனி சமுதாயமாகப் பிரித்துக் காட்டப்பட்டுள்ளதே யாகும். மதம் என்பதற்கு வேறு ஒரு பொருளும் உண்டு. (தன்னை மீறிய கோபமும் ஏற்படும் பொழுது உண்டாகும் உணர்ச்சி வசப்பட்டு தான் என்ற அகந்தையும் கர்வமும் கொள்வதுமாகும்)

சி:- அதையும் சற்று அறிய விரும்புகின்றேன்.

கு:- அதைப்பற்றி இத்துடன் பின்னால் தொடர்ந்து வரும் விஷயங்களிலிருந்து தெரிந்து கொள்ளலாம், இப்பொழுது எடுத்துக்கொண்டுள்ளதைக் கவனிப்போம். ஒரு மதமென்று கூறும் பொழுது பல உட் பிரிவுகளையும் சமுதாயம் அல்லது ஜாதிகளையும், சீரிய வாழ்விற்கு வழிகாட்டிச் செல்லும் ஒரு துணைக்கருவியே யாகும்,

சி:- மதங்களிலும் பல் வேறு பிரிவுகளுண்டோ?

கு:- ஆம், பலவகை உண்டென்பது பூர்வகால சரித்திர வாயிலாகத் தெரிகின்றன.

சி:- அது எத்தனை வகை?

கு:- பாரத பூமியில் வழங்கிவரும் மதங்களில் ஹிந்து மதம், (2) கிரிஸ்துவ மதம் (3) இஸ்லாமிய மதம் (4) சீக்கிய

மதம் (5) பௌத்த மதம் இவ்வைந்தும்தான். அவைகளின் கொள்கைகள், நம் நாட்டிலும் பிற தேசத்திலும் அமுலில் உள்ளன. அவைகளில் அதி முக்கியமானதும் பிரதானமானதும் ஹிந்துமதமேயாகும்

சி:— இம் மதங்களெல்லாம் கடவுளால் உண்டாக்கப் பட்டவைகள் தானா?

கு:— ஈசனால்தான் உண்டாக்கப்பட்டவையென்று நிச்சயமாக கூற முடியாவிட்டாலும் தெய்வீக தர்மத்தை நன்கறிந்த பல பெரியோர்கள் தங்களால் அனுஷ்டிக்கப்பட்ட வழி முறைகளை வகுத்து அதையே பின்பற்றி வரும் சமுதாயத்தையே மதமென்றும் கூறலாம். ஆகவே, ஆதி காலம் தொட்டு பெரியோர்களால் நிர்மாணிக்கப்பட்டவைகள்தான் என்பது நிச்சயமாய்த் தெரியவரும்.

சி:— இது ஒவ்வொன்றின் உட் கருத்தையும் நன்றாய்த் தெரிந்து கொள்ள முடியுமா?

கு:— ஒவ்வொரு மதத்தையும் எடுத்துக்கொண்டு அதன் அடிப்படை உண்மைகளைத் தெரிந்துகொண்ட பின்னர் தான், ஒரு முடிவுக்கு வரவேண்டுமென்றால், இப்பொழுது நாம் எடுத்துள்ள மனிதப் பிறவியைப் போல பல பிறவிகள் எடுத்தால் கூட முற்றிலும் தெரிந்துகொள்ள முடியாதென்றுதான் கூறவேண்டும். ஏனென்றால், நமக்குக் கொடுக்கப்பட்டுள்ள ஆயுள்

காலமே ரொம்பவும் குறைவு, அதிலும் நம் வாழ் நாட்களில் பெரும் பகுதி வாழ்க்கை என்ற நாடகமாடுவதிலேயே கழிந்து விடுகின்றது. மிகுதி யிருக்கும் நாட்களும் மிக சொற்பமே யாகும். இப்படி யிருக்க, சகல மதங்களையும் பற்றி நாம் தெரிந்து கொள்வதெப்படி?

சி:— அப்படியானாலும் ஏதேனும் ஒன்றை ஓரளவு தெரிந்து கொள்ளலாமல்லவா?

கு:— அதையும் முற்றிலும் தெரிந்து கொள்ளலாமென்று சொல்வதற்கில்லை, எதுவும் ஆராய்ச்சியிலும் சந்தேகங்களிலும் காலம் செல்லுமே யானால் அதற்கு முடிவே ஏற்படாமல் போய்விடலாம். என்றாலும், அவரவர்களின் புத்திக்கெட்டிய மட்டில் ஒரு மதத்தின் உண்மைக் கோட் பாடுகளை நிச்சயம் தெரிந்து கொண்டால்தான் நலமென்று கூறலாம்.

சி:— ஸ்வாமி, மதத்தைப்பற்றி ஆராய்வதென்பது அவ்வளவு கடினமான விஷயமா?

கு:— ஆம். அப்படித்தான் சொல்ல வேண்டும். மதமென்பது மனிதனுடைய புத்திக்கு எட்டக்கூடிய அவ்வளவு சுலபமான விஷயமல்ல. அதி சூட்சமமான ஸர்வேஸ்வரனின் தத்துவ ரகஸ்யங்களின் இருப்பிடமான வேதங்களை அடிப்படையாகக் கொண்டதுதான் மதமென்று சொல்லப்படுவதின் உண்மைப் பொருள். அதை முற்றிலும் தெரிந்து கொள்வதென்றால் ஒரு

மனிதன் தன் வாழ் நாள் பூராவையும் அதற்கென்றே செலவிட்டாலும் ஒரு சில குறிப்பிட்ட விஷயங்களைத் தான் அறிய முடியும். ஆகவே நமக்குத் தேவையான ஒன்றை மட்டிலும் எடுத்துக்கொள்வோம்.

சி:– ஒன்றை மட்டிலும் எடுத்துக்கொண்டு மற்றவைகளை விட்டு விட்டால் அதன் உண்மை விஷயங்களை எப்படி தெரிந்து கொள்வது ?

கு:– நீ கூறுவது உண்மைதான். ஆனால் ஒன்றைத் தெரிந்து கொண்டுவிட்டால் மற்றதும் தானகவே விளங்கிவிடும்.

சி:– ஸ்வாமி, மதம் என்பதற்கு இரண்டு பொருள்கள் கூறப்பட்டதே, அதன் விஷய மென்ன ?

கு:– ஒன்று மனிதனின் குண விசேஷங்களை யொட்டியது. இப்பொழுது நாம் எடுத்துக்கொண்டுள்ளது கடவுளைப் பற்றியது. ஆகவே இதை மட்டிலும் தெரிந்துகொண்டால் அதுவும் தன்னல் தெளிவு பட்டுவிடும்.

சி:– பல்வேறு மதங்கள் ஏற்படக் காரணம் என்ன ?

கு:– எல்லோராலும் ஒரே கொள்கைகளையும் லக்ஷியத்தையும் பின் பற்றி நடத்திக்காட்ட முடியாமையினல் அவரவர்களுக்குகந்த முறையில் பின்பற்றிச் செல்ல எது சுலபமாய் முடியுமோ, அதையே தங்களுக்கேற்றதாய் நிர்மாணித்துக் கொண்டுள்ளார்கள்.

சி:– நம் மதத்தைப் பற்றிக் கொஞ்சம் விளக்கமாய்த் தெரிந்துகொள்ள ஆசைப்படுகின்றேன்.

கு:– நமது ஹிந்து மதம் சற்று விரிவாய்த் தெரிந்துகொள்ள வேண்டிய விஷயம்தான் என்றாலும், அதை முற்றிலும் தெரிந்துகொள்ள முடியுமா வென்பது என் சந்தேகம்.

சி:– ஏன் அப்படி?

கு:– தெய்வீகப் பண்பின் உண்மை லக்ஷணத்தை எடுத்துக் காட்டுவது எதுவோ, அதுதான் வேதங்களென்று சொல்லப்படுவதாகும், இன்னும் சூக்ஷமமாயறிந்தால் வேதமே கடவுளென்று சொல்வதும் பொருந்தும். தவிர, வேதத்தை நன்குணர்ந்தவர்கள்தான் மதத்தையும் தெரிந்து கொள்ள முடியும். நிற்க, இவையெல்லாம் பொதுவாய் ஸர்வேஸ்வரனின் விசேஷத்தையும் அதையடைய மனிதன் செய்ய வேண்டிய கடமைகளை வற்புறுத்தும் திட்டங்களேயாகும். இது ஒருபுற மிருக்கட்டும் வேதங்கள் நான்கு எனப்படும். அவைகளில் முக்கியமாயுள்ள மூன்று நம் ஹிந்து மதத்தினரால் எடுத்துக்கொள்ளப்பட்டு நடைமுறைப் பழக்கத்தில் அனுஷ்டிக்கப்பட்டு வருகின்றது. அம்மூன்றுதான் ரிக், யஜுர், ஸாம வேதங்கள் என்பனவாம்.

சி:– மற்றொன்றின் பெயர்?

கு:– அதர்வண வேதம்.

சி:– வேதங்கள் எப்படி உண்டாயின?

கு:– அன்பனே! வேதங்கள் எப்படி உண்டாயின வென்று திட்டமாய் நிர்ணயிக்க முடியாது. அதுவே கடவுளின்

தன்மையென்ற பொழுது எப்படி உண்டாக்கப்பட்ட தென்பதை கூறுவது கடினம்

சி:— ஸ்வாமி, தாங்கள் கூறுவது எனக்கு விளங்கவில்லையே. சற்றுத் தெளிவாய் எடுத்துரைக்கவும்.

கு:— வேதமென்பதின் இருப்பிடம் ஸ்ருதி (காதினால் கேட்டுக்கொண்டது). அதிலிருந்து தோன்றியது ஸ்மிருதி (காதினால் கேட்டவற்றை மனதிற்கும் புத்திக்கும் எட்டிய வரையில் எழுதி வைக்கப்பட்டது). இவைகளை விளக்கிக் கூறும் விஷயங்களே உபநிஷத்துக்கள். ஆகவே இவைகளின் உண்மைப் பொருள்களுக்கு ஆதி காரணமானது ஸ்ருதி என்பதை ப்ரமாணமாய் கூறலாம். அதனால்தான் வேதத்தைக் கடவுளுக்கு ஒப்பிட்டுச் சொன்னது.

சி:— ஸ்வாமி, தாங்கள் சொல்வதைப்போல எழுதி வைக்கப் பட்டது என்ற பொழுது அதை நம் போன்ற மனிதன் தானே செய்திருக்க முடியும்?

கு:— ஆம் என்றாலும் நம்மை யொத்த மனிதர்களால் அதை நிர்மாணித்திருக்க முடியாது. மனித முயற்சிக்கும், புத்திக்கும் அப்பாற்பட்ட ஈஸ்வராம்ஸமான தபோ நிஷ்டர்களான ரிஷி. முனீஸ்வரர்களால்தான் நிர்ண யித்து எழுதி வைக்கப்பட்டுள்ளதாகும்.

சி:— மதத்திற்கும் கடவுளுக்கும் நெருங்கிய சம்பந்த முண்டோ?

கு:— உண்டு யென்பதுதான் பல பெரியோர்களின் சித்தாந்தம்.

சி:— தங்கள் கருத்தும் அது தானே?

கு:— என்னைப் பொருத்த மட்டில் அப்படித்தானென்று திட்டமாய்க் கூற முடியாது.

சி:— ஏன்?

கு:— ஒரு மதம் என்றால் சில கொள்கைகளைப் பின் பற்றி நடக்கும் சமுதாயமென்று இதற்கு முன்னால் ஓரிடத்தில் உனக்கு விளக்கப்பட்டது. சிலர் சில கொள்கைகளைக் கடைப்பிடிக்கலாம், அல்லது விட்டுவிடலாம், அப்படி விட்டுவிடுவதினால் சிறுகச் சிறுக அந்தக்கொள்கையை அனுஷ்டிக்கும் சமுதாயம் அழிந்துவிடுகின்றது. (அதாவது மதத்தின் பலம் குன்றி விடுகின்றது). அதனால் கடவுளின் தன்மை மனிதனை விட்டு தனித்திருப்பதாய்க் கூறலாமேயன்றி மதத்திற்கும் ஈஸ்வரனுக்கும் பிணைப்பது பொருந்தாது. அப்படி மதமே ஈஸ்வரனென்றால், ஒன்று உயர்வு, மற்றொன்று தாழ்வென்று கூறிக்கொள்வதற்குக் காரணமே யில்லை.

சி:— இதன் உட்கருத்தென்ன?

கு:— ஒரு சமுதாயத்தினால் அனுஷ்டிக்கப்பட்டு வரும் கொள்கைகளை மட்டிலும் நன்மையாக வுள்ளவற்றை மதத்தின் சார்பாக இயற்றப்பட்டுள்ளதாய்க் கொண்டு பின் பற்றிச் செல்லலாமேயல்லாது, அதைக்கடவுளுக்கு

சம்பந்தப்படுத்தி விட முடியாதென்பதே யாகும். நிற்க, கடவுளுக்கும் மதத்திற்கும் சம்பந்தமுண்டென்று வைத்துக்கொண்டால், மதமழியும் பொழுது கடவுளே யழிந்து விடுகின்றார் என்றுதான் கூறவேண்டிவரும். ஆகவே அது ஈசனுக்குச் சம்பந்தப்பட்டதென்பதை விட அவனுடன் தொடர்பு கொள்ளவோ அல்லது அவனை அடையவோ வழி காட்டியாகவுள்ள ஒரு கொள்கை யென்றே கூறத்தகும்.

சி:— அப்படி யிருக்க ஒன்று உயர்வென்றும் மற்றவை தாழ் வென்றும் சொல்லிக்கொள்ளப் படுவதின் கருத் தென்ன ?

கு:— எதிலுமுள்ள உண்மை விஷயங்களை தெரிந்துகொள்ள வேண்டிய அறிவின் திறமை குன்றி விடுவதினால் உயர்வு, தாழ்வென்ற அபிப்ராய பேதத்திற்கு இடமளிக் கப்பட்டு விடுகின்றது. கடவுள் ஒரு குறிப்பிட்ட எந்த மதத்தையோ, அல்லது ஒரு தனிப்பட்ட வகுப்பை யோ சார்ந்தவரல்ல என்ற தத்துவம் தெரியும்பொழுது, மதத்தைப்பற்றிய வேற்றுமை கொண்ட எண்ணங்கள் தானகவே நீங்கிவிடும்.

சி — மாஸ்சர்யமென்பதைப்பற்றி தங்கள் கருத்தை விளக்க வும்.

கு:— அதன் உட்பொருள் பொறுமை என்பதேயாகும். (ஒரு வரை யொருவர் பகைத்துக் கொள்வதினல் ஏற்படும் உணர்ச்சிதான் பொறுமை யென்றும் சொல்லலாம்.)

சி:— அது எப்படி ஏற்படுகின்றது?

கு:— பிறர் சுகமாய் வாழ்க்கை நடத்துவதைப் பார்த்து அது தனக்குக் கிட்டவில்லை யென்று எண்ணுவதினாலும், பிறரால் செய்யப்படும் எக்காரியங்களைக் கண்டு சகிப்புத் தன்மையற்று விடுவதினாலும் ஏற்படுவதே யாகும், இதையே வேறு முறையில்தான் என்ற அகந்தை கொண்ட மதத்திற்கு பிணைத்துக் கூறலாம்.

சி:— காமக்ரோதாதிகளுக்கும் மாஸ்சர்யத்திற்கும் சம்பந்த முண்டோ ?

கு:— இந்நான்கு குணங்களும் ஒன்றைவிட்டு ஒன்று இணை பிரியாத நண்பர்களென்றே கூறலாம்.

சி:— இக்குணங்களனைத்தையும் ஒருங்கே அமையப்பெற்ற மனிதனின் லக்ஷணமென்ன ? அவனால் செய்யப்படும் காரியங்கள் எத்தன்மையாயிருக்கும் ?

கு:— இதைப்பற்றி எதுவுமே கூறத் தேவையில்லை யென்று னும் குறிப்பான ஒரு சிலவற்றை மட்டிலும் மனதில் பதிய வைத்துக்கொள்ள வேண்டும். இவர்களால் செய்யப்படும் காரியங்கள் ஒவ்வொன்றும் சகிக்க மாட்டாத விபரீதத் தன்மை கொண்டதாய்த் தானிருக் கும். இக்குணங்களிலிருந்து பிறந்ததுதான் காதல், களவாடல், கள்ளுண்டல், பொய் மொழிதல், ஈதல் மறுத்தல் எனப்படும் பஞ்சமா பாதகங்களான காரியங் கள். இவைகளின் முடிவைப்பற்றி சுருங்கக் கூறின் எரியும் நெருப்பில் எண்ணெயை ஊற்றினாற் போலும்.

காற்றுடன் கலந்த நெருப்பினுல் என்ன பலனுண்டோ, அதுதான் கிடைக்கும்.

சி:— இக்குணங்கள் எல்லோரிடத்திலும் உண்டல்லவா ?

கு:— இந்தக் குணங்களின் இருப்பிடம்தான் உலகில் தோன்றும் தீய சக்திகள். இதைப் பெரும் பாலோர் விரும்ப மாட்டார்கள். தீமையினுல் உண்டாகும் பலனேக் கண்டு அஞ்சுபவர்கள் அதற்குப் புகலிடமும் அளிக்க மாட்டார்கள்.

சி:— இதிலிருந்து மனிதன் தன்னே விடுவித்துக்கொள்ள முடியாதா ?

கு:— முடியும், முடியாதென்று கூறுவதற்கில்லே.

சி:— ஏன் அப்படிக் கூறிவிட்டீர்கள் ?

கு:— இவையெல்லாம் ஒவ்வொரு தனி மனிதனின் பிறவிப் பயனேப்பற்றிய விஷயமாகும். ஆனுல் ஒன்று மட்டிலும் உண்மை. இவைகளேத் தன்னிடம் புகலவொட்டாமல் தடுத்துக்கொள்வதற்கு செம்மையான நடைமுறைப் பழக்கம் ஒன்றினுல்த்தான் முடியும்.

சி:— ஸ்வாமி, எனக்கு மதங்களேப்பற்றிய இன்னும் சில சந்தேகங்கள் தோன்றுகின்றதே !

கு:— அது வென்னவோ ?

சி:– ஒரு மதத்திற்கும் மற்றதிற்கும், எவ்வளவோ வித்தியாசங்கள் காணப்படுகின்றனவே?

கு:– ஆம் அவையெல்லாம் அனுஷ்டிக்கும் பழக்கங்களில் தான் உண்டே யல்லாது அதன் அடிப்படைக் கருத்தான ஈஸ்வரனுக்கு எந்த வித்தியாசத்தையும் காண்பிக்காது அல்லது கற்பித்துக் கூறவும் முடியாது. உதாரணமாய் ஹிந்து மதத்தையே எடுத்துக்கொள்வோம். மண்ணில் பிறந்த ஒவ்வொருவரும் தன்னைப்படைப்பித்த ஆண்டவனின் அருளைப் பெற்று செம்மையான வாழ்வெய்தி, அதையே தன் பிற்கால சந்ததிகளும் பின்பற்றும். தொன்று தொட்டு தலைமுறைப் பழக்கமாக அனுஷ்டித்து வருகின்றதையே திட்டம், அல்லது கொள்கை என்று சொல்ல வேண்டும். இதில் நன்மை பயக்கக் கூடியது எதுவாயிருப்பினும் சரியே. அதைக் கடைப்பிடித்தொழுகுவதில் வித்தியாசம் காண வேண்டியதவசியமில்லை.

சி:– உலகில் மதங்களே இல்லாமல் இருக்க முடியாதா?

கு:– உலகம் தோன்றி மறையும் வரையில் அவ்வப்பொழுது ஈசனால் மனித சமுதாயமும், மற்ற ஜீவராசிகளும் சிருஷ்டிக்கப்பட்டும், அழிக்கப்பட்டும் வருகின்றார்களென்பது நிச்சயம். நிற்க, மற்றய ஜீவராசிகளைக் காட்டிலும், மனிதன் ஒரு தனியான அமைப்புடன் பிறந்திருக்கிறன் என்பது கண் கூடு. (என்னவெனில் ஐந்தறிவுக்கு அப்பாற்பட்டதான பகுத்தறிவெனப்

படும் எதையும் ஊஹித்தறியும் வல்லமையான) ஆறுவது அறிவைப் பெற்றிருக்கின்றான் என்பதேயாகும். இந்த அறிவைக் கொண்டுதான் கடவுள் பற்றிய லக்ஷணத்தையும் தெரிந்து கொள்ள முடியும். அதற்கு குரு துணையாக விருப்பது மதமே யாகையினால், மனித சமுதாயம் மண்ணில் தோன்றிக் கொண்டிருக்கிற வரையில் மதமும் இருக்கத்தான் செய்யும்.

சி:— மதமில்லா விட்டால் கடவுளைத் தெரிந்து கொள்ள முடியாதா?

கு:— முடியாதென்றுதான் கூறலாம்.

சி:— சிலர் மதத்திற்கும் தங்களுக்கும் சம்பந்தமில்லையென்று கூறுகின்றனரே, அதன் உண்மை யென்னவோ?

கு:— அப்படியுமிருக்கலாம்; ஒன்று கடவுளைப் பற்றிய உண்மை ரகஸ்யங்களை நன்றாய் உணர்ந்தவர்களும், தன்னம்பிக்கையற்றவரும், எந்தக் கொள்கையிலும் நம்பிக்கையற்ற வருமான நாஸ்தீக வாதிகளுமே இவ்விதம் கூறிக்கொண்டிருப்பார்கள். அதைப்பற்றி சிந்திக்க வேண்டிய தவசியமில்லை.

சி:— ஸ்வாமி, இப்படி ஒன்றுக்கொன்று முரண்பட்ட அபிப்ப்ராயத்தையே ஓங்க வளர்த்தால், அதன் முடிவு என்னவாகும்?

கு:— ஒருவனை யொருவன் பகைத்துக் கொள்வதற்கும், ஒரு மதத்திற்கும் மற்றொரு மதத்திற்கு மிடையே உயர்வு,

தாழ்வென்ற சர்ச்சைகளைத் தூண்டி முடிவில் அதுவே அழிக்கும் சக்தியாக மாற வித்திட்டதாகிவிடும். நிற்க, ஒரு கொள்கையும் லக்ஷியமும் கொண்ட ஒருவன் அதுவே சரியென்ற திட்டமிட்டு தன் மதத்தின் லக்ஷியமெனப் பாவித்து, பறை சாற்றிவரும் பொழுது, அது தமக்குத் தேவையில்லை யென்று உதறித்தள்ளும் மற்றொருவன் அதைக்கண்டு தூஷிப்பதும், பரிகசிப் பதும், சில சந்தர்ப்பங்களில் அழித்து விடுவதற்கு முயற்சிப்பதும், மனித சுபாவத்தின் இயற்கையே. எந்த லக்ஷியத்தை அடிப்படையாகக் கொண்டு தூஷணை பூஷணை இவ்விரண்டையும் அகற்றப்பட வேண்டு மென்று கூறப்படுகின்றதோ, அதன் உதவியைக் கொண்டே இவ்விரண்டையும் வளர்த்துக் கொள்ளப் படுவதுதான் ஒருவருக்கொருவர் பகைத்துக்கொள்ளும் மாஸ்ச்சர்யத்தில் கொண்டு போய் விட்டுவிடுகின்றது. இதையேதான் மதங்களைப் பின்பற்றுகின்றவர்களும் செயல் முறையில் காண்பிப்பதாயும் ஓரளவு கூறலாம். இதுதான் இன்றைய உலகில் கண் முன்னால் காணும் காக்ஷி. இத்துடன் இதை நிறுத்திக்கொண்டு மற்றதைக் கவனிப்போம்.

முதல் அத்யாயம் முற்றிற்று.



## இரண்டாம் அத்யாயம்.

சி — கடவுள் உலகை ஏன் சிருஷ்டித்தார் ?

கு:— இந்தக் கேள்வி விசித்திரமாயிருக்கிறது, உலகில் ஒருவரும் கேட்காத கேள்வி உனக்குத் தோன்றிவிட்டதாய் உன் அபிப்பிராயமா ?

சி:— அப்படியில்லை ஸ்வாமி, ஈசனைப்பற்றிய மற்றைய விஷயங்களை மனிதன் அவசியம் தெரிந்து கொள்ள வேண்டுமென்ற பொழுது இவைகளுக்கு ஆதாரமான மனிதனின் பிறவியும் தெரிந்துகொள்ள வேண்டியது அவசியம்தானே, அதுவும் தவிர இதற்கு முந்திய பகுதியில் தங்களால் விளக்கம் கூறப்பட்ட காமக்ரோத லோப மதமாச்சரியங்களைப் போன்ற குணதோஷங்கள் மனிதப் பிறவியை ஒட்டி தொடர்ந்து கொண்டே வருகின்றதல்லவா ? ஆகவேதான் உலக சிருஷ்டியைப் பற்றித் தெரிந்து கொள்ளலாம் என்ற கருத்துடன் கேட்டேன்.

கு:— அன்ப மனிதன் மண்ணுலகில் பிறந்து தன் முன்னால் தோன்றும் காக்ஷிகளையும் என்றும் பார்த்துக்கொண்டிராமல் என்றோ ஒரு நாள் மறைந்து விடுகின்றான். அவன் மட்டும் அப்படியல்ல அவனை யொட்டிய மற்ற ஜீவராசிகளும் அப்படியே மறைந்து விடுகின்றன. இப்படி மறைந்துவிடுவதற்கு எந்த வஸ்து காரணமாயிருக்கின்றது என்பதை தெரிந்து கொள்வதற்கும், ஒன்றிற்கொன்று உள்ள மாறுபாடான, அமைப்பையும் தெரிந்து கொள்வதற்குமே உலகம் சிருஷ்டிக்கப்

பட்டுள்ளது. அதுவும் தவிர ஏதோ ஒரு வஸ்துவைக் காரணமாய் வைத்துக்கொண்டல்லாமல் மற்றொரு வஸ்துவின் தன்மையையறிந்துகொள்ளவும் முடியாது. அதைப் போலவே, ஈஸ்வரத்தன்மையை தெரிந்து கொள்வதற்கு ஒரு அடையாளமான சிருஷ்டிதான். உலகமும், அதிலுள்ள மற்ற ஜீவராசிகளும், மானிட வர்க்கங்களும், அதோடு கூட ஒவ்வொரு அமைப்பி னும், அவையவைகளின் தொழில்களின் தாராதரத்தை நிர்ணயித்துக் காண்பிக்கும் பொருட்டும், மனிதன் செய்யும் ஒவ்வொரு தொழிலைப் போலும், அதற்கு மறைமுகமான ஊக்கமளிக்கும் வலிமையை நிர்ணயம் செய்து கொள்வதற்கு என்றும் கூறலாம். இதைச் சுருங்கக்கூறுமிடத்து ஈஸ்வானின் விநோத விளையாட்டு க்களில் ஒன்றுதான் உலக சிருஷ்டியாகும்.

சி:— ஸ்வாமி! அதில் ஏன் பல் வேறு மாறுபட்ட தோற்றங்கள்?

கு:— அதுதான் மனிதனால் திட்டமாய்க் கூற முடியாத மாய்கையின் பிரதி பிம்பங்களாகும்.

சி:— இவையெல்லாம் ஒரே காரணத்தைக் கொண்டுதான் உண்டாக்கப்பட்டதாய்ச் சொல்ல முடியுமா?

கு:— அப்படிச் சொல்வதற்கில்லை. ஒவ்வொன்றிற்கும் ஏதோ ஒரு தனியான காரணம் இருக்கத்தான் செய்யும்.

சி:— ஸ்வாமி! இதன் இரஹஸியங்களைத் தெரிந்து கொண்டு விட்டால் ஈஸ்வரனையே தெரிந்து கொண்டதாகி விடுமல்லவா

கு:— பொதுவாயுள்ள விஷயங்களைத் தெரிந்து கொள்வதற்கும், கடவுளைத் தெரிந்து கொள்வதற்கும் எவ்விதத்திலும் சம்பந்தமுடையதாய் சொல்ல முடியாது, எதையும் தன் புத்தியைக் கொண்டு அறிந்து கொள்ள முயற்சிப்பதெல்லாம் தன் வாழ்வை திறம்பட நடத்துவதற்கு உதவிகரமாய் கொள்ள முடியுமென்றுதான் கூறலாம். மற்றும் கடவுளின் உண்மை ரகஸ்யம் தன் நெடு நாளைய அனுபவம், ஆராய்ச்சி இவ்விரண்டின் மூலம்தான் தெரிந்துகொள்ள முடியும். ஆனால் மனிதன் செய்யும் தொழில்களைப் பற்றியும் ஓரளவு சிந்தித்தறிய வேண்டியதவசியம்,

சி:— அதென்ன ?

கு:— ஸர்வேஸ்வரன் உலகம் நடந்து இயங்கி வருவதை எடுத்துக் காட்டும் வகையில் மூன்று தொழில்களான சிருஷ்டித்தல் (உண்டாக்குதல்) ஸ்திதி பரிபாலித்தல் (உண்டாக்கியவற்றைப் பாது காத்தல்) சம்ஹாரம் (அதையே பின்னர் அழித்து விடல்) போன்ற காரியங்களைச் செய்து வருகின்றார் என்பது வேத புராணங்களின் ப்ரமாணமும் ப்ரத்யக்ஷமாய்க் காணும் காரியமும் ஆகும்.

சி:— ஏன் இப்படிச் செய்ய வேண்டும் ?

கு:— சாதாரணமாய் மனிதன் உலகில் வாழும் வரையில், தான் செய்யும் ஒவ்வொரு காரியங்களையும் தன் கடமை என்று கருதி ஏற்றுக்கொள்வதைப் போலவும், அதை

மறைமுகமாய் வற்புறுத்த வேண்டியதை யொட்டி ஈச னும் இம்முத் தொழிலாகியவற்றைத் தன் கடமையாகக் கொள்ளுகின்றான்.

சி:— மனித சமுதாயத்தைத் தவிர மற்றுமுள்ள பல்வேறு தோற்றங்களைக் கொண்ட அநேக வஸ்துக்களையும் ஏன் உண்டாக்க வேண்டும்?

கு:— சகலமும் ஒரே இனமாயிருந்தால், அதில் அடங்கி யிருக்கும் பாகு பாடுகளை மனிதன் தெரிந்துகொள்ள முடியாதென்பதுதான் பல்வேறு ஸ்ருஷ்டிக்குக் காரணம்.

சி:— மனிதப் படைப்பிற்கும் மற்றய ஜீவராசிகளுக்கும் உள்ள அடிப்படை வித்தியாச மென்ன?

கு:— சகலவற்றிலும் கண்ணால் பார்த்தால் அமைப்பின் மாறுதலைத் தெரிந்து கொள்ளலாமே.

சி:— உருவத் தோற்றத்தைக் கேட்கவில்லை, குண விசேஷங் களின் வித்தியாசத்தைத்தான் கேட்கின்றேன்.

கு:— அதைத்தான் முன் அத்யாயத்தில் கூறியிருக்கின்றே னே. அது மறந்து விட்டதா?

சி:— தாங்கள் தொடர்ந்து சொல்லிவரும் விஷயங்களை எவ்வளவுதான் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள முயற் சித்துப் பார்த்தாலும் சில மறந்து விடுகின்றன. தவிர, மனிதனுக்கும், மற்றவைகளுக்குமுள்ள அறிவின்

தன்மையைப்பற்றித்தான் எடுத்துரைக்கப்பட்டது. அதுவும் முற்றிலும் விபரமாய் விளக்கவில்லை. அதைத்தான் அறிய விரும்புகின்றேன்.

கு:— மனிதனைத் தவிர மற்ற ஜீவராசிகள் சகலமும், எதையும் தன் மனதினுல் நினைத்து அதன் புத்தியைக் கொண்டு தாராதரத்தை நிர்ணயித்துக் கொள்ளும் அதி சூட்சமமான பகுத்தறிவை பெற்றிருக்கவில்லை யென்பதையே முக்கியமாய்த் தெரிந்து கொள்ள வேண்டிய வித்தியாசமாகும்.

சி:— உலகில் தோன்றும் சகல வஸ்துக்களும் மனிதன் அனுபவிப்பதற்கென்றே உண்டாக்கப்பட்டதா?

கு:— ஒரு குறிப்பிட்ட இனத்தின் சுகத்திற்காக மட்டிலும் சகலவற்றையும் சிருஷ்டிக்கப்பட்டதாய் கூறுவதற்கில்லை. ஆனுல் மனிதன் மட்டிலும் சகலமும் தன்னை யொட்டித்தான் உலகம் பூராவுமென்று எண்ணிக் கொள்வதென்னவோ ஓரளவு உண்மையென்று கூறலாம். இதைப்பற்றிப் பொதுவாய் கூறுமிடத்து உலகில் தோன்றும் சகலமும், மனிதன் மட்டிலுமல்லாமல் மற்றய ஜீவராசிகளும் அவையவைகளின் அமைப்புக் கேற்ற திட்டப்படி அனுபவித்துக் கழிப்பதற்கென்பதே யாகும். அதோடு மனிதனை மட்டிலும் கூறுமிடத்து சகலவற்றையும் தன் சுகமென்று கருதி அனுபவிக்கத் தான் வேண்டுமென்று கூற முடியாது.

சி:— ஏன் ஸ்வாமி அப்படி ?

கு:— உலகில் தோன்றும் ஒவ்வொன்றிலும் நன்மை, தீமை யென்ற இரண்டுவித குணங்களுண்டு.

சி.— அதற்குற்ற காரண மென்னவோ?

கு:— ஸர்வேஸ்வரனல் மனிதனுக்குக் கொடுக்கப்பட்டுள்ள சூக்ஷ்ம புத்தியை உபயோகப்படுத்திக் கொள்வதற்குத் தான்.

சி:— இதை யெப்படி நிர்ணயிப்பது?

கு:— உதாரணமாய் இரண்டொரு விஷயங்களைத் தெரிந்து கொண்டால் புலப்படுகின்றது. உலகில் சூரியன் பிரகாசிக்கின்றன், மறைகின்றன். அவன் பிரகாசித்தால் ஒளியும், மறைந்தால் இருளும் ஏற்படுகின்றது. மனிதன் முன்னல் இருள் சூழ்ந்து விட்டால் அவன் வேறு எந்தக் காரியத்தையும் செய்வதை விட்டு விட்டு ஸ்தம்பித்து விடுகின்றன். திரும்பவும் ஒளியைக்கண்ட வுடன் மன சந்தோஷம் அடைகின்றன். இங்கே இருள் என்பனவற்றைத் தீமைக்கு ஒப்பிட்டுச் சொல்லும் பொழுது மனிதன் தீயசக்திகளால் சூழப்பட்டால், தான் எந்தக் கடமைகளையும் செய்ய முடியாமல் ஸ்தம்பித்து நிற்கும் நிலை யேற்பட்டு விடுமென்பதையே மனதில் கொள்ள வேண்டும். மற்றப்படி ஒருவனிடத்தில் நிரம்ப தனங்கள் குவிக்கப்பட்டிருக்கின்றன. அவன் செல்வத்தைக் கொண்டு, தன் ஆசையுள்ள மட்டிலும் அனுபவிக்கின்றன். கஷ்டத்தின் தன்மை யென்னவென்று மனதினல் கூட சிந்தித்துப் பாராத

அவனிடமிருக்கும் செல்வங்களனைத்தும், கள்வர்களால் கவரப்பட்டு விடுகின்றது. அத்துடன் அவன் சுகமென்றெண்ணி யனுபவித்த நல் வாழ்வும் பிரிக்கப்பட்டு விடுகின்றது. தன் பொருட் செல்வம் தன்னைவிட்டகன்ற பின்னர் அவனை அறியாமலேயே அவன் பதருகின்றான், துடிக்கின்றான்.

சி:— இப்படித் துடிக்கக் காரணம் ...?

கு:— இது வரையில் தான் அனுபவித்த சுக வாழ்விற்கெல்லாம் காரணமாயிருந்த பொருட் செல்வங்கள் போய் விட்டனவே என்பதினால்தான். தவிர, இதிலொரு முக்கிய விஷயத்தை மனதில் நன்றாய்ப் பதிய வைத்துக் கொள்ள வேண்டும்.

சி:— அதென்ன?

கு:— மனிதன் தன் வரைக்கும் நன்மை யென்று அனுபவித்துக் கொண்டிருந்த சுகத்திற்கும், தன் கைப்பொருள் நழுவி விட்ட பின்னர் கஷ்டமென்பதின் தன்மை யென்ன வென்பதை உணரும் பொருட்டே, சகலவற்றிற்கும் பரம விரோதியும், தீய சக்திகளின் பிரதி பிம்பங்களின் ஒன்றான, களவு என்பது தோற்றுவிக்கப் படுகின்றது. இதையே தன் நடைமுறை அனுபவத்திலிருந்து தெரிந்து கொள்கின்றான்.

சி:— மனித ஜென்ம மெடுத்த சகலரும் நன்மை, தீமை யென்ற வற்றினால் ஏற்படும் பலனை அனுபவிக்கின்றார்களா?

கு:— பொதுவாய் அப்படித்தான் கூற வேண்டும். ஆனாலும் ஒரு சாரார் நல்லதைக் கைக்கொண்டு தீயதை யகற்றி விடுவர். மற்றொரு சாரார் தீயனவற்றையே தம்மிருப் பிடமாகக் கொண்டு நன்மையை நாடவொட்டார்கள்.

சி:— அப்படியிருக்கக் காரணம்?

கு:— அவரவர்களின் புத்தி விசேஷந்தான்.

சி:— ஸர்வேஸ்வரன் சகலருக்கும் ஒரே அறிவைத்தானே கொடுத்திருக்கிறான்?

கு:— அறிவென்ற வஸ்து ஒன்றுதானென்றாலும் அது பயன் படும் முறைதான் பல வழிகளில் கொண்டு போய் விடு கின்றது.

சி:— இப்படிக் குண தோஷங்களைக் கொண்டவற்றில் மனிதன் புத்தியைச் செலுத்தக் காரணமென்ன?

கு:— (முன் அத்தியாயத்தில் உரைத்தபடி) சகலமும் தன தென்று கருதி அதை அனுபவிக்க வேண்டு மென்ற ஆசைதான்.

சி:— இந்த ஆசைக்குக் காரணம்?

கு:— வெளிப்படையாக எதைச் சொன்ன போதிலும், அல்லது சொல்லிக்கொண்ட போதிலும், மாய்கையின் விசேஷ மொன்றைத்தான் காரணமாய் கூறமுடியும்.

சி:— எதற்கெடுத்தாலும் மாய்கை யென்று கூறுகின்றீர் களே? அதன் உண்மை ரகஸ்ய மென்ன?

கு:- அதுதான் க்ஷணத்தில் தோன்றி மறையக்கூடிய அமைப்பின் தத்துவமாகும்.

சி:- அது எங்கிருந்து எப்படி யுண்டாகின்றது?

கு:- மனித சக்திக்கும், கற்பனைக்கும் எட்டாத ஸர்வேஸ்வரனிடமிருந்தே தோன்றக்கூடியதாகும். அது மட்டிலு மல்ல, ஈசனின் இச்சா மாத்திரத்தில் தோன்றக்கூடியதாகும்.

சி:- இதற்குமுன் தங்களிடம் கேட்ட விஷயங்களுக்கும் இப்பொழுது எடுத்துரைப்பவற்றிற்கும் என்ன சம்பந்தம்?

கு:- ஆரம்பத்தில் நீ கேட்ட விஷயங்கள் ஒவ்வொன்றிற்கும் உன்னிடம் எடுத்துரைக்கும் பதில் விளக்கங்கள் யாவும் ஒன்றையொன்று தொடர்ந்து வருகின்றனவேயாகும். அதன் முடிவைத் தெரிந்துகொள்வதற்கு அவையவைகளைப் பின்பற்றி வருகின்ற விஷயங்களைத் தெரிந்து கொள்ளத்தான் வேண்டும். நிற்க, இப்படிப் பிணைக்கப் பட்டிருக்கும் விஷயங்களைத் தீர்க்கமாய்த் தெரிந்து கொள்ள, ஞாபக சக்தியும், கூர்மையான அறிவும் ரொம்பவும் தேவை.

சி:- மாய்கையின் பிரிதிபிம்பம் உலகில் எப்படி வியாபிக்கின்றது?

கு:- ஆகாசத்தில் தோன்றி மறையும் மின்னலைப்போலவும், உஷ்ணத்திற்குப்பின் சீதளமும், ஒளிக்குப்பின் இருளும்

எப்படி மாறி மாறி வருகின்றதோ அதைப்போலவே தான் மாய்கையின் தன்மையும் ஒன்றன்பின் ஒன்ருய்த் தொடர்ந்து வருகின்றது.

சி:– இத்தகைய விசித்ர சக்தியை ஈசன் தன் வசமே வைத்துக்கொள்ளக் காரணம்?

கு:– தன் கடமையான முத்தொழிலையும் தவக்கமின்றி நடத்திக் காட்டுவதற்கேயாம்.

சி:– இந்த மாய்கையை மனிதன் சிருஷ்டிக்கும் திறனுண்டா?

கு:– உண்டென்றும், இல்லையென்றும் கூறலாம். சுருங்கக்கூறுமிடத்து மனிதனே மாய்கையின் சொரூபமாய்த்தான் உருப்பெற்றுள்ளான் என்பது அறியத்தக்கது. பகவான் தன்னுல் செய்து முடிக்கப்படும் எந்தக்காரியத்தையும் அதற்கென்று ஒரு தனி உருவத்தைப் பெற்றுக் கொண்டு செய்வதில்லை. தான் இச்சித்த சகலவற்றையும் மனிதனைக் காரணமாய் வைத்துக்கொண்டே செயலாற்றி வருகின்ருன் என்பதுவும் அறியத்தக்க விஷயம்,

சி:– மாய்கைக்கும், அறியாமைக்கும் நெருங்கிய தொடர்பு உண்டோ?

கு:– இதை அதிகம் விளக்கிக் கூற அவசியமேயில்லை. ஏனெனில், அறியாமையின் இருப்பிடம்தான் மாய்கையின் இருப்பிடமாகும். இவ்விரண்டிற்கும் சம்பந்தமில்லாவிட்டால் திடீரென்று தோன்றுவதும், மறையக்கூடியதுமான, விஷயங்களில் இச்சைகொள்ளக் காரணமேயில்லை.

சி:— இம்மாதிரி இச்சையுண்டாவது எப்பொழுது?

கு:— மனிதனிடம் சுடர்விட்டு எரிந்துகொண்டிருக்கும் அறிவென்ற விளக்கானது, அதன் முன்னால் தோன்றும் மற்ற பொருளைக் கண்டவுடன், மாய்கையென்ற விட்டில் புழுவினால் அணைக்கப்பட்டு தன் பிரகாசத்தின் வலிமையிழந்து விடுகின்றது. அந்த க்ஷணமே, தான் கண்ட பொருளைக் கைப்பற்றி அனுபவித்து மகிழ மனம் இச்சை கொண்டு விடுகின்றது.

சி:— அதை யெப்படி நிர்ணயித்துச் சொல்வது?

கு:— அறிவென்ற விளக்கு அணைந்து விடும்பொழுது (தன் புத்தியை சரியான வழியில் செலுத்தி சிந்திக்காமல் விட்ட பின்னர்) இருள் சூழ்ந்து கொள்ளுகின்றது. (புத்தி மயங்கிவிடுகின்றது) சாதாரண உலக நடைமுறையில் பார்த்தால், நல்ல பிரகாசமுள்ள வெளிச்சத்தில் நடந்து செல்லும் ஒருமனிதர்முன் திடீரென்று அவ்வெளிச்சம் மறைந்து இருள் சூழ்ந்துகொண்டு விட்டால் அவன் எப்படி நிலை தெரியாமல் தவிக்கின்றானோ, அதைப்போலவே தன் அறிவையிழந்த ஒருவன் இச்சையென்ற மாய்கை வசப்பட்டு அல்லல்படுகின்றான்.

சி:— மானிட ஜென்மமெடுத்த சகலரும் இவ்விஷய இச்சைக்குப் பலியானவர்கள்தானே?

கு:— விஷய இச்சை யென்று எதைக் குறிப்பிட்டுச் சொல்லுகின்றாய்?

சி:— உலகில்சுகமென்று நினைத்து அனுபவிக்கின்றவற்றையே குறிப்பிடுகின்றேன்.

கு:— எதுவும் மாய்கை யென்ற பொழுது அதில் சுகமென்ற பொருளுக்கு அர்த்தமேது? தவிர, நிரந்தரமாய் அனுபவிக்க முடியாத வொன்றை எப்படி சுகமென்று கூற முடியும்? இதைப்பற்றிப் பின்னால் தெரிந்து கொள்ளலாம். நிற்க, ஆசைக்குத் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டவர்களுமுண்டு. அது தன்னை நெருங்க வொட்டாமல் தடுப்பவர்களுமுண்டு.

சி:— அனுபவ ஆசைக்கு அடிமைப்படாதவர்கள் எவரோ?

கு:— எவன் தன்னிடமுள்ள அறிவுச் சுடரை மங்க விடாமல் வெகு ஜாக்கிரதையுடன் கவனித்து வருகின்றானோ அவனே யாவான்.

சி:— உலகில் ஞானி யென்றும், அக்ஞானி யென்றும், இரு பிரிவினர் இருப்பதாகக் கூறப்படுகின்றதே அதன் உண்மை யென்னவோ?

கு:— நீ கூறுவதும் சரிதான். இது வரையில் எடுத்துரைத்த இகத்தை யொட்டிய (உலகை யொட்டிய) ஒவ்வொன்றையும் ஸ்திரமென்று நினைத்துக்கொண்டிருப்பவர்கள் தான் அக்ஞான மென்ற இனத்தைச் சேர்ந்தவர்கள். ஞானிகள் இவ்விஷயங்களுக்கு அப்பாற் பட்டவர்கள் என்பதை மட்டிலும் ஓரளவு மனதில் வைத்துக்கொண்டால் போதும்.

சி:— இது வரையில் ஞானிகளைப்பற்றி ஒன்றுமே சொல்ல வில்லையே.

கு:— நாம் எடுத்துக்கொண்டு சிந்திக்கும் விஷயங்களில் ஞானி கள் எவ்வகையிலும் சம்பந்தப் பட்டவர்களல்ல. அது வும் தவிர அவர்களை பற்றி தெரிந்துகொள்வதை விட எடுத்துக்கொண்ட விஷயங்கள்மட்டிலுமே மிக முக்கிய மான தென்பதினால்தான் எதையும் கூறாமல் விடப் பட்டது.

சி:— இவ்விரு பாலருக்கு முள்ள வித்தியாசமென்ன?

கு:— உருவ அமைப்பு ஒன்றை தவிர மற்ற சகல அம்சங் களும் வித்தியாச பட்டவைதான்.

சி:— ஞானிகளுக்கும் குண பேதங்கள் உண்டோ?

கு:— உலகில் உள்ள சகல ஜீவராசிகளையும், அவையவைகளின் அமைப்புக்கேற்ற கவ்வி நிற்கும் பொழுது மனித ஜென்மமும் அதற்கு விலக்கல்லவே. ஞானிகளும் மனித இனத்தைச் சேர்ந்தவர்கள் தானே; அவர் களிடம் குண தோஷங்கள் இருப்பதும் இல்லாததும் நினைத்த மாத்திரத்தில் கூறிவிட முடியாது. அக்ஞானி களுக்கு எதுவெல்லாம் மித்ருவோ (நண்பனோ) அவை யெல்லாம் ஞானிகளுக்கு சத்ரு என்பதை மட்டிலும் நிச்சயமாய் கூறலாம்.

சி:— ஞானிகளை பார்க்கவோ அல்லது தெரிந்து கொள்ள வோ முடியாதா?

கு:– பார்க்கலாம், ஆனால் தெரிந்து கொள்ளத்தான் முடியாது. ஏனெனில் சாதாரண மனித ஸ்வபாவத்தையே தெரிந்து கொள்ள முடியாமலிருக்கும் பொழுது ஞானியின் லக்ஷணத்தை எப்படித் தெரிந்து கொள்ளமுடியும்;

சி:– நாமும் ஞானியாக முடியாதா ?

கு:– மற்றதெல்லாம் தெரிந்து கொண்ட பின்னல்லவா அதை பற்றி சிந்திக்க வேண்டும். தவிர ஞானியாவதென்பது நம் ஆசை கொண்ட வுடனே, அடையக் கூடிய ஏதோ ஒரு வஸ்துவாய் கருதக்கூடிய விஷயமல்ல.

சி:– ஈசன் எதன் உதவியைக் கொண்டு உலகை ஸிருஷ்டிக்கின்றார் ?

கு:– தான் நினைத்த மாத்திரத்தில் (இச்சை கொண்டவுடன்)

சி:- அவருக்கு இச்சை யூட்டும் தன்மை யெதுவோ?

கு:- மாயா சக்தியே யாகும்.

சி.– ஈஸனுக்கு உருவத் தோற்ற மேதேனு முண்டோ?

கு:– எதையும் செய்து முடிக்கும் ஆற்றலைக்கொண்ட குணமிருக்குமே யானால்; அதற்கு உருவத் தோற்றம் ஏதேனும் இருக்கத்தான் வேண்டும். அதைப் போலவே ஈஸனுக்கும் உருவ அமைப்பு கற்பிக்கப் பட்டுள்ளது.

சி:— அப்படியானால் மாயா சக்திக்கும் உருவமுண்டோ?

கு:— உண்டென்று தான் சொல்ல வேண்டும்.

சி:— ஸ்வாமி, ஈ ஸ ன் ஒருவனே எதையும் த னி த் து நிர்மாணிக்க இயலாதா?

கு:— அதுதான் உண்மை. ஆனால், அதை உலகம் பு ரி ந் து கொள்ளச் சக்தி யற்றது. தவிர, மனிதன் ஏதோ ஒன்றைச் செய்து முடிக்க வேண்டுமாயின் அதற்கு மற்ற எந்த சாதனையாக விருப்பினும் சரியே அவை களில் ஒன்றின் உதவியைக் கொண்டுதான் செய்து முடிக்கப்படும். அதைப்போலவேதான் ஈஸனும் தன் மாய்கை யென்ற ச க் தி யி ன் உதவியைக் கொண்டு எதையும் உற்பத்தி செய்கின்றான்.

சி:— இதன் உட் கருத்து விளங்க வில்லையே!

கு:— நன்றாய்க்கேள். ஜக ஸ் ரு ஷ் டி மட்டிலுமல்லாமல் சகல காரியங்களுக்கும் அதிபனாய் விளங்கும் பரந் தாமன் தன்னை மறந்தவனாய் (அதாவது ப்ருஹ்ம ஸ்வபாவத்துடன் கூடியிருக்கும் பொழுது) அவருக்கு தன் கடமைகளை ஞாபக மூட்டும் வகையில், சாக்ஷாத் ஜெகதம்பிகையானவள் ஈஸனின் செயல்களை இயக்கச் செய்கின்றாள் என்றே கொள்ள வேண்டும். குணமற்ற ஒரு தன்மைக்கு குணத்தைக் கற்பிப்பது போல நிர்மல மான ஈஸனுக்கு செயல்களைப் புரியும் ஆற்றலைப் புகுத் தப்படும் பொழுது ஏற்படுவது தான் சகுண ஸ்வபாவம் என்று சொல்லப்படுவதாகும். அத்தகைய சக்திக்கு

ஸ்திரீ பாவத்தைக் கற்பித்துத்தான் ஜெகத்திற்கெல்லாம் மாதா வென விளங்குபவளாக பராசக்தி யென்ற பெயரையும் சூட்டப்பட்டது.

சி:— ஸ்வாமி, இந்த மாயா சக்தியானவள் ஈஸனை விட்டுத் தனித்துத்தான் இயங்குகின்றுளா ?

கு:— நீ சொல்வதைப் போலல்ல. ஈஸன் மாயா சக்தியை தன் வசமேதான் வைத்துக்கொண்டுள்ளார்.

சி:— அதற்குக் காரணம்...?

கு:— மாய்கையின் சக்தி தன்னை விட்டுப் பிரிந்து விட்டால் எதையும் செய்து முடிக்கும் வல்லமை யிழந்து செயலற்றவராகி விடுகின்றுர்.

சி:— ஈஸனுல் செய்யப்படும் முத்தொழிலும் ஒரே உருவத்துடன் தான் செய்து முடிக்கின்றுரா ?

கு:— அப்படிக்கில்லை; ஒவ்வொன்றிற்கும் வெவ்வேறு பெயர்களைக் கொண்ட உருவத்தைப் பெற்றுக்கொள்வதாகக் கூறப்படுகின்றது.

சி:— உருவமென்றுல் அது மனிதனின் கண்முன் தோன்றும் வஸ்துவைக் குறிப்பதுதானே ?

கு:— ஆம். அப்படித்தான் சொல்ல வேண்டும். அதன் உண்மை ரகஸ்யத்தைப் பின்னுல் தெரிந்து கொள்வாய்.

சி.— ஸ்வாமி, ஒவ்வொரு உருவத்தை யெடுத்துக் கொள்ளும் பொழுதும் அதற்கென்ற தனிப் பெயர்களுண்டோ ?

கு:— உருவமென்று ஒன்றிருந்தால் அதற்குப் பெயர் மட்டிலுமல்ல குணமு முண்டு. அதைப்போல, ஈஸனுக்கும் பெயர், உருவம், குணம், இம்மூன்றும் கூறப்பட்டது.

சி:— அவைகளென்னவோ?

கு:— ஸ்ருஷ்டிக்குக் காரணமானவர் பிருஹ்மாவும். ஸ்திதிக்கு விஷ்ணுவும், ஸம்ஹாரத்திற்கு, ருத்திரனும் ஆக மூன்று தொழிலுக்கும் மூவராவர்.

சி:— ஒவ்வொருவருக்கும் தனித்தனி மாயாசக்திகளுண்டோ?

கு:— உண்டு. அவர்கள்தான் ஸரஸ்வதி, லெக்ஷிமி, பார்வதி யென்று முறையே கூறப்படுகின்றவர்கள். இவர்களைத் தான் ஒருமித்து பராசக்தி யென்றும் அழைக்கப்படுவதுண்டு.

சி:— இவர்களின் தொழிலைப்பற்றி சற்று விரிவாய் எடுத்துக் கூறுங்களேன்.

கு:— ஸ்ருஷ்டித் தொழிலைச்செய்யும் ப்ருஹ்மாவிற்கு மாய்கையானவள் ஸரஸ்வதி யென்ற சகுண உருப்பெற்று அவருக்கு உதவியளிக்கின்ருள். ஸ்திதி (கார்த்தல்) கர்த்தாவான விஷ்ணுவிற்கு மாயாசக்தியானவள். லெக்ஷிமி யென்ற பெயரைக் கொண்டு உதவியளிக்கின்ருள். ஸம்ஹாரம் என்ற அழிக்கும் தொழிலைக்கொண்ட ருத்திரனுக்கு மாயா சக்தியானவர் பார்வதி யென்ற பெயருடன்

உதவியளிக்கின்ருள் என்பதை மட்டிலும் சுருக்கமாகத் தெரிந்துகொண்டால் போதும்.

சி:— ஸ்வாமி, இம் முத்தொழிலேயும் ஒருவரே செய்யலாகாதா?

கு:— ஈசன் நினைத்தால் ஆகாதது என்று சொல்லக்கூடிய காரியங்கள் எதுவுமே உலகிலில்லே. உண்மையில் அவன் ஒருவன்தான் முத்தொழிலேயும் தனித்தனியே செய்து முடிக்கின்ருன். தவிர, உலகில் நடக்கும் சகல காரியங்களிலும் அவனது தன்மை யெப்படிப் பிரதிபலிக்கின்றது யென்பதை மனித சமுதாயத்திற்கு மறைமுகமாய் யெடுத்துக் காண்பிக்கும் முறையில் மூன்று வகையாகப் பிரித்துக் கூறப்பட்டது. அது மட்டிலுமல்ல, இம்மூன்று தொழிலுக்கும் ஒவ்வொன்றிலும் காரண பூதமாயுள்ள மூன்று வித சக்திகள் உண்டு. அவைகளேத்தான் முறையே இச்சை யென்றும், ஞானமென்றும், கிரியை யென்றும், கூறப்படுகின்றனவையாகும். ஆனல், இம்மூன்றும் ஒன்றிலிருந்து தோன்றியவை தானென்பதை நன்கு ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும்.

சி:— இப்படி மூன்று வகையாகப் பிரித்துக் காட்ட வேண்டியதின் அவசியம்?

ஞ:— அவனல் படிப்பிக்கப்பட்டுள்ள மானிட வர்க்கம், அவரவர்களுக்கென்று தனித்தனியாகப் பிரித்து பிரேரேபிக்கப்பட்டுள்ள கடமைகளேத் தவறவிட்டு, வேறு ஒன்றைச் செய்யப் புகலாகாது யென்பதையும், தான்

யெடுத்த பிறவியில், தனக்கென்றேற்பட்டுள்ள எந்தக் கடமைகளையும் செய்யத் தவற விட்டுவிடலாகாதென் பதையும் வலியுறுத்துவதற்காகத்தான்.

சி:- அப்படி ஒருவர் செய்யும் காரியத்தை மற்றவர் செய்ய லாகாதா, அல்லது ஆசை கொள்ளலாகாதா?

கு:- உதாரணமாய் உலகில் ஒரு தொழிலைச் செய்வதற் கென்றுள்ள ஒரு சமுதாயம், தனக்கு அப்பாற்பட்ட தான வேறு ஒரு தொழிலைச் செய்வதனாலோ. அல்லது செய்வதற் கிச்சை யேற்பட்டாலோ எப்படி வேண்டு மானாலும் இருக்கட்டும். அதனுள் அடங்கிய உண்மைத் தத்துவம். அத் தொழிலின் நுட்பத்தையும், அதைச் செய்ய விரும்புகின்றவர்களின் புத்தி விசாலத்தை யொட்டியுந்தான் அதன் பலனைப்பற்றிய முடிவு கொள்ள முடியும். ஒரு ராஜ்ய மென்றிருந்தால், அதில் வாழ் வதற்குப் பிரஜைகளும் உண்டு. பிரஜைகளில்லாத வற்றை ராஜ்யமென்றோ அல்லது நாடு யென்றோ எவரும் கூறுவதில்லை. பிரஜைகள் இருந்தால். அவர் களைப் பரிபாலித்து ஆளுவதற்கு ஒரு அதிபதி யிருப்ப தும் சகஜம். அது தான் நடைமுறை விஷயமும். அதோடு பிரஜைகள் சீரியமுறையில் வாழ்வதற்கென்று சட்ட திட்டங்கள் மற்றும் சகல வசதிகளும் செய்யப் பட்டுள்ளன. இதில் சில விஷயங்களைக் கவனிக்க வேண்டும். சட்ட மியற்றிவிட்டால் போதுமா? அது நன்கு அமல் செய்யப் படுகின்றனவா வென்பதைக் கண் காணிக்க ஒரு பரிபாலனர், சட்டத்தை மீறி நடந்து கொள்பவர்களைத் தண்டிப்பதற்கு ஒரு

பிரிவினர், இம்மாதிரி யெத்தனையோ பிரிவுகள் கொண்ட அநேக விஷயங்கள், அந்தந்தக் காலங்களுக் கேற்ற முறையில் மாறி மாறி அமைக்கப்பட்டுக் கொண்டே யிருக்கின்றன.

சி:— தாங்கள் சற்று எனக்கு விளங்கக் கூறும்படியாய்க் கேட்டுக்கொள்கின்றேன்.

கு:— இன்னும் தெளிவாய்த் தெரிந்துகொள். ஒரு ராஜ்யத்தில் மக்களுக்கேற்ற சட்டத்தை இயற்றும் மந்திரி (அமைச்சர்) அச்சட்டத்தைப் பரிபாலிக்கும், கலெக்டர் போன்ற உத்யோகஸ்தர் பார்க்க முடியுமா, அல்லது நீதி மன்றத்தில் நியாயம் தீர்க்கும் நியாயாதிபதியாக (ஜட்ஜ்) விளங்க முடியுமா, குற்றம் செய்கின்றவர்களைக் கண்டு பிடிக்கும் போலீஸ் உத்தியோகஸ்தர்கள், சட்டமியற்றும் மந்திரியாக விளங்க முடியுமா? யுத்தத்தில் தலைமை தாங்கி நடத்தும் சேனாதிபதி சட்டத்தை யெடுத்து வாதாடும் வக்கீலாக மாற முடியுமா? இது ஒரு புறமிருக்க, உலைக்களத்தில் இரும்பைக் காய்ச்சி வேலை செய்யும் தொழிலாளி (கொல்லன்) தானியத்தின் தரத்தை நிர்ணயிக்க முடியுமா? சமுத்திரத்தில் மீன் பிடிக்கும் ஒரு தொழிலாளி (வலையன்—செம்படவன்) சட்டத்தையும்அல்லது நீதியையும் பரிபாலிக்க முடியுமா? இம்மாதிரி ஒன்றிற்கொன்று சம்மந்தமற்ற வியவகாரங்களில் அதற்கென்று தனியான அனுபவம் நிறைந்தவர்களாயிருந்தால்தான், அதன் நுட்பமறிந்து செய்ய முடியும். இப்படிப் பல்வேறு பிரிவுகள் ஏற்பட்டாலும் தேசத்தின் அதிபதி யென்ற ஒருவரின் கீழ்தானே

சகலமும் நடைபெறுகின்றன. தவிரவும் இப்படித் தனக்கு அனுபவமில்லாத மற்ெருரு தொழிலே செய்ய இச்சை கொண்டால், அது நன்ருய் ப்ரகாசித்து விளங்குமா யென்பதைத்தான் யோசிக்க வேண்டும்.

சி:- தாங்கள் கூறுவது எனக்கு விந்தையாகத் தோன்று கின்றது. இன்றைய உலகில் அப்படித்தானே எதுவும் நிகழ்ந்து வருகின்றன?

கு:- அப்படித்தான் சொல்ல வேண்டும். காலத்திற்கேற்ற கொள்கை மாறுதலும், அதற்குண்டான நிகழ்ச்சிகளும் இதை நடைமுறை விஷயமானுலும் உதாரணத்திற் காகச் சொல்லப்பட்டதே யல்லாமல் வேறென்றுமில்லே. தவிர, இதை நிர்ணயித்துக் கொள்ளும் பொழுது ஈஸனின் தன்மை எதை நமக்கு வலியுறுத்துகின்றது யென்பதை ஆராய்ந்தறிய உதவிகரமா யிருக்கும்.

சி:- மாய்கைக்கேன் ஸ்திரீ பாவத்தைக் கற்பிக்கப்பட்டது?

கு:- உலகில் குடும்பத்தை நடத்தும் ஒரு மனிதன், தன்னுடைய மனேவியின் உதவி யில்லாவிட்டால் குடும்ப காரியங்கள் நடத்த முடியாதல்லவா, அதைப் போலவே உலகமென்ற குடும்பத்தை நடத்திச் செல்ல மாயையைத் தன் மனேவியாகக் கொண்டுள்ளார். அதை யொட்டித்தான் ஸ்திரீ பாவம் கற்பிக்கப்பட்டது.

சி:- அதை ஏன் அப்படிக் கூற வேண்டும்?

கு:- ஒன்றை உற்பத்தி செய்ய வேண்டுமானுல் மற்ற ஏதோ ஒன்றின் சேர்க்கை அவசியமாகின்றது என்பது நடை

முறையில் காணும் விஷயம். அது மட்டிலுமல்லாமல் ஒன்றிற்கொன்று மாறுபட்ட தன்மையைக் கொண்டதாக்வுமிருக்கின்றது. நிற்க, உதாரணமாய் ஒரு ஆண் தன்னை யொற்ற மற்ருெருவனை மோகிக்க முடியுமா? முடியாதல்லவா? அவனுக்கு ஆசையூட்டுவதற்குரிய சில மாறுபட்ட அமைப்புக்களுடன் கூடிய ஒரு ஸ்திரீயினிடம் தானே மோகம் கொள்ளுகின்ருன், இது ஒரு புறமிருக்கட்டும். ஒரே இனத்தைக்கொண்டு சேர்க்கை யேற்பட முடியுமா? முடியாதல்லவா? ஒரு மனிதன் நடத்தும் இல்லற தர்மத்தில் (குடும்ப வாழ்க்கையில்) மனைவி (இல்லாள்) என்ற தனக்குடைமையாகக் கருதும் ஒருவள் இல்லாவிட்டால் அவனுடைய குடும்பம் எவ்வளவு பெரிதா யிருப்பினும் அல்லது எத்தனை சுற்றத்தார்கள் நிரம்பி யிருந்த போதிலும் அதை இல்லற வாழ்வு என்று கூற முடியுமா? இவைகள் எல்லாவற்றையும் உலகம் தெரிந்து கொள்வதின் பொருட்டுத்தான் மாறு பாடான தோற்றங்களும் பாவங்களும் எடுத்துக் காட்டப்படுகின்றன.

சி:— ஸ்வாமி, இது வரையில் தாங்கள் கூறி வந்த விஷயங்களை ஓரளவு கவனமாய்க் கேட்டுக்கொண்டேன். இன்னும் சில முக்கியமான விஷயங்களையும் தெரிந்து கொள்ள விரும்புகின்றேன்.

கு:— அவைகளென்னவோ ?

சி:— காம, க்ரோதங்களை யொழிப்பதெப்படி யென்றும், ஞானிகள் யாரென்பதும், ஸர்வேஸ்வரனை யறியும்

மார்க்கமென்ன வென்பதையும், அதை யறிந்தவர்கள் யாரென்பதையும், தான தர்மங்கள் ஏன் செய்ய வேண்டும், மனிதனின் முக்கிய கடமைகள் யென்ன வென்பதையும் விளக்கிக் கூறவும்.

கு:– நீ கூறும் இவ்விஷயங்களை ஒரு நல்ல தேர்ந்த ஞானியைக் குருவாயடைந்து அவனிடமிருந்து கொள்.

சி:– என்ன அப்படிக் கூறிவிட்டீர்கள்?

கு:– இவ்விஷயங்களெல்லாம் ரொம்பவும் ரஹஸிய தத்துவங்கள் நிறைந்தவை. தவிர, ரொம்பவும் ஊஹித்தறிய வேண்டியவை. கேட்ட மாத்திரத்தில் எடுத்து விளக்கக் கூடிய விஷயமன்று.

சி:– தாங்கள் சொல்வதும் சரிதான். அப்படியானல் குருவாயடைவதென்ற விஷயங்களை எடுத்துக்கூறும் ஆற்றல் உடையவர் எதையாவது தெரிந்துகொள்ளக் கூடாதா?

கு:– யார், ஒருவனின் பண்பறிந்து தான் அறிந்துள்ள உண்மை விஷயங்களை ஒளிவு, மறைவின்றி எடுத்துச் சொல்லக்கூடியவனே, எவன் ஒருவன் தெய்வத் தன்மையை யுணர்ந்து அதற்கேற்ப விவேகத்துடன் நடந்து கொள்பவனே. எவன் பிறரின் சுக துக்கமென்பதை நன்றுயுணர்ந்து ஆறுதலளிக்க வல்லவனே, அவனையே ஆசிரியனுய்க் கொள்ளலாம். இந்தக் குணங்களை ஒருங்கே பெற்றுள்ளவனே எதையும் எளிதில் விளக்கிக் காட்ட முடியும்.

சி:— இவர்களைத்தானே ஞானிகளென்று சொல்வது ?

கு:— அப்படிச் சொல்லிக் கொள்ளலாம்......அதில் ஒன்றும் குற்றமில்லையென்றாலும் ஞானிகள் என்பதின் உண்மை லக்ஷணம் வேறு வகைப்பட்டது.

சி:— அவர்களைத் தேடிப் பிடித்து அடைவதெப்படி ?

கு:— உண்மைக் குருவைத் தேடிப் பிடிப்பதென்றால் அவ்வளவு சுலபத்தில் முடியக் கூடியதல்ல. மண்ணில் எங்கு பார்த்தாலும். மகான்களென்று சொல்லப்படுகின்றவர்களும், ஞானிகளென்றும், யோகிகளென்றும் ஆயிரக் கணக்கில் நடமாடி வருகின்றார்கள். அப்படிக்கிருந்தாலும் ஒரு பெருங் கூட்டத்திடையே உண்மை விஷயமறிந்தவர்கள் ஒரு சிலர் தானிருப்பார்கள். அவர்களுங் கூட எது விஷயத்தையும் எடுத்துக்கூறத் தாங்களாக எவரையும் தேடி முன் வரமாட்டார்கள்.

சி:— அப்படியானால் அவர்களைக் காண முடியாதா ?

கு:— முடியாதென்பது ஒன்றுமேயில்லை. அவர்கள் இருப்பிடம் தேடி நாமாகத்தான் சென்றடைய வேண்டும். அத்துடன் மட்டிலுமல்ல, அவர்கள் கடாக்ஷத்திற்கும் காத்திருக்க வேண்டும்.

சி:— அப்படியே தேடியலைந்து அவர்களைக் கண்டாலும் நம்மை ஏற்றுக்கொள்வார்களா ?

கு:— ஏற்றுக்கொள்வது அல்ல, தானும் அவர்களைப் போய்க் காண்பவர்களின், மனப்பண்பையும் நடத்தையையொட்

டியதுமேயாகும். ஒருவனைச் சிஷ்யனாய் (சீடனாய்) ஏற்றுக்கொள்வதற்கு முன்னர் நன்றாய்ப் பரிசீலித்த பிறகு தான் ஒரு முடிவுக்கு வருவார்களென்றுதான் கூற முடியும்.

சி:— அப்படிப் பரிசீலனை செய்ய என்ன காரணம்?

கு:— நீ கேட்கும் குருவானவன் சாதாரண உலகத்தில் வாழ்க்கை நடத்துவதற்குரிய கல்வியறை புகட்டக்கூடிய சாதாரண ஆசிரியனைப்போல அன்று. இகத்திற்கு அப்பாற்பட்டதாயும் உலக வாழ்வை யொட்டியதாயுமுள்ள பொது விஷயங்களையும் ஈஸ்வரன் தத்துவ விசேஷங்களையும் எடுத்துக் காண்பிக்கும், இருவகையறிவைப் புகட்டுபவனே உண்மைக் குருவென்று ஏற்றுக்கொள்ளத்தக்கவன். அவனிடம் சீடனாகப் போக வேண்டுமேயானால், அவனால் இடப்படும் பரீக்ஷைக்குட்பட்டேயாக வேண்டும்.

சி:— அந்தப் பரீக்ஷைகள் என்னவோ?

கு:— குருவுக்கும் சீடனுக்குமுள்ள தொடர்பு, மரியாதை, அன்பு, பக்தி, விஸ்வாஸம், தியாகம் இந்நான்கும் ஒருங்கே அமைந்துள்ளனவா என்பதேயாகும். தவிர, இவையெல்லாம் உண்மையான சீடனிடம் எப்பொழுதும் அழியாமல் நிரந்தரமாய் இருக்கவேண்டிய பூஷணங்களாகும்.

சி:— குருவைப்போலவே சிஷ்யனும், குருவைப் பரிசீலிக்க வேண்டியதவசியந்தானே?

கு:— நீ கூறுவதும் உண்மைதான், ஆனால், அவை சகலவற்றிலும் பொருந்துமென்று சொல்வதற்கில்லை, மேலும், சகல விஷயங்களிலும் நன்றாய்த்தெரிந்த ஞானத்தையுடைய ஒருவனைக் குருவாகக்கொள்ளுமிடத்து அவனைப் பரிசீலிக்க வேண்டியதவசியமில்லை. அப்படியே பரீக்ஷிப்பதென்றாலும் அது முடியாத காரியமாகும்.

சி:— ஏன் அப்படி ?

கு:— ஒரு சீடன் தன் குருவைப்பற்றிச் சிந்தித்து முடிவுக்கு வரக்கூடிய அளவிற்கு அறிவு வளர்ச்சியடைந்திருக்குமேயானால் பின்னர் எதற்கு குருவை நாட வேண்டுமென்ற அவசியமேயில்லை யென்பதை ஒருவர் கூறாமலே தெரிந்து கொண்டு விடலாமே. ஆனால் தன் குருவைப் பற்றி வெளிப்படையாகவுள்ள விஷயங்களைத் தெரிந்து கொள்வதில் யாதொன்றும் குற்றமில்லை

சி:— இவ்விருவருக்குமுள்ள நெருங்கிய உறவைப்பற்றிக் கொஞ்சம் கூறுங்கள்.

கு:— ஒரு தந்தைக்கும் தாய்க்கும் மகனிடத்தில் உள்ள அன்பைப்போலவும், மகனுக்குத் தந்தையிடத்தில் அன்பு நிறைந்த பயபக்தியைப்போலவும் உள்ள உறவு தானிருக்க வேண்டியது,அதைப்போலவே தன் சிஷ்யன் வழிதவறிச் சென்றாலும் அதற்காக அவனைக் கோபிக்காமல் அவன் அறியாமைக்கு வருந்தி அவனை இதமான வார்த்தைகளினாலும், தானே செய்து காண்பித்தும்

தீய வழிகளில் செல்ல வொட்டாமல் தடுத்து தன் வசம் ஆட்கொள்ள வேண்டும்.

சி:— ஸ்வாமி, இவர்களை மற்றய ஆசிரியர்களுக்கு ஒப்பிட்டுக் கூறக்கூடாதென்றீர்களே அதன் விஷய மென்ன?

கு:— பொதுவாய் உலகில் மாந்தர்களில் எழுத்தறிவை யூட்டு பவனும், தொழிலறிவை யூட்டுபவனும், ராஜீய அறிவை யூட்டுபவனும் இன்னும் எத்தனையோ வகைகளில் அத னதன் அபிவிருத்திகளைக் கருதித் தேடியலைகின்றவர் களுக்கு அதிலுள்ள நுட்ப விஷயங்களை யெடுத்துக் கூறும் அனைவருமே குருமார்கள்தான். ஆனால் அவர் களின் போதனைகளெல்லாம் ஒரு குறிப்பிட்ட விஷ யத்தை மட்டிலும் தெரிந்துகொண்டு நடைமுறை வாழ்க்கையை மட்டிலும்தான் திறம்பட நடத்திச்செல்ல முடியும். நாம் தேடியலையவேண்டிய குருவோவெனில், மாய்கை நிறைந்த வுலகில் சிக்கி உழலும் பாமர மக்க ளுக்கு தெய்வத்தன்மையை யெடுத்துக்காட்டும் பார மார்த்திகயறிவைப் புகட்டி அஞ்ஞானம் அல்லது அவித்யை யென்னும் இருளைப் போக்கும் உண்மை வல் லமை கொண்டவரென்பதினால்தான் மற்றவர்களுக்கு ஒப்பிட்டுச் சொல்லப்படவில்லை.

சி:— ஆன்மீகவறிவுதானே பாரமார்த்திக மெனப்படுவது?

கு:— அதைத்தான் பாரமார்த்திகமென்றும், ஆத்மஞான மென்றும், கூறலாம்.

சி:— அதைப்போதிக்கின்றவர்களிலும் இருவகையுண்டோ?

கு:— ஆம். உண்டென்றுதான் கூறவேண்டும்.

சி:— அவர்கள் எப்படிப்பட்டவர்களோ...?

கு:— அவர்களும் ஞானிகள்தான். தன்னிடம் சரண்புகும் சீடர்களுக்கு போதிக்கும் வழிகள் வெவ்வேருகயிருக்குமேயன்றி, மற்றபடி எந்தக் குண தோஷங்களைக் கொண்டவர்களாய்க் கூற முடியாது. சில பெரியோர்கள் தங்களிடம் அண்டிவரும் சீடர்களுக்கு ஏதோ தங்களுக்குத் தோன்றியதைச் சொல்லி அதன்படி நடக்க ஆக்ஞையிட்டு, அவர்களை விட்டுச் சென்று விடுவார்கள். அதன் பின்னர் தன் சிஷ்யனைப்பற்றிய சிந்தனைக்கிடம் தருவதில்லை. சிலர் தன்னிடமே நெடுங்காலம் வைத்துக்கொண்டு, தான் போதித்தவற்றின்படி வழி தவருமல் நடந்து வருகின்ருர்களா வென்பதைப் பார்த்து வருகின்ருர்கள். இதில் முதலில் குறிப்பிட்ட பிரிவினர்களையடைய வேண்டுமானல் அதை நன்ருய்ச் சிந்திக்கத் தக்கது வேண்டும். அவர்கள் போதித்தபடி பின்பற்றிச் செல்லவேண்டுமேயானல் புத்தி சூக்ஷமம், ஞாபகசக்தி, திடத்தன்மை இவையெல்லாம் நன்ருய் அமையப்பெற்றிருக்க வேண்டும். அப்படியிருந்தாலுங்கூட, சில சமயங்களில் நழுவி விடுவதற்கும் ஹேதுவுண்டு. அடுத்த பிரிவினரையடைவதென்ருல், சீடனுக்கு எதையும் தெரிந்துகொள்ளும் திறன் இருந்தாலும் இல்லாவிட்டாலும் தன் குருவின் சமீபத்திலேயே யிருப்பதினுல் அவ்வப்பொழுது தனக்குத் தெரிய வேண்டியனவற்றை

தெரிந்துகொள்ள முடியும். அது மட்டிலுமல்ல, ஒரு சீடன் நன்ருய்த் தேர்ச்சி பெறுகின்றவரையில் தன் குருவின் நிழலில் இருக்க வேண்டுமென்பதுதான் உண்மைத் திட்டமும்கூட. இவ்விஷயத்தை ஒரு சிறு உதாரணத்தைக் கொண்டே நிர்ணயித்து விடலாம்.

சி:— அது வென்ன ஸ்வாமி?

கு:— உலகில் தோன்றியுள்ள ஜந்துக்களில் நாட்டில் மனித சமூகத்திடையே சஞ்சரிக்கும் வகைகளில் பூனையொன்று, குரங்கொன்றுமாகும். இவைகளின் குணத்தைக் கொஞ்சம் தெரிந்துகொள்வோம்.

1. குரங்கானது தான் ஈன்ற குட்டியை அது எங்கு சென்ருலும் தன் இடுப்பிலேயே கட்டிக்கொண்டே செல்கின்றது. சில சமயம் மரத்திற்கு மரம் தாவும்பொழுது குட்டியானது தவறிப்போய் தன் பிடிப்பை விட்டுக் கீழே விழுந்துவிட்டாலோ, தாய்க்குரங்கானது திரும்பவும் தன்னிடம் சேர்த்துக்கொள்வதில்லை. அதுமட்டிலுமல்ல, தாய், குட்டி, அவ்விரண்டையுமே மற்றக் குரங்குகள் தன் இனத்தில் சேர்த்துக்கொள்வதில்லை. ஏனென்ருல், தன் இனத்தாருக்கு வேண்டிய சாமர்த்தியம் இந்த இரண்டிற்கும் இல்லையென்று தீர்மானித்துக் கொள்கின்றதாம். அடுத்தாற்போல் பூனையின் ஸ்வபாவம் அப்படிக்கல்ல. தான் இரைதேடிச் செல்லுங் காலத்தில் தன் குட்டியை ஏதோ ஒருயிடத்தில் குறிப்பாய் வைத்து விட்டுச் செல்கின்றது. சில தன் வாயினுலே கவ்விக்கொண்டும் செல்வதுண்டு. தன் வேலை

முடிந்தபின்னர் தான் விட்டுச்சென்ற விடத்திற்குத் திரும்பவும் வந்து தன் குட்டிகளைப் பாதுகார்க்கின்றன. இதைத்தான் மார்கடக தந்திரம் (குரங்கின் முறை) மார்ஜால தந்திரம் (பூனையின் முறை) யென்றும் சொல்வது. இதைப்போலவேதான் நாம் பின்பற்றிச் செல்லும் குருமார்களின் முறைகளும் முதல் இனத்தாரைத் தேடியலைவதைவிட தன்னிடமே வைத்துக்கொண்டு போதிக்கின்றவர்களேயோ, அல்லது எங்கு சென்றாலும் திரும்பவும் தன் சீடனைத்தேடி வருகின்றவர்களேயோ அடைய முயற்சிப்பதுதான் சிறந்தது.

சி:— ஸ்வாமி, தாங்கள் கூறுகின்றபடி ஆன்மீக போதனையை தக்க முறையில் எடுத்துரைக்க வேறு எவரையும் நாடிச் செல்ல என் மனம் விரும்பவில்லை. அதுவும் தவிர ஆரம்பத்தில் தங்களைத் தேடிவந்து அநேக வினாக்களைக் கேட்டு அதற்கு முற்றிலும் விளக்கம் தெரிந்து கொள்வதற்கு முன், இடையில் விட்டுச்சென்று வேறு ஒருவரிடம் எதை தெரிந்துகொள்ள முடியும்? அல்லது எப்படி பின்பற்றிசெல்வது? இனி, எனக்குப் போதிக்க வேண்டிய சகல விஷயங்களையும் தங்களையன்றி வேறு எவரும் என் சித்தம் தெளியும் வகையில் எடுத்துரைக்க முடியாது. தாங்கள்தான், எனக்குற்ற துணைவன், இனி வேறு எவரையும் நாடிச் செல்லமாட்டேன். என்னை உண்மைச் சீடனாய் ஏற்று போதிக்க வேண்டியது தங்கள் கடமை. இனியும் என்னை அதிகம் பரீக்ஷிக்க வேண்டாம்.

கு:— அன்புள்ள சிஷ்ய, உன்னை பரீக்ஷிக்க வேண்டிய விஷயங்கள் ஒன்றுமில்லை. இதுவரையில் கூறிவந்ததின் கருத்தெல்லாம் குருவுக்கும், சீடனுக்குமுள்ள பிணைப்பைபற்றி சகலரும் தெரிந்துகொள்ள வேண்டியதை யொட்டியும், அதில் நீ எவ்வளவு தூரம் தெரிந்துகொள்ளுகின்றாய் என்பதற்குமேயாகும். தவிர, எவர் ஒருவனை சரணடைந்து, அவனிடமே சகல விஷயங்களையும் தெரிந்துகொள்ள வேண்டுமென்ற திடமான எண்ணமும், அந்தரங்க அபிப்ராயமும் கொண்டுள்ளார்களோ, அவருக்குத்தான் தெய்வீக சம்மந்தபட்ட நுணுக்கமான ரஹஸியங்களை தெரிந்துகொள்ளவும் முடியும். மேலும் சிலர் தங்களுக்கு விருப்பமானவற்றை தெரிந்துகொள்வதற்கு ஆரம்பத்தில் ஒருவனை நாடிச்சென்று சில காலத்திற்கு ரொம்பவும் வினயமாயும் பக்தியுடனும் நடந்துகொள்வதைப்போல் காண்பித்து, தங்களுக்குச் சாதகமானவற்றை தெரிந்துகொண்டு, உடனே தங்களுக்குச் சகலமும் வந்துவிட்டதாய் நினைத்துக்கொண்டு வெளியே சென்றுவிடுவார்கள். அத்துடன் நிற்பதுமில்லை. தான் எதைக் காரணமாய்க்கொண்டு ஒருவனை குருவாக ஏற்றுக்கொண்டார்களோ, அது விஷயத்தை அறவே மறந்து தான் கற்றவித்தையை குருவினிடமே காண்பிக்கவும் தலைப்பட்டு விடுவார்கள் அதனாலேற்படும் பலனையும் அனுபவித்துக்கொள்ளுவார்கள். இத்தகைய எண்ணம் எவருமே கொள்ளலாகாது என்றுதான் கூறலாம். சுருங்கக் கூறின் நெருப்புடன் கூடிவிளையாடும் சிறிய குழந்தைக்கேற்படும் பலனே இதன் முடிவாகும். இப்படிபட்ட நேர்மாறான எண்ணங்களை தன்னிடம்

அகலவொட்டக் கூடாதென்பதை வற்புறுத்தவே, திரும்பவும் கூறப்பட்டது. உதாரணமாய், ஒரு மனிதன் ஜீவித்திருக்கும்வரையில் தன் சரீரத்தில் பிணைக்கப்பட்டுள்ள இதர அங்கங்களுடன் எவ்வளவு தொடர்பு கொண்டுள்ளானோ, அவ்விதமே தன் வழிகாட்டியான குருதேவரிடம் ஏற்படுத்திக்கொள்ளவேண்டும் (அதாவது தன் உயிரையும் உடைமையும் பாதுகார்த்தலைப்போலவே தன் குருவையும் பாவித்தல் வேண்டுமென்பதேயாம்). நிற்க, இக் குருபக்தி யென்பது மட்டும் ஒருவரால் கற்பித்துக் கூறி ஏற்படக்கூடியதல்ல. சர்வேஸ்வரதத்வத்தை யறிய வேண்டுமென்ற சிந்தனையோடு கூடிய ஜென்மாந்திர பூஜாபலனை எவனொருவன் பெற்றுள்ளானோ அவனுக்கன்றி வேறு எவருக்கும் கிட்டுவதில்லை யென்பதை நிச்சயமாய் கூற முடியும்.

சி:— குருதேவா, தாங்கள் கூறிவரும் இவ்விஷயங்கள் அப்படியே என்மனதில் பதிந்து விட்டன. இனி எது ஒன்றிலும் தங்கள் அபிப்பிராயத்திற்கு மாறாக, நடந்து கொள்ளமாட்டேனென்று நிச்சயமாய் கூறுகின்றேன், இதை தாங்கள் முற்றிலும் நம்பலாம்.

கு:— எனக்கெதற்கு உறுதிமொழியளிக்கின்றாய், அதன்படி நடந்துகொள்ள முயற்சித்தால் அவரவர்களுக்குத்தான் உதவிகரமாயிருக்குமேயன்றி, அதைக்கொண்டு பிறர் அடையப்போவது ஒன்றுமில்லை. நிற்க, எது ஒன்றிற்கும் முன்யோசனையில்லாமல் உறுதி கூறலாகாது. ஏனெனில் அதுவே மனிதனால் மனதில் ஏற்றுக்கொள்ளும் (சங்

கல்பம்) அல்லது ப்ரதிக்ஞையாகிவிடுகின்றது. அதாவது எதையும் திட்டமாய் செய்து முடித்துவிடுவேனென்ற வீரியம் பேசுவதேயாகும். அதை நிறைவேற்றி வைக்கும் ஆற்றல் நம்மிடம் உள்ளதாயென்பதை தீர ஆலோசிக்க வேண்டும். சகலரும் தான் சொல்லியபடி நடக்கத்தான் முயற்சிப்பார்கள். என்றாலும், அதை நிறைவேற்றி காட்டும் சக்தி ஒரு சிலருக்குத்தான் இருக்கும். அதிலும், ஈஸ்வர சங்கல்பமும் இவனுக்கு உறு துணையாக நின்றால்தான் முடியும். ஆகவே தீர யோசித்த பின்னர்தான் எண்ணத்தை வெளியிட வேண்டும்.

சி:— அப்படியானால் தன் எண்ணத்தை வெளியிடலாகாதா?

கு:— சொல்வதின் கருத்து அதுவல்ல, எவரும் தான் கொண்டுள்ள உறுதிப்படி தனக்குள்ளாகவே நன்றாய் சிந்தித்து நடந்துகொள்ள முயற்சித்தால், நல்வாழ்விற்கழைத்துக் செல்லும் வழிகாட்டியாகிவிடும், அதை பிறரிடம் வீரம் பேசித்தான் செய்யவேண்டுமென்ற அவசியமில்லை.

சி:— அப்படிச் சொன்னால் என்னவாகும்?

கு:— தான் எடுத்துக்கொண்ட பிரதிக்ஞை வெற்றியடைந்தால் கீர்த்தியுண்டாகும். அதைக் கண்டு சந்தோஷம் தாங்காமல் மகிழ்ந்துகொள்வான். அதோடு தானென்ற கர்வத்திற்கும் இடமளிப்பான். தோல்வியேற்பட்டாலோ அபகீர்த்தியடைவான். உடனே காமக்குரோதாதிகள் போன்ற குணங்களுக்கு இரையாகிவிடுவான். இதன் பலன்களும் ஓரளவு ஊகித்தறியக்கூடியதே. இதில்

மற்றுமொரு விஷயத்தை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும்.

சி:— அதென்னவோ ?

கு:— இம்மாதிரியான மாறுபாடு கொண்ட குணம் படைத்தவர்களை சீடனாய் யேற்றுக்கொண்டு, ஸத்விஷயங்களைப் போதித்தாலும் அவனுக்கேற்படும் பலி, பாதகங்களுக்கும் அவரும் காரணமாகி விடுகின்றார்.

சி:— இதற்குமுன் விட்டு வைத்த விஷயங்களை எடுத்துரைக்கும்படி பிரார்த்திக்கின்றேன்.

கு:— அன்பனே! கேட்ட விஷயங்களனைத்தையும் ஒவ்வொன்றாய் எடுத்துக்கொண்டு கூறுவது ஸாத்யமல்ல. நமக்குத் தேவையானவற்றை மட்டிலும் சுருக்கமாக எடுத்துக் கொள்வோம். அது சரி, நாம் எதிலிருந்து விட்டு வைத்தோம் ?

சி:— ஞானிகளைப்பற்றியதும், ஈஸ்வரனைக்காணும் வழிகளைப் பற்றியதும், அத்துடன் ப்ரபஞ்ச ஸ்ருஷ்டியைப்பற்றியதும்தான்.

கு:— ப்ரபஞ்சத்தைப்பற்றித்தான் இதற்குமுன் கூறியாகி விட்டதே.

சி:— குருதேவா! அப்படிக்கில்லை. அடியேன் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயம் பாக்கியுள்ளன.

கு:— அதென்ன ?

சி:— மானிடர்களென்றும், ஜந்துக்களென்றும், மற்றய வஸ்துக்களென்றும் பல்வேறு ஸ்ருஷ்டிக்குக் காரணமென்ன?

கு:— இயற்கை, செயற்கை இவ்விரண்டிற்குமுள்ள பாகுபாடுகளைத் தெரிந்துகொள்வதற்கேயாம்.

சி:— தாங்கள் கூறிய விஷயங்களுக்கும் கடவுளுக்கும் நெருங்கிய சம்பந்தமுண்டோ?

கு:— இதிலென்ன சந்தேகம், ஈஸனுக்குச் சம்பந்தமில்லாத விஷயமொன்றிருந்தால் உலகம் தோன்றக் காரணமேயில்லை.

சி:- மனிதனும் அதில் கட்டுப்பட்டவன்தானே?

கு:— ஆம், மற்றவைகளைக்காட்டிலும் மனித ஜென்மம் தான் ஈஸனிடம் அதிகத் தொடர்பு கொண்டுள்ளவையாகும்.

சி:— அதெப்படி?

கு:— உலகிற்கும் மனிதனுக்குமுள்ள தொடர்பைப்பற்றிக் கொஞ்சம் தெரிந்து கொண்டால், கடவுளின் அமைப்பையும் தெரிந்து கொள்ளமுடியும். ஸகலவற்றையும் படைத்தவன் ஒருவன்தான் என்பது நன்கு தெரிந்த விஷயம். இதில் ஜீவராசிகளையும் மற்றுமுள்ள வஸ்துக்களைக் கொண்ட மண்ணுலகை ப்ருஹ்மாண்டமென்றும் மனித சரீரத்தை பிண்டாண்டமென்றும் கூறுவதுண்டு.

சி:— மனித சரீரத்தைப் பிண்டாண்டமென்ற கூறக்காரணம்?

கு:– குறிப்பாய்ச் சொல்லுமிடத்து மனித சரீரமே ஈசனுல் படைப்பிக்கப்பட்ட உலகிற்கு ஒப்பாகும். அதுவும் தவிர, தன் தாயின் கர்பத்தின் உற்பவமாகும்பொழுது முதலில் பிண்டமாகவும், (முட்டைக்கருவொப்பாக) அதன் பின்னரே முழு உருப்பெற்று பூமியில் ஜனிக்கின்ருன். அவன் கர்பத்தில் வசித்த ஸ்தானத்தையே அண்டமாகக் கருதலாம் அதையொட்டித்தான் மனிதனைப் பிண்டமென்று கருதப்பட்டதின் காரணம். நிற்க ஸ்ருஷ்டிக்கப்பட்டுள்ள ஒவ்வொன்றிலும் ஈஸ்வரனே அவையவைகளுக்குரிய ஜீவ சக்தியாகவும் விளங்குகின்ருன் என்பதை அவசியம் அறிந்து கொள்ள வேண்டும்.

சி:– ஸ்வாமி, தாங்கள் சொல்வதிலிருந்து மனித சரீரத்திலும் ஈஸ்வரன் வியாபித்துள்ளான் என்பதுதானே பொருள்?

கு:– மனித சரீரமட்டிலுமல்ல, அண்டபிண்ட சராசரங்கள் என்று சொல்லப்பட்ட ஒவ்வொன்றிலும் அவனையன்றிய யிடமில்லை யென்றே கூறலாம்

சி:– அதுசரி, மாய்கையென்ற ஸ்திரீ பாவம்தானே மனிதனுக்குச் சிற்றின்ப வேட்கையைத் தூண்டுகின்றது?

கு:– அது ஒன்றுமட்டிலுமல்ல, அவ்வுணர்வுதான் எதையுமே இயங்கச் செய்வதற்கு காரணமாயுள்ளது.

சி:– ஸ்திரீகளுக்கு அந்தவுணர்வைத்தூண்டும் சக்தி யெதுவோ அதைச் சொல்லவில்லையே?

கு:— மாய்கையென்று கூறும்பொழுது, அதற்கெப்படி வேண்டுமானாலும் மாற்றுருக்கொள்ள வலிமையுண்டென்பதை உனக்குச் சொல்லவில்லையா?

சி:— அதை விபரமாய்க் கூறவில்லையே.

கு:— அதுவே ஸ்திரீகளிடம் வேறுருப்பெற்று அவ்வுணர்வை ஊட்டுவதற்கு காரண வஸ்துவாயிருக்கின்றது.

சி:— அதெப்படி ஸ்வாமி?

கு:— உலகில் ஒரு ஆடவன் ஒரு பெண்ணைக்கண்டு மோஹித்தால் மட்டும் போதுமா, அதைக்கொண்டு சேர்க்கையேற்பட்டுவிட்டதாய்க் கூறமுடியுமா? அதனால் ஒன்றும் ஆவதில்லை. ஆண்களைக்கண்டு பெண்களுக்கும் மோகம் கொள்ளும் தன்மை யில்லாவிட்டால் யெப்படி யொருவரையொருவர் நேசிக்கமுடியும் அல்லது கலவி கொள்ள முடியும்? இத்தகைய வுணர்வு அற்றவர்களையே (நபும்ஸகன்) அலியென்றும் கூறப்படுவதுமுண்டு. இதைத் த்ருஷ்டாந்தமாய் வைத்துத்தான் ஒவ்வொன்றையும், சிந்திக்க வேண்டும். சாதாரணமாய் ஒரு ஆணும் பெண்ணும் ஒன்றாய் கலந்தாலன்றி அவர்களிடம் வேறு ஒன்றும் உத்பத்திக் காரணமில்லையல்லவா? இம்மாதிரிதான் மாய்கையின் சக்தியானது ஒன்றிற்கொன்று மாறுபட்ட இயல்புகளைக்கொண்டு இயங்குவதாய்க் கூறலாம்.

சி:— இவ்வளவு விஷயங்கள் எதற்கு?

கு:— பரமேஸ்வரனை தெரிந்துகொள்வதற்குத்தான்.

சி:— அதற்கென்று இவ்வளவு மாறுபட்ட அமைப்புகளா?

கு:— இதுமட்டிலுமல்ல, இன்னும் மனிதனின் புத்திக்கும் கற்பனைக்கும் எட்டாத எத்தனையோ விஷயங்களுண்டு. ஆனால் குறிப்பாயுள்ள ஒன்றிரண்டிலிருந்து தெரிந்து கொள்ள முடியாத ஒன்றை பலதரப்பட்டவைகளைக் கொண்டு எப்படி தெரிந்துகொள்ள முடியும்?

சி:— ஸ்வாமி, இவ்விஷயங்களனைத்தையும் தெரிந்துகொண்டு விட்டால் ஈஸனையும் தெரிந்து கொண்டுவிடலாமல்லவா?

கு:— சகலரும் ஏட்டளவில் எழுதி வைத்துள்ளவற்றை தெரிந்துகொண்டுவிடலாம். ஆனால் அவனையறிந்து கொள்வதுதான் கடினமான விஷயம். எதற்கென்றும் முயற்சியெடுத்துக்கொள்வதில் யாதொரு குற்றமும் கூற இயலாது

சி:— தன் சரீரத்தில் வியாபித்துள்ள ஈஸ்வரனைத் தெரிந்து கொள்ள இயலாதா?

கு:— நீ சொல்வது உண்மைதான். வெளியுலகில் தன் கண்ணால் பார்த்துத் தோன்றும் ஒவ்வொரு நிகழ்ச்சிகளிலிருந்தும் தெரிந்துகொள்ள முடியாத விஷயத்தை தன் சரீரத்தைக் கொண்டு தெரிந்துகொள்வது அவ்வளவு சுலபமென்று கூறிவிட முடியாது. ஆனால், முன் அத்யாயத்தில் கூறியது போல இதற்கும் ஆசையுண்டாவது யியற்கைதான். அந்த முயற்சியிலீடுபடும்பொழுதேற்படும் பல தடைகள் தான் முன் வந்து நிற்கும்.

சி:— அந்தத் தடைகளெதுவோ?

கு:— முதலில் என்னிடம் சந்தேக விளக்கங்கேட்ட, விஷயங் களேயாகும்.

சி:— மனிதனிடமுள்ள தீய குணங்கள்தானே?

கு:— ஆம், அதுதான் நல்லனவற்றைத் தடுத்து நிற்கும் தடைக ளாகும்.

சி:— ஸ்வாமி, இதைக் கூறுவதற்கா இவ்வளவு பிரயாசை?

கு:— அதற்குள் இவ்வளவு அசட்டைகொண்டு விடாதே. இதில் என்ன தெரிந்து கொண்டு விட்டாய்?

சி:— குருதேவா, மன்னிக்கவேண்டும். அசட்டையாக எதையும் நினைக்கவில்லை. ஆரம்பத்தில் தெரிந்ததோ, தெரியா மலோ தங்களிடம் கேட்ட அதே விஷயங்கள் திரும் பவும் நம் சிந்தனைக்குக் கொண்டுவரப்பட்டதே யென்று சந்தோஷமடைந்தேன். தவிர, ஒன்றையும் சரியாய்த் தெரிந்து கொள்ளவில்லை.

கு:— இதில் சந்தோஷமடையத்தக்க ஆச்சரியமான விஷய மொன்றுமில்லை. எடுத்துக்கொண்டு ஆராயப்புகுந்த சகலமும் ஒன்றையொன்று தழுவியதுதானே. அதுவும் தவிர, ஒரு முக்கியமான விஷயத்தை யறிய வேண்டுமே யானால் அதற்குத் தடையாகவுள்ள விஷயத்தை ப்ரதான மாய் வைத்துத்தானே சிந்திக்கவேண்டும் அப்படி யிருக்க, அத்துடன் ஒட்டியவைகளும் யிடையிடையே வந்து கொண்டுதானிருக்கும்

சி:– ஸ்வாமி, காமக்ரோதிகள்தான் இதற்குக் குருக்கிடோ, மற்றும் ஏதேனும் உண்டா ?

கு:– இவ்விரண்டிலும் தான் சகலமும் அடங்கியிருக்கின்றனவே, இன்னும் இதிலிருந்து பிரித்துக் கூறவேண்டிய தொன்றுமில்லையே.

சி:– பரந்தாமன் தன் தொழிலைச் செய்யும்பொழுது எந்தக் குணத்துடன் செய்கின்றார்.

கு:– எதையும் செயலாற்றும் வலிமை கொண்டவற்றையே சகுனம் என்று சொல்லப்படுவது. அதைக்கொண்டுதான் ஈஸன் தன் காரியங்களைச்செய்து முடிக்கின்றான்.

சி:– சகுன ஸ்வபாவம் என்பதின் பொருளென்ன ?

கு:–சகலவற்றையும் பிரேரேபணை செய்து காரியங்களைச்செய்து முடிக்கும் ஆற்றலையுண்டுபண்ணி அதையே ஆக்ஞையாகக் கொண்டு உத்ஸாகத்தை ஊட்டக்கூடியதாகும். பாவமென்பதின் பொருள் கற்பித்தல் அல்லது கற்பித்துக்கொள்ளுதல் ஸ்வ என்பதின் பொருள் தன்னையே குறித்துக்கொள்வதாகும். இவ்விரண்டையும் சேர்த்துத் தான் ஸ்வபாவம் என்று கூறப்படுகின்றது. (தனக்குள்ளாகவே எதையும் கற்பித்துக்கொள்ளும்) தன்மையென்பதேயாகும். இந்தக்குணத்தையே மனிதர்களிடம் வியாபிக்கச் செய்யத்தான் ஸக்தியம்ஸமான ஜகன்மாதா தூண்டுகின்றாள். இதைப்போலவே ஈஸனிடம் இரைஞ்சுகின்றாள் என்றாலும் பொருந்தும்.

வேறு வகையில் கூறுமிடத்து ஈஸனுடன் ஸாமரஸ்யம் கொண்டு (இரண்டும் ஒன்றுய்க்கலப்பது) அல்லது ஐக்யப்பட்டு ஜெகத்ஸ்ருஷ்டி போன்ற காரியத்தை நடத்தி வைக்கின்ருள் என்றும் கூறலாம்), எப்படி யெனில், ஒரு கிரஹஸ்தன் (இல்லற வாழ்வு நடத்து பவன்) தன் மனேவியுடன் எந்த வகையில் இல்லற தர்மத்தை நடத்துவானே, அவனுக்கு எங்கெந்தக் காரி யங்களில் மனேவியானவள் உதவி யளிக்கின்ருளோ, அதைப்போலவும், மற்றும் ஈஸனுல் செய்யப்படும் சகல காரியங்களிலும் அவனிடமிருந்து தனித்துப் பிரியாமல் ஒன்றுய்க்கூடியே செய்து முடிப்பதாயும் கூறலாம்.

சி:— ஈஸ்வரன் செய்யும் காரியங்களே ஏன் ஒரு தொழிலுக்கு ஒப்பிட்டு கூறப்பட்டது?

கு:— உலகின் சாதாரண நடைமுறை பழக்கத்தை அனு சரித்து அப்படிக் கூறப்படுகின்றதே யல்லாது, அதன் உண்மை ரஹஸியம் வேறு விதமாகத் தானிருக்கும். பொதுவாய் அவனுடைய செயல்கள் யாவும் லீலா விநோத விளையாட்டுகளேயாம்,

சி:— இதன் கருத்து விளங்க வில்லேயே.

கு:— லீலா விநோதமென்பது மனதிற்குச் சந்தோஷத்தைக் கொடுக்கும் ஒரு விதக் கேளிக்கையாகும். அது எப் பொழுது ஏற்படுகிறதென்றுல், தன்னை மீறிய உத்ஸாகம் உண்டாகும் பொழுதுதான் அத்தகைய கேளிக்கை

களில் ஒன்றுதான் தாண்டவம் அல்லது நடனமென்று சொல்லப்படும் (அதைத்தான் நாட்டியமென்றும் கூறுவது). ஈஸ்வரனுக்கு மற்றெல்லாவற்றையும் விட இந்த நடனம் அதிக ப்ரியத்தையும் சந்தோஷத்தையும் அளிக்கின்றதென்பது இதிஹாஸ புராணங்களின் சித்தாந்தமாம். அவர் ஆடுகின்ற நடனத்தின் எதிரொலிதான் லோக ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் போன்ற சகல கிரியைகளுமாம். அதை யொட்டியே அவர் தாண்டவ நடன காக்ஷியை, மக்கள் பார்த்து தெரிந்து கொள்ள வேண்டுமென்ற நோக்கத்துடன் தேவாலங்களில் உருவத் தோற்றமாய் நிர்மாணிக்கப்பட்டு, ப்ரெதிஷ்டை செய்யப்பட்டுள்ளன.

சி:— இதில் உலகம் எப்படி யுண்டாகின்றது?

கு:— சப்தமென்றால்—ஒலி யென்று பொருள் கூறலாம். அந்த ஒலியிலிருந்து இயங்குவதுதான் நாதம். அந் நாதத்தின் ஆரம்பமும், முடிவுமே ப்ரணவமென்றுச் சொல்லப்படுவதின் பொருளாகும் இப்ரணவத்திலிருந்து உண்டானதே உலகம், சுருங்க கூறின் ப்ரணவமென்பதின் உட் கருத்து அதுவே ஈஸ்வரனென்றும், உலகமென்றும் கூறத் தகுமாம்.

சி:— ஸ்வாமி, ஈஸனை ஒரு கிரஹஸ்தனுக்கு ஒப்பிட்டுச் சொன்னதின் கருத்தென்ன?

கு:— ஒரு குடும்பத்தை நடத்திவர வேண்டியதின் பொருட்டு அக் குடும்பத் தலைவனுக்கு எவ்வளவோ பொறுப்புகள்

சுமத்தப்படுகின்றனவென்பது உலகமறிந்த விஷயம். தன் பொறுப்புகளில் சிலவற்றை தன்னைச் சார்ந்தவர்களிடம் பிரித்துக் கொடுத்து அதைச் செம்மையாய் செய்து வருகின்றார்களா வென்பதை நன்கு கவனித்து வருகின்றான். அவனிடமிருந்து மற்றவர்கள் ஏற்றுக் கொண்ட பொறுப்பை சரிவர நடத்தாவிட்டாலும் அவைகளை அக் குடும்பத் தலைவன் அவ்வப்பொழுது கவனிக்காவிட்டாலும் அவனது குடும்ப வாழ்வு சீர் கெட்டு விடும். அதையும் மக்கள் தன் முன்னால் பார்த்துக் கொண்டுதானிருக்கின்றார்கள். அதைப் போலவே, ராஜீய நிர்வாகங்களிலும் யேற்படுவதுண்டு. நிற்க, குடும்பத்திற் கொரு தலைவனென்றால் ராஜியத்திற்கு மொரு தலைவனுண்டு. இக் குடும்பங்களும் ராஜ்யங்களும் சேர்ந்ததே ப்ருமாண்டமாகும். அதையே ஒரு குடும்பமாக ஒப்பிட்டுச் சொல்லலாம். அதற்கு அதிபதியாய் விளங்குபவன் ஈஸ்வரன் ஒருவன்தான் என்ற காரணத்தினால் அவனை ஒரு குடும்பத்திற்கு ஒப்பிட்டுச் சொல்லப்பட்டது.

சி:— ஈஸனைக் கண்டதாய்க் கூறினீர்களே ; எத்தனையோ மஹான்களும், பெரியோர்களும் ஈஸனைத் தாங்கள் கண்டதாய்க் கூறுகின்றார்களே ?

கு:— அது வுண்மையாகவு மிருக்கலாம். பிறர் அறிந்து கொள்ளவும் முடியாது, பிறருக்கு எடுத்துக்காண்பிக்கும் வஸ்துவுமல்ல.

சி:— மஹான்களையும், ஸாதுக்களையும், ஞானிகளையும், அப் பெயரிட்டழைக்கும் காரண மென்ன ?

கு:– சாதாரண உலக வாழ்வு மனிதர்களுக்கில்லாத ஒரு தனி அம்ஸம் பொருந்தி யிருப்பதினாலும், மற்றவர்களைக் காட்டிலும் சில கடைப்பிடிக்கும் கொள்கைவிஷயங்களில் மாறுபட்டிருப்பதினாலேயுமேயன்றி வேறெதற்குமல்ல. அதுவும், பிறரால் கூறப்படுவதுவேயன்றி அவர்கள் வெளிக்காட்டிக் கொள்ளமாட்டார்கள்.

சி:– ஈஸனை எதன் உதவியைக்கொண்டு தெரிந்து கொண்டார்கள், அல்லது தெரிந்து கொள்ள முடியும்?

கு:– உலகில் சகலரும் ஈஸ்வரத் தன்மையடைய வேண்டுமென்று அல்லது காண வேண்டுமென்று வகுக்கப்பட்டுள்ள முறைகளும் (வழிகளும்) பலவுண்டு. அவைகளைத் தங்களுக்குச் சாத்யமான வழியில் கடைப்பிடித்தொழுகி அதன் துணையைக் கொண்டுதான் அந்நிலைமையெய்தினார்கள். (அல்லது அடைய முடியுமென்று கூறப்பட்டுள்ளது). அந்த மார்க்கங்களையெடுத்துக் காட்டுவதுதான், வேதம், புராணம், மற்றுமுள்ள மந்திர ஸாஸ்திரம் போன்ற நூல்களாகும். அவைகளையே சட்டதிட்டங்களென்றாலும் பொருந்தும்.

சி:– அந்த மார்க்கங்களைப் பற்றிக் கொஞ்சம் தெரிந்து கொள்ள ஆசைப்படுகின்றேன்.

கு:– பக்தி மார்க்கம், கர்ம மார்க்கம், ஞான மார்க்கமென மூன்று வகைகளாகும்.

சி:– இவைகளில் எதைத் தெரிந்து கொள்ள வேண்டும்?

கு:- இம்மூன்றிலும் அவரவர்களுக்கு எது சாத்யமாய்ப் பின் பற்ற முடியுமோ, அதையே கடைப் பிடிக்கலாம். இதில் ஒன்று உயர்வு மற்றொன்று தாழ்வென்றும் கூறுவதற்கில்லை.

சி:- இந்த நூல்களும் கடவுளால் ஸ்ருஷ்டிக்கப்பட்டவைகள் தானா?

கு:- இதைப்பற்றி முன்பு கூறப்பட்டிருக்கின்றதே அதையே திரும்பவும் கேட்கின்றாயே. என்றாலும் கொஞ்சம் ஞாபகப்படுத்துகின்றேன். முதலில் ஈஸனிடம் உத்பலமான உண்டாக்கப்பட்ட ஸ்ருதியிலிருந்தும், யுக்தியிலிருந்தும் தன் புத்தியின் உதவியைக் கொண்டும் அனுபவத்திலிருந்தும். தொன்று தொட்டு முன்னுள் பெரியோர்களென்று சொல்லப்படும் ரிஷி, முனீஸ்வரர்களின் சொந்த அனுபவத்தைக் கொண்டும் உண்டாக்கப்பட்டதேயாகும். அதைத்தான் சம்ப்ரதாய முறையில் எதையும் அனுஷ்டிப்பதற்கு முன்னால் ஸ்ருதி, யுக்தி, அனுபவம் இம்மூன்றையும் தழுவியபடியிருக்க வேண்டுமென்றும் கூறுவது.

சி:- இதன் உட் கருத்தென்னவோ ?

கு:- தான் கடைப் பிடித்தொழுகும் எந்தக் காரியமும் வேத புராணங்களில் சொல்லும் சட்ட திட்டங்களை யனுசரித்த முறையில் இருக்க வேண்டுமென்பதேயாகும்.

சி:— அது சரி, இவைகளைப் படித்தறிந்த பின்னர்தான் ஏதேனும் ஒன்றை கடைப்பிடிக்க வேண்டுமா?

கு:— சகல வற்றையும் முற்றிலும் தெரிந்து கொண்ட பிறகு தான் செயலில் இறங்க வேண்டு மென்றால், அதற்குரிய காலம் போதாதாகையினால் சில குறிப்பானவற்றை மட்டிலும் தெரிந்து கொண்டாலுங் கூட மற்ற வழி களின் தன்மைகள் தெளிவாகி விடும். தவிர சகல வற்றையும் பூராவும் படித்துத் தான் தெரிந்து கொள்ள வேண்டு மென்ற அவாக் கொள்வதைக் காட்டிலும் எதிலு மடங்கியுள்ள முக்கியமான விஷயங்களை மட்டிலும் மனதில் பதிய வைத்துக்கொள்ள வேண்டியதே ரொம்பவும் அவசியம். மேலும், தங்க ளுக்கு சாத்தியமான வரையில் கீதை, பாகவதம் போன்ற கடவுள் ஸம்பந்தப்பட்ட நூல்களில் சிலவற்றை யேனும் படித்துத் தெரிந்து கொள்ளத்தான் வேண்டும், ஏனெனில் எவ்வளவுதான் பிறர் எடுத்துக் கூறினாலும் தான் ஒரு முடிவுக்கு வரவேண்டுமேயானால், ஏதோ ஒரு நூலை ஆதாரமாய் வைத்துக்கொண்டால்தான் முடியும்.

சி:— ஸ்வாமி, தாங்கள் கூறுவதைப் போலல்லாமல் எந்த சாஸ்திர ஆராய்ச்சியுமில்லாமல் அவ்வழிகளில் தேர்ச் சியுமில்லாமல் அவ்வழிகளில் தேர்ச்சியும் பெறுமல் கடவுள் நிலை யெய்திபவர்களும் உண்டென்று கூறப்படு கின்றதே அது உண்மைதானு?

கு:— அதுவும் சரிதான், மேலும் அது வேறு விஷயம். அந்நிலை சகலருக்கும் கிட்டக்கூடியதென்று கூறுவதற்கில்லை. அப்படியே ஓரிருவர் அடைந்திருந்தாலும் அவர்கள் முன் ஜென்மத்தில் அதற்கென்றே அரும்பாடுபட்டு அடைய முயற்சித்திருக்க வேண்டும். அம்முயற்சியின் பயனாகவே இம்மனிதப் பிறவியில் கடவுள் நிலை யெய்திருக்கலாம் ஆக, அதுவே சகலருக்கும் பொருந்துமென்று கூறுவதற்கில்லை.

சி:— எல்லாவற்றையும் தெரிந்து தேர்ச்சியடைய முடியாதென்றீர்களே, ஏதோ ஒன்றில் நல்ல தேர்ச்சி பெற்ற பின்னர்தானே தங்கள் வாழ்க்கையை நடத்த ஆரம்பிக்கின்றார்கள்?

கு:— ஸத் விஷயங்களைத் தெரிந்து கொள்வதற்கும் உலக வாழ்வைக் கடத்திச் செல்வதற்கும் ஸம்பந்தமில்லை, அதுவும் நன்றாய்க் கற்றறிந்தவர்கள் மற்றவர்களைக் காட்டிலும் தாங்கள் கடைப்பிடிக்கும் வாழ்க்கைக் கொள்கைகளை சற்றுத் திறம்பட நடத்திக் காட்ட முடியும். நிற்க, எது ஒன்றையும் அவையவைகளுக்குத் தனித் தனியாக அமைக்கப்பட்டுள்ள விதி முறைகளின்படி அல்லது திட்டங்களின்படி படித்தறிந்த பின்னர் தான் தான் செய்யும் ஒரு தொழிலுக்கு செயலாற்றும் அதிகாரம் பெற்றவர்களாகின்றார்கள். உதாரணமாய் ஒரு வக்கீல் அல்லது வழக்கறிஞர் தன் தொழிலுக்குத் தேவையான நீதிச் சட்டங்களில் தேர்ச்சி பெற்று, அதற்கான அங்கீகாரப் பத்திரம்

(ஸர்டிபிக்கேட்) பெற்றுக்கொண்ட பின்னரும் ஒரு டாக்டர் அல்லது வைத்தியன் அதற்கான வைத்திய ஸாஸ்திரங்களில் தேர்ச்சி பெற்ற பின்னரும் தங்கள் தொழில்களைச் செய்வதாய் வைத்துக் கொள்வோம். கோர்ட்டில் தாவாக் கொடுக்கச் சென்ற வக்கீலின் கட்சிக்காரர்களும், வைத்தியனிடம் சிகிச்சைக்குச் சென்ற நோயாளிகளும் தங்கள் தங்களின் விருப்பப்படி அனுகூல மடைந்து விடுகின்றார்களா? வழக்குத் தொடுத்தவர்களில் எத்தனை பேர் தோல்வியடைந்து விடுகின்றார்கள். வைத்திய சிகிச்சையில் எவ்வளவு பேர் மரணமடைந்து விடுகின்றார்கள். நன்றாய் படித்தறிந்தவர்களென்ற அத்தாட்சிப் பத்திரம் பெற்றவர்களிடம் தானே சென்றார்கள்? அப்படி யிருக்க இவர்களுக்குத் தோல்வி யேற்படக் காரண மென்ன? இதைத்தான் இங்கு ஆராய வேண்டும். இவை யொருபுற மிருக்கட்டும். எதிலும் தேர்ச்சி பெற்றதாயுள்ள அங்கீகாரப் பத்திர மட்டிலும் வெற்றிக்குத் துணையாகாது. தன்னுடைய புத்தி சூட்சமும் அனுபவமும் இத்துடன் கூடி யிருந்தால் தான் வெற்றிக்கு உதவியாக விருக்கும். தவிர, இவ்வளவும் ஒருங்கே கூடினாலும் இவைகளை மறைமுகமாக வேடிக்கை பார்த்து மகிழ்ந்து கொண்டிருக்கும் பரந்தாமனின் ஆக்ஞையும் (கட்டளையும்) கடாக்ஷமும் (அருளும்) சம்பந்தப்பட்டவர்களுக்கு அனுகூலமா யிருந்தாலன்றி, வெற்றி காண முடியாது. இது நிற்க, தெய்வீக சம்பந்தப்பட்ட கல்வி விஷயம் வேறாகும். அதைத்தான் ஆன்மீகக் கல்வி யெனப்படும். (அதையே ஞானம் போதிக்கும் கல்வி யென்றும்

கூறலாம்). தவிர, இதை சாஸ்திர ப்ரமாணங்களைக் கொண்டு மட்டிலும் நிர்ணயம் செய்துவிட லாகாது. ஏனெனில், போதனே யென்பதை இரண்டு வகையாகப் பிரித்துக் கூறலாம். ஒன்று தொகுத்து வைக்கப் பட்டுள்ள நூல்களை ஆதாரமாய்க் கொண்டு போதிப் பதும் மற்ருென்று தான் கடைப்பிடிக்கும் கொள்கை களையும், அதை யொட்டிய அனுபவத்தையும் கொண்டு போதிப்பது மாகும். கடவுளைக் குறித்த சம்பந்தப்பட்ட மட்டிலும் இவ்விரண்டு வழியிலும் போதிக்கப்படுவது முண்டு. பூமியில் மனித ஜெனன மெடுத்த பல மகான் கள், எந்த நூல்களின் உதவியுமின்றி தன் புத்தி சூக்ஷமத்தினுலும் வாழ்க்கை அனுபவத்தினுலும் மிகத் தெளிந்த ஞானிகளாய் விளங்கி யிருக்கின்ருர்கள். ஆகவே, இவ்விஷயத்திற்கு (ஞானிகளாய் விளங்க) பகவத் சங்கல்பத்துடன் கூடிய பூர்வ ஜென்மாந்திர புண்ய விசேஷமும் இருந்தாலன்றி மற்றெதுவும் உதவி செய்துவிடுமென்று கூற யியலாது. அதற்கென்று எதையும் படித்தறிய வேண்டாமென்ருே அல்லது எந்த வழிகளையும் பின்பற்ற வேண்டாமென்ருே மனதில் கொள்ளலாகாது. அப்படித் திட்டமிட்டுக் கூறவும் முடியாது.

சி:- கடவுளைத் தெரிந்து கொள்ளவோ அல்லது அது சம்பந்தப்பட்ட நூல்களைப் படிப்பதற்கோ ஏதோ ஒரு குறிப்பிட்டவர்கள் தான் தகுதியுடையவர்களென்ற திட்டங்கள் ஏதேனும் வரையருக்கப்பட்டுள்ளதா?

கு:— மனிதனுக்கு எது ஸாத்யம் அல்லது ஸாத்யமற்றது யென்று வேண்டுமானால், அவரவர்களின் சொந்த அனுபவத்தைக் கொண்டு நிர்ணயித்துக் கொள்ளலாமே யல்லாது, ஏதோ ஒரு சிலருக்குத்தான் எதுவும் சொந்த மென்று கூறுவதற்கில்லை.

சி:— யார் வேண்டுமானாலும் மார்க்கங்களைப் பின்பற்றி நடக்கலாமல்லவா?

கு:— இதையும் கேட்க வேண்டுமா; ஈஸனால் படைப்பிக்கப் பட்ட சகலரும் அவனருளுக்காகக் காத்திருப்பவர்கள் தானே? ஆகவே அதற்கென்ற வழிகளைப் பின்பற்றி பிரார்த்திக்க வேண்டியவர்கள் தானே; அப்படி யிருக்க இதைத் தனி ஒருவருக்கென்று யெடுத்துரைக்க வேண்டியதவசியமில்லை.

சி:— குரு தேவா, இதற்கு முன்னால் அவரவர்களுக்கேற் பட்ட தொழிலைத்தான் செய்ய வேண்டு மென்றீர்கள். இப்பொழுது கடவுள் மார்க்கத்தை சகலரும் பின்பற்ற லாமென்று கூறுகின்றீர்கள். இதன் உட்கருத்து விளங்கவில்லையே.

கு:— நீ நன்றாய்ச் சிந்திக்காமல் கூறுகின்றாய். உன்னிடம் கூறப்பட்டதின் கருத்து அதுவல்ல. உலகில் மனிதன் ஜீவித்து வாழும் வரையில் ஏதோ ஒரு தொழிலைச் செய்துதான் ஆக வேண்டும். அப்படிக்கில்லாமல் போனால் தன் வாழ்விற்குரிய வசதிகளைப் பெற்றுக் கொள்ளத் தேவையான ஊதியம் கிடைக்காது.

(பொருள்—செல்வம் கிட்டாது) மனிதன் அவசியம் தொழிலைச் செய்யத் தூண்டுவதற்குத் தான் பொருள் தேடிச் சேமித்து வைக்க வேண்டுமென்ற அளவுக்கு மீறிய ஆசை ஒரு புற மிருந்தாலும், முதற் காரணமா யுள்ளது அவனது உபாதை யென்று கூறப்படும் வயிற்றுப் பசிப்பிணியே யாகும். இந்தப் பசியின் லக்ஷணமோவெனில் ரொம்பவும் கொடூரத் தன்மை வாய்ந்த தென்பதை அதிகம் கூறத் தேவையில்லை. மேலும், இந்தப் பிணியைப் போக்கிக் கொள்ள அன்னத்தின் உதவி தேவைப் படுகின்றது. அதைத் தயார் செய்வதற்குத் தானியம் தேவை. அதைச் சம்பாதிப்பதற்குத் தனம் தேவை, அதையடைய உழைப்பதவசியம். உழைப்பின் தன்மை தொழிலாக முடிகின்றது பொதுவாக மனிதனுக்குப் பசியின் கொடுமை தெரியாவிட்டால் அவன் எதையும் தேடி யலையப் போவதில்லை. பெரியோர்களின் பழமொழிக் கிணங்க பசி வந்திட பத்தும் பறந்து போம். பசியினால் மனிதன் அசுரத்தன்மை கூட சில சமயங்களில் அடைந்து விடுகின்றான். ஆகவே, தன் தேவைக்காக தான் செய்யும் தொழிலுக்குத் தக்க உபாயத்தை யடையச் செய்பவன் கடவுளே யல்லவா; அதோடு, தான் செய்யும் காரியங்கள் ஒவ்வொன்றிற்கும் மறை முகமான உதவியளிக்கின்றவனும் அவனேயல்லவா; இவை யெல்லாம் நடை முறை உலகைப் பொருத்த மட்டிலுந்தான் என்றாலும் யார் எந்தத் தொழிலைச் செய்த போதிலும், தெய்வத்தை வழிபடக் கூடா தென்று எந்தத் திட்டத்தையும் கூற முடியாது. ஆற்றில்

ஓடும் நீரும், ஆகாசத்தில் ப்ரகாசிக்கும் சந்திரனும், பூமியில் பெய்யும் மழையும், ஒரு இனத்தவருக்கு மட்டிலு மென்று ஏற்படவில்லையல்லவா; அவைகளெல் லாம் எப்படிப் பயன்படுகின்றதோ, அல்லது மக்களுக்கு அவைகளிடம் எவ்வளவு தொடர்பு உண்டோ, அதே உறவு கடவுளிடமுமுண்டு. ஆகவே, நீதியும், நேர் மையும் குன்றாத எத்தொழிலைச் செய்பவராயினும் சரியே, அவர்கள் கடவுளைக் காணும் அருகதை யுடையவர்களே.

சி:— பகவான் உலகில் எவ்வகையில் வியாபித்துள்ளார் என்பதைப் ப்ரத்யக்ஷ உதாரணத்தைக் கொண்டு தெரிந்து கொள்ள முடியாதா?

கு:— நீ கேட்பது உண்மைதான். ஆனாலும் சகலவற்றையும் அதைக்கொண்டு தான் தெரிந்து கொள்ள வேண்டு மென்பது முடியாத காரியம். குறிப்பாக ஒரு சிலவற்றி லிருந்து தெரிந்துகொள்ளலாமென்பதை மட்டிலும் கூற லாம். ஆகாசமாகவும், அதில் தோன்றும் சூரியனாகவும், சூரியனுக்குரிய ஒளியாகவும் அதன ஜ்வாலையாகவும், சந்திரனாகவும் அவன் ஒளியாகவும், மேகமாகவும், அதனின்று பொழியும் மழையாகவும், ஒரு செடியாகவும் செடியிலிருந்து தோன்றும் புஷ்பமாகவும், அதற்குரிய மணமாகவும், ஒரு மரமாகவும், அதனுடைய நிழலாகவும், இதைத் தவிர மனித சரீரத்தில் பஞ்ச பூதம் பஞ்ச ப்ராணன், தசேந்திரியம், பஞ்ச கோசங்களாகவும், நினைவிற்கு இருப்பிடமாயுள்ள மனமாகவும், அதற்

மறைமுகமான சாக்ஷியாகவும் இன்னும் இதைப் போலுள்ள வற்றிலும் மற்றுமுள்ளவைகளிலும் அதன் ஜீவாதாரமாகவும், அதிலிருந்து ப்ரதிபலிக்கும் தோற்றங்களாகவும் வியாபித்துள்ளான் என்பதை ஊன்றிக் கவனித்தால்தான் புலப்படும். இதையே முன்னொரு இடத்தில் வேறு வகையில் சொல்லப்பட்டிருக்கின்றது.

சி:— சகல வற்றிலும் ஈஸ்வரத் தன்மை நிரம்பியுள்ளதென்று கூறும் பொழுது அவனுக்கு மனித சரீரத்தை ஒப்பிடக் காரண மென்ன?

கு:— பகவான் சகலவற்றிலும் வியாபித்துள்ளா னென்பது உண்மைதானென்றாலும், அதைத் தெளிவாய் அறிந்து கொள்ளும் வல்லமை கொண்ட புத்தியை (அறிவை) மனிதனைத்தவிர மற்றெந்த ஜீவராசிகளோ வேறு எந்த வஸ்துக்களோ பெற்றிருக்க வில்லை. மனிதப் பிறவி யெடுத்த ஒருவன் தான் அதை தெரிந்து கொள்ளமுடியும். மேலும் ஒரு தனி மனிதன், தன்னைக் காட்டிலும், அறிவில், ஆற்றலில், வீரியத்தில் மிகுந்த மற்றொருதன்னை யொத்த மனிதனைத்தான் புகழவும், போற்றவும் செய்கின்றானே யல்லாது வேறு ஜீவராசிகளை யல்ல. இதைச் சுருங்கக் கூறுமிடத்து மனிதன், மனிதனை யன்றி வேறு ப்ராணிகளையோ, அல்லது மிகைப்படுத்தி விரும்புவதில்லை. இதை யொட்டித்தான் மற்ற பிறவிகளைக் காட்டிலும் மனிதப்பிறவிக்கு அதிக கௌரவம் அளிக்கப்பட்டுள்ளது. நிற்க, மனிதன் வணங்குவதற்கும் மனித உருவத்தையே தேடி யலைகின்றான், அதற்

கென்றே ஈஸனும் மனித உருவத்திலும் வியாபித்துள்ளான்.

சி:- ஸ்வாமி, பகவான் ஒருவன் தான் என்ற பொழுது, அவருக்கேன் பல பெயர்களும், பல உருவங்களும் உண்டாக்கப்பட்டது? (அல்லது கற்பிக்கப்பட்டது)

கு:- இதற்கு முன் கூறப்பட்ட வயிற்றுப்பசி யென்பது உலகில் ஜென்மமெடுத்த சகலருக்கு முண்டு. மேலும், அந்தப் பசியைப் போக்கிக்கொள்ள வேண்டிய பல்வேறு வகைப்பட்ட தான்யங்களும், காய், கனி வர்க்கங்களும் உற்பத்தி செய்யப்படுகின்றன. மனிதன் இவைகளை எப்படித் தனக்கு உபயோகப்படுத்திக் கொள்ளுகின்றான் என்பது தான் அறிய வேண்டிய முக்கிய விஷயம். சிலர் தானியங்களை மாவாக்கி கூழாகவும் சிலர் தானியங்களைச் சாதமாகவும், சமைத்துப் புசிக்கின்றார்கள். அன்னம் (சோறு) ஒன்றை மட்டிலும் புசித்தால் பசி தீர்ந்து விடாதா, அதற்கு ஏன் மற்ற வியஞ்சனங்களைத் தயாரித்துக் கொள்ளுகின்றார்கள்? தன் நாக்கிற்கு ருசியுள்ள பண்டங்களைத் தான் அது ஏற்றுக் கொள்கின்றது. அருசியான பதார்த்தங்களை விரும்புவதில்லை. அதையே காரணமாய்க் கொண்டுதான் தாங்கள் விரும்பும் வகையில் உணவு சமைத்துக் கொள்ளுகின்றார்கள். இன்னும் சிலர், இந்த உணவில் தனக்கொன்றும் பிரியப்படாமல் மாமிச பிராணிகளின் மாமிசத்தைச் சமைத்துப் புசிக்கின்றார்கள். பாலும், பருப்பும் புசித்தாலும் காய், கறி வர்க்கங்களைப் புசித்தாலும் சரியே, உணவு வகை

பல தரப்பட்ட தாயினும் ஒன்றைக்கொண்டே எத்தனை வகைகள் தயார் செய்யப்படுகின்றன. இவ்வளவும் தன் வயிற்றை நிரப்பும் ஒரு காரணத்தை யொட்டித் தானே; இதைப் போலவே ஈஸ்வரனைக் காண வேண்டுமென்ற தன் ஆன்மீகப் பசியைத் தீர்த்துக்கொள்ள வேண்டி தன் மனம் எந்த உருவத்தை வேண்டுகின்றதோ, அதைப் பின் பற்றி நடந்து கொள்ள முடியுமென்பதை யொட்டித்தான் பல் வேறு உருவங்கள் தோற்றுவிக்கப்பட்டன.

சி:— மார்க்கங்களில் கூறப்பட்டுள்ள விஷயங்களென்னவோ?

கு:— ஜெபங்கள் (கடவுளைக் குறித்த மந்திரங்களைக் குறிப்பது) பூஜைகள் (ஈஸ்வரனை உபசரித்து வழிபடுதல்) நாம பாராயணம் (கடவுளின் நாம விசேஷங்களைக் கொண்ட நூல்களைப் படித்தல்) நாம ஸங்கீர்த்தனம் (ஈஸ்வர நாமங்களைப் புகழ்ந்து பாடுதல்) களே மார்க்கங்களாகும். இதிலுள்ள எல்லா வற்றையும் தெரிந்து கொள்வதை விட, நமக்குச் சுலபமாய் எந்த வழியைப் பின் பற்ற முடியுமோ, அதை மட்டிலும் தெரிந்து கொண்டால் போது மென்றே சொல்லலாம்.

சி:— ஒவ்வொன்றையும் அதிகமாய்த் தெரிந்து கொள்ளா விட்டாலும் சுருக்கமாகவேனும் கூறலாகாதா?

கு:— நீ கூறுவது சரிதான். இவைகளை யெடுத்துக்கொண்டு ஆராயப் புகுந்தால், ஒன்றிற்கொன்று சிறிது முரண்பாடான கொள்கைகளாகத் தோன்றி விடலாம்.

அப்படியே நம் மனதில் பேதமாகத் தோன்றும் விஷயங்களுக் கிடமளித்து விட்டால் எந்த வழியையும் உறுதியுடன் பின் பற்றி நடக்க முடியாமல் போய் விடுவதும் சகஜம். அதோடு சகல வழிகளிலும் கற்றறிந்தாலும், ஒருவன் ஏதோ ஒரு வழியைத்தான் பின்பற்றிச் செல்ல முடியும். அது தான் மிகச் சிறந்ததாகும். நிற்க, மார்க்கங்கள் பற்றிய விஷயங்களைச் சுருக்கமாய்த் தெரிந்து கொள்வோம். மந்திர சாஸ்திரங்களென்பது வேதங்களிலிருந்து ஒவ்வொரு பகுதியாகப் பிரித்துக் கூறப்பட்டது. இவைகளை இரண்டு வகையாகக் கூறப்படலாம். மனிதன் தன்னுடைய வாழ்வில் கடைப்பிடித்தொழுக வேண்டிய வழிகளை யெடுத்துக் கூறும் தர்ம நீதிகளைப் போதிக்கும் விஷயங்களைத் தர்ம சாஸ்திரமென்றும், பகவானைக் குறித்துச் செய்ய வேண்டிய கடமைகளுக்கு உற்ற துணை எந்தக் காரியத்தை யெப்படிச் செய்ய வேண்டு மென்பதை வகுத்துள்ள வழி துறைகளைக் கொண்டதே மற்றொரு பிரிவாகவும் கொள்ளலாம். இந்தப் பிரிவைச் சேர்ந்தது தான் மந்திர சாஸ்திர சம்பந்தப்பட்ட விஷயங்களெல்லாம்.



சி:— இப்படி வழி துறைகள் வகுத்துக் காட்ட அவசிய முண்டோ?

கு:— ஒன்றைச் செய்ய வேண்டுமென்று உதிக்கும் பொழுது அதற்குண்டான வழி துறைகளைக் கூடுமான வரையில் பின் பற்றினல் நன்மை யடைய முடியும். ஆகவே

மார்க்கங்கள் அவசியமே. இனி விஷயங்களைக் கவனிப் போம். மந்திர சாஸ்திரங்களிலிருந்து உத்பவிக்கப் பட்டதுதான் ஜெபம் என்று சொல்லப்படுவதும் மந்திர மென்று குறிப்பாய்க் கூறுமிடத்து பல தோற்றங்களைக் கொண்ட ஸர்வேஸ்வரனுக்கு அந்தந்த அமைப்புக் கேற்ற வழி பாட்டு முறைகளை எடுத்துக் காட்டும் வடிவ மாயுள்ள திட்டங்களே யாம் இதைப்பற்றிப் பின்னொரு அத்யாயத்தி லெடுத்துக் கூறலாம்.

சி:— ஸ்வாமி, மனிதனுக்கு முக்கிய கடமைகளென்ன?

கு:— மனிதன் பிறக்கும் பொழுதே ஐந்து கடன்களுடன் பிறக்கின்றான். அவை யாவன தாய், தந்தையருக்குச் செய்ய வேண்டிய தொன்று (அவர்களைப் போஷிப்பது) தன் குருவிற்குச் செய்ய வேண்டிய பணிவிடை (உபசரிப்பு) தெய்வ வழி பாடு, விருந்தினர்களை மகிழ் வித்தல். இவைகள் தான் மனிதனின் உடன் பிறந்த கர்மாக்க ளென்பதாகும். இதையே தெய்வ வழி பாட்டில் வேறு வகையில் பக்தி யோக மென்றும், கர்ம யோக மென்றும், ஞான யோக மென்றும் பிரித் துச் சொல்லப்பட்டது. இதைத் தவிர, உலகில் ஒவ்வொருவரும் செய்யும் ஸகல காரியங்களையும் பொது வாகக் கர்மாக்களென்றே கூறப்படுவது முண்டு.

சி:— குரு தேவா, ஈஸனைக் குறித்த கடமைகளில் ஏதேனு மொன்றைச் செய்யத்தான் வேண்டுமோ?

கு:— ஆம். நிச்சயம் செய்தே தீரவேண்டும்.

சி:— அப்படிக்கில்லா விட்டாலோ?

கு:— எடுத்த பிறவியினுல் யாதொரு பிரயோஜன மற்றவனுகி விடுகின்ருன். அதோடு மட்டிலுமல்ல, பக்தி, கர்மம், ஞானம் இம் மூன்றில் எதுவுமே சித்திக்காது. (அனுபவத்தில் காண முடியாது).

சி:— ஒரு காரியமும் செய்யாத எவ்வளவோ பேர்கள் இருக்கின்ருர்களே.

கு:— அப்படியுமிருக்கலாம், அதைப்பற்றி நாம் கவலைகொள்ள அவசியமில்லை.

சி:— அப்படிப்பட்டவர்களையும் ஞானிகளென்றும் சொல்லிக் கொள்ளுகின்ருர்களே?

கு,— ஞானிகளுமிருக்கலாம், அஞ்ஞானிகளுமிருக்கலாம்.

சி:— கர்மாக்களை செய்யா விட்டால் ஞானத்தை யடைய முடியாதா?

கு:— முடியும், முடியாதென்று கூறுவதற்கில்லை.

சி:— ஏன் அப்படி?

கு:— அவை யெல்லாம் அவரவர்களின் ப்ராப்த விசேஷத்தைப் பொறுத்தது. (செய்வினைப் பயனை யொட்டியது, ஏனெனில் கர்மாக்களினுல் மட்டிலும் ஞானம் வந்து விடுவதாய்க் கூறிவிடக்கூறியதல்ல. அதற்காக எதைச் செயயாமலிருக்க வேண்டுமென்று சொல்லிவிட

முடியாது. அஃதிருக்கட்டும்; உலக விஷயம், தெய்வீக விஷயம் இவ்விரண்டிலும் நீ எதைச் செய்ய விரும்புகின்றாய்?

சி:— குரு தேவா! தாங்கள் கூறும் உலக விஷயம் என் மனதிற்கு அச்சத்தையும், கலக்கத்தையும் உண்டு பண்ணுகின்றது ஆகவே, ஈஸ்வர காரியங்களில்தான் மனம் நாட்டம் கொண்டுள்ளது.

கு:— ஏன் இந்த முடிவிற்கு வந்து விட்டாய்?

சி:— இதை என்னால் எடுத்துக் கூற வியலவில்லை.

கு:— அன்ப! இதை நன்றாய்க் கேள். பகவான் சம்பந்தப்பட்ட காரியங்களில், அதிக ஊக்கமும் பிரீயமுமிருக்கவேண்டிய தவசியந்தான். என்றாலும், மனிதன் வாழும் காலம் வரையில் லௌகீக விஷயங்களை (உலகம் சம்பந்தப்பட்டவைகளை) ஒதுக்கித் தள்ளி விடமுடியாது. தவிர, அதற்கென்ற காலம் வரும் பொழுது அது விஷயங்கள் தன்னை விட்டுப் பிறர் அறியாமலே அகன்று விடும். தவிர, உலகை யொட்டித்தானே ஈஸ்வரனும்; நிற்க, உலக வியவஹாரங்கள் சரிவர நடந்தால்தானே பாக்கியுள்ள அதற்கப்பாற்பட்டதான விஷயங்களை நிச்சிந்தையாகக் கவனிக்க முடியும். அதுவும் தவிர, தனக்கென்று நிர்ணயிக்கப்பட்டுள்ள சில தவிர்க்க முடியாத கடமைகளை ஒரு புற மொதுக்கிவிட்டு ஈஸ்வர கடன்தான் முக்கியமென்று செய்ய முற்பட்டாலும் அதைப் பகவான் ஏற்றுக்கொள்ள மாட்டாரென்பது நிச்சயம்,

சி:— உலக விஷயங்களென்றீர்களே அதென்னவோ?

கு:— அது இதற்கு முன்னுல் பல இடங்களில் எடுத்துக் கூறப்பட்டுள்ளதே, இருந்தாலும் கூறுகின்றேன். ஒரு ராஜ்யத்தைப் பாதுகாக்க வேண்டியது அதன் அரசனின் தவிர்க்க முடியாத கடமை அரசன் தன் பொறுப்பை தன் மந்திரிகளிடம் ஒப்படைத்து விட்டோ, அல்லது ஒருவரிடம் ஒப்படைக்காமலோ, (துறவு பூண்டு) தேசத்தை விட்டுச் சென்று விட்டால் ராஜ்யத்தின் கதி யென்ன வாகும். தோன்றியபடி யெல்லாம் காரியம் நடக்க ஆரம்பித்து, நிர்வாகம் சீர் குலைந்து விடும். சந்தர்ப்பம் பார்த்து எதிரிகள் தூராக்ருதமான முறை யில் தேசத்தைக் கைப்பற்றிக் கொள்வார்கள். பிரஜை களும், தங்கள் தேச பக்தி யிழந்து விடுவார்கள். இதில் வெளியே செல்பவன் அரசன் ஒருவன்தான் என்றாலும், அதனுல் உண்டாகும் விபரீத பலன்கள் யெத்தனை யென்று கணக்கிட முடிவதில்லை. இதை விட்டு ஒரு குடும்பத்தை யெடுத்துக் கொள்வோம். தாய், தந்தையர் களின் கடனை தீர்க்க வேண்டியது தனயன் (புத்திர னின்) கடமை. அதைச் சரிவர நடத்தாமல் அவர்கள் வயிறும் புண்படக் கூடிய நிலைமையில் அவர்களை விட்டுச் சென்று எங்கோ ஈஸ்வர பக்தனுகவோ, அல்லது துறவு கொண்டோ விளங்குவதினுல் யாது பலன் கிட்டும் இதற்குத் திருஷ்டாந்தமாய் ஒரு முக்கியமான சம்ப வத்தை மட்டிலும் கூறுகின்றேன். "சுமார் பல நூற்றுண்டுகளுக்கு முன்னர் நம் ஹிந்துமதம் க்ஷீண திசையடைந்த காலத்தில் அது சிதறுண்டு விட்டது.

அப்பொழுது பல தான் தோன்றித்தனமான மதங்கள் தோன்றி தங்கள் தங்களின் அர்த்தமற்ற கொள்கைகளையும் தேசவெங்கும் பரப்பி முற்பட்ட பொழுது, நம் மதத்தைத் திரும்பவும் புத்துயிர் அளித்து அதன் லக்ஷியத்தை நாட்டவேண்டிய தவசியத்தின் பொருட்டு ஈஸ்வரனே மனிதப் பிறவி யெடுத்து சங்கரர் என்ற நாமதேயத்துடன் பூமியில் ஜனித்ததாய்க் கூறப்பட்டுள்ளது அவரைத்தான் ஆதி சங்கர பகவத் பாதாள் என்றும் கூறுகின்றோம். அவர் மலையாளத்தில் காலடி யென்ற க்ஷேத்திரத்தில் சிவ பக்த ஸ்ரேஷ்டர்களான சிவ குரு யென்ற பெரியாருக்கும், ஆரியாம்பாள் என்ற அம்மைக்கும் ஜனித்தவர். அவர். தான் உலகில் ஜனித்த காரணத்தை மனதில் எண்ணி தன் கடமைகளைச் செய்ய வேண்டியதற்குதவியாகவுள்ள ஸன்யாஸம் (துறவு) கொள்ள வேண்டுமென்னும் விருப்பத்துடன் தன் தாயைக் கேட்ட பொழுது. அதற்கு அந்த அம்மையார் அனுமதியளிக்க வில்லை. இந்தச் சமயம் அவர்கள் நோயுற்றிருந்தார்கள். ஒரு சமயம் தன் தாயாரின் விருப்பத்தைப் பூர்த்தி செய்யும் பொருட்டு தன் பூர்வ கால தபஸின் மகிமையால் (தன் தாயார் கங்கை தீர்த்தத்தில் ஸ்நானம் செய்ய வேண்டுமென்று விரும்பிக் கேட்ட பொழுது) கங்கையைத் தான் இருக்குமிடத்துக்கு வரவழைத்து தன் தாயாரை நீராட்டினர் என்றும் கூறப்படுகின்றது. ஒரு சந்தர்ப்பத்தில் அந்த நதியில் அவர் இறங்கிய பொழுது ஒரு முதலை அவரது காலை பற்றிக்கொண்டதாகவும், அப்பொழுது அவரது தாயை உரக்க கூவி, இனி நான்

பிழைக்க மாட்டேனென்றும் நான் பிழைத்திருக்க வேண்டுமேயானல், இந்த சமயத்திலாவது சன்யாஸம் கொள்ள அனுமதி கொடுத்தால் பிழைத்துக்கொள்வே னென்றும் கேட்டுக்கொண்டதற்கு, அவர் தாயார் தன் மகன் எங்கிருந்தாலும் சரியே உயிருடன் மட்டிலுமிருந் தால்போதுமென்று நினைத்துக்கொண்டு உத்திரவளித்து விட்டார்கள். உடனே சங்கரர் துறவு கொண்டு வெளியே செல்லும்பொழுது நான் எங்கு சென்றாலும் தங்களுக்குச் செய்ய வேண்டிய அந்திம கால கடமை களில் ஒனறும் செய்யாமல் விட்டுவிட மாட்டேனென் றும், எந்தசமயம் என்னை பார்க்கவேண்டுமென்று நினைத் தாலும் நான் தங்களை வந்து சந்திப்பேனென்று கூறி தன் தாயாரிடம் விடை பெற்றுக்கொண்டு தன் கடமை களை நோக்கி யாத்திரை கிளம்பி விட்டதாய் கூறப்படு கின்றது. (இது விஷயம் சங்கர விஜயத்தில் ஒரு முக்கிய சம்பவத்தின் சுருக்கம்).

சி:— ஸ்வாமி, தாங்கள் இதை கூறுவதின் கருத்தென்ன?

கு:— இந்த ஒரு விஷயத்தில் அநேக கருத்துகள் அடங்கி யுள்ளன. குறிப்பாய் பார்க்குமளவில், உலகம், தெய்வீக மெனப்படும் இவ்விரண்டும் இடம் பெற்று அடங்கி யுள்ள தென்பதேயாம். நிற்க, மனிதன் பின்பற்றிச் செல்லும் ஒவ்வொரு காரியமும் யாரோ முன்னுள் பெரியோர் தங்கள் நடைமுறையிலும் பழக்கத்திலும், அனுபவத்திலும், நடத்தி காண்பித்த வற்றை ஆதார மாய்க் கொண்டுதான் செய்ய முடியும், அல்லது செய்ய

வேண்டுமென்பதை வற்புறுத்தவேதான். தவிர, யார் எதை பின் பற்றினாலும் சரியே, பெரும்பாலோர் களால் ஏற்றுக் கொள்ளத்தக்க காரியங்களைத்தான் செய்ய வேண்டும். இவ்விரண்டிற்கும், பொருத்த மாயுள்ள ஒரு பெரியோரைத்தான் திருஷ்டாந்தமாய்க் கூற முடியும். ஆனாலும் ஆன்மீக விஷயங்களை பொருத்த மட்டில் தனக்கு வழி காட்டியாகவுள்ள உபதேசம் பெற்றுக்கொண்ட தன் குருவின் கட்டளை கள் தான் ப்ரதானமாய் கருதப்பட வேண்டும். இக் கலியுகத்தில் மனிதன் உண்மையில் கடைபிடிக்க வேண்டிய தர்மம் குன்றிவிட்டாலும் ஓரளவேனும் அவைகள் செம்மையாய் நடந்துகொள்வதற்கு உண்மை யான மதமென்ற கட்டிடத்தை நல்ல அஸ்திவாரமிட்டு கெட்டியாக யெழுப்பியவர்கள் பண்டைக்கால ரிஷி களும் மஹான்களு மல்லவா? அப்படி அவர்களால் ஸ்திரமாய் உருவாக்கப்படாமலிருந்தால் இதற்குள் கட்டிடமே யிடிந்து விழுந்திருக்கும். அதோடு ஹிந்து மதமென்ற கட்டிடத்தில் தூஸியும் ஒட்டடைகள் நிரம்பி யிருந்தாலும் தற்காலத்தில் அது முற்றிலும் அழுக்கடைந்து சீர் கெட்டுவிடாமல் இருப்பதற்கு ஆதி கால மஹான்களின் தபோ மகிமையும் தர்ம சம்ரக்ஷ ணையும் தான் முக்கிய காரணம். ஆகையினால் அவர்களை உதாரணமாய் கொண்டுதான் சொல்ல வேண்டியிருக் கிறது. இதுவே ஒரு குருவைப் பின்பற்றிச் செல்ல வேண்டுமென்று கருதும் சீடனுக்கு, அவசியம் தெரிந்து கொள்ள வேண்டியதும், தேவைப்படுமான விஷயமு மாகும். (இரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.)

## மூன்றும் அத்தியாயம்.

சி:— ஸ்வாமி, தாங்கள் எடுத்துரைக்கும் ஒவ்வொரு விஷயமும் ஒரு தனி மனிதனின் க்ஷேமத்தை யொட்டித்தானே?

கு:— எதுவும் குறிப்பிட்ட தனி மனிதனுக்குத்தான் பொருந்துமென்று கூற முடியாது. பொதுவாய் மார்க்கங்கள் என்றால் கடவுளின் வழிபாட்டு முறைக ளென்று தான் சொல்ல வேண்டும். வேறு எதையும் மார்க்கங்களென்று கூறப்படுவதில்லை. ஈஸ்வரனை யறிய வேண்டிச் செய்யப்படும் காரியங்களைத் தன் சொந்த இச்சை யென்று சொன்னாலும் அதனால் யாதொரு தோஷமும் இல்லை. ஏனென்றால், பொதுவாய் எவருமே தன் ஆசையைப் பூர்த்தி செய்து கொள்ளும் பொருட்டுத்தான், எந்த ஒரு காரியத்திலும் ஈடுபடுவார்கள். ஆசை யென்ற எண்ணத்தைத் தன்னை விட்டு இதயத்தினின்றும் அகற்றி விடுவதென்பது அவ்வள வெளிதில் முடியக் கூடியதல்ல. ஆகவே, அப்படித் தனக்கேற்படும் ஆசை (இச்சைக்கு) நல்லகாரியங்களையும் ஈஸ்வரனுக்கு திருப்தி யளிக்கும் வகையிலும் செய்து முடிப்பதின் மூலம் அவைகளுக்கு புகலிட மளிக்கலாம்; மேலும், மற்ற உலக விவகாரங்களில் அதிகமாய் ஆசை கொள்வதைத்தான், சொந்த இச்சைக்கு ஒப்பிட முடியும் எதைச் செய்வதாயிருந்த போதிலும் (சத் கர்மாக்களை மட்டிலும்) பரமேஸ்வரனுக்கே அர்பணித் துச் செய்ய வேண்டியதுதான் விதிமுறையாகும். இனி, வழி பாட்டு முறைகளைத் தெரிந்து கொள்வோம்.

சி:— கடவுளைப் பூஜித்தல் என்பதை அவனை உபசரித்த லென்று கூறப்பட்டதே. அது விஷயத்தைச் சற்று விளக்கமாய்ச் சிந்திக்கலாம்.

சி:— ஸ்வாமி, ஈசனைப் பூஜிக்க வேண்டு மென்றால், தன் முன்னால், ஒரு உருவத்தை வைத்துத்தான் வழிபட வேண்டுமா ?

கு:— ஆம், அப்படித்தான் செய்ய வேண்டும். முதலில் தன் மனம் ஒன்றையே பற்றி நின்றால் தான் பின்னர் அது செம்மைப்படும். அதற்கும் ஏதேனும் ஒரு வஸ்துவைத் தன் கண் முன்னால் பார்த்தாலன்றி மனதினால் அதை பற்றிச் சிந்திக்க முடியாது. அப்படிச் சிந்திக்க முடியாத ஒன்றை மனதில் எப்பொழுதும் தரித்திருக்கச் செய்ய வும் முடியாது. ஆகவே மனம் செம்மைப்படுகின்ற வரையில் ஒரு உருவத்தைக் கடவுளின் அம்சமாய்ப் பாவித்து வழிப்பட்டுத்தானாக வேண்டு மென்பதில் எந்தச் சந்தேகத்திற்கும் இடமில்லை. சாதாரணமாய் ஒரு மனிதன் தன் வீட்டில் ஒரு விருந்து நடத்து கின்றான். அதை மற்ற சாதாரண தினசரி நிகழ்ச்சி களில் ஒன்றாய்க் கருதாமல் ஏதோ ஒரு தனி விசேஷத் தன்மையைப் புகுத்தி, தன் உற்றார் உறவினர்களையும், இஷ்ட மித்திரர்களையும் (தான் மனப் பூர்வமாய் விரும்பும் நண்பர்களையும்) அவ்விருந்துக்கு அழைக் கின்றான். இது பொதுவாக நடைபெறும் வழக்கத்தை யொட்டியது. மற்றொருவன் தான் விரும்பும் ஏதோ ஒரு பலனை யுத்தேசித்து அதற்கென்று சம்பந்தப்பட்ட ஒரு தனி மனிதனைத் திருப்தி செய்விக்கும் பொருட்டும்

விருந்துபசாரம் நடத்துகின்றான். இதன் முக்கிய காரணம்தான் விரும்பியழைத்து உபசரித்து மகிழ்வித்தவனைக்கொண்டுதான் இச்சித்த காரியத்தைப் பூர்த்தி செய்து கொள்ள வேண்டுமென்ற நோக்கமே யாகும். (சில சமயங்களில் இவ்விரண்டு வழிகளுமற்ற விருந்து நடப்பது முண்டு.) இதில் குறிப்பாய்த் தெரிந்து கொள்ள வேண்டியதென்ன வெனில், விருந்தென்று சொல்லும் பொழுது தனக்கு வேறாகவுள்ள மற்றொரு மனிதனை முக்யத்வமாய்க் கருதிக்கொண்டு செய்வதே யாகும். இதைப் போலவே கடவுளைப் பூஜிப்பதற்கும் விசேஷமான எண்ணத்தையும் தன்மையையும் புகுத்தித்தான் செய்யப்பட வேண்டும். (அப்படி நடை பெற்றும் வரலாம்.) ஏனெனில் ஒரு மனிதன் மற்றொரு மனிதனிடம் எதிர்பார்க்கும் உதவியைப் போல பன் மடங்கு அதிகமான உதவியையே ஈஸ்வரனிடம் கேட்கின்றான் (அல்லது மனிதனால் எதிர் பார்க்கப்படுகின்றது). அப்படி எதிர் நோக்கிச் செய்யும் ஒருவன் ஈசன் வகுத்த வழி முறைப்படி நடந்து கொள்ளாமலும் அவனை சரியானபடி திருப்தி செய்யாமலுமிருந்தால் நினைத்த பயனைப் பெற முடியுமா? நிற்க, செய்யும் உபசாரணைகள் ஈஸ்வரனுக்குத்தான் அர்பண மென்றாலும் அவனைக் குறித்தே செய்வதாயிருந்தாலும் ஏதேனும் ஒரு ஆகாரத்தை வைத்துத்தானேச் செய்ய முடியும். மனதில் கற்பித்துக்கொள்ள முடியாத ஒன்றிற்கு எந்த உபசார வழிகளையும் காட்ட முடியாதென்றுதான், உருவத் தோற்றத்தையே பூஜிக்க வேண்டு மென்று

கூறப்பட்டது. இதைப் பிற்பகுதியில் உன் புத்தியைக் கொண்டு நீயே யறிய முடியும்.

சி:— சகலவற்றையும் பகவானுக்கே அர்பணித்துச் செய்ய வேண்டுமென்று சொல்லுவதன் கருத்தென்ன?

கு:— மனிதனுக் கேற்படும் ஆசையின் காரணமாய், உதிக்கும் எண்ணங்கள் பல. அவைகளில் நன்மை தீமை யென்ற இரண்டு வகைகளுண்டென்பது இதற்கு முன்பே எடுத்துரைக்கப்பட்டது. பெரும்பாலோர் அப்படி யுதிக்கும் தங்கள் எண்ணங்களைப் பூர்த்தி செய்து கொள்ளும் பொருட்டுத்தான் பகவானைப் பிரார்த்திப்பது அல்லது பூஜிப்பது போன்ற காரியங்களைச் செய்வார்களென்றே கூறலாம். சாதாரணமாய் ஒருவன் தன் சொந்த நலனை யொட்டியோ, அல்லது பிறருடைய நன்மையை உத்தேசித்தோ (அதாவது பிறருக்கென்று தானே யஜமானராய் இருந்து சங்கல்பித்துப் பிரதிக்ஞை செய்து கொண்டு அல்லது பாவித்துக் கொண்டு ஈசனைப் பூஜை செயலில் ஈடுபடுவதாய் வைத்துக் கொள்வோம். அதற்கென்றுள்ள விதி முறைப்படியும், பூஜைக்கான திரவியங்களைக் கொண்டும் தான் செய்ய வேண்டுமென, வகுத்து வைக்கப் பட்டுள்ள சாஸ்திர, சட்ட திட்டங்கள் கூறுகின்றன. கூடுமான வரையில் அதைப் பின்பற்றிச் செய்வதுதான் முறை யென்றாலும், அப்படிச் செய்யாவிட்டாலோ எந்தப் பயனும் கிட்டாது என்ற பீதியையும் கூறிவிடுகின்றது, இம் முறைப்படிச் செய்யச் சக்தியற்றவன்

(வசதியற்றவன்) அதைக்கண்டு கலங்கி விடுகின்றான். அந்தக் கலக்கமே அவனை யெதையும் சரிவரச் செய்ய வொட்டாமல் தடுத்துக் குழப்பத்தில் கொண்டு போய் விடுகின்றது. இது ஒருபுறமிருக்க, தன் எண்ணங்களை நிறைவேற்றிக் கொள்ள வேண்டுமென்று பூஜிப்பதினால் ஏற்படும் பலன் சில சமயங்களில் தீய சக்தி நிரம்பிய தாகியும் விடலாம் அல்லது தன் மனமே அதற்கிட மளித்து விடலாம். ஆகவே இதை நன்றாய்ச் சிந்திக்கு மளவில் தன்னிடமுள்ள அழுக்கு நிறைந்த கொள்கை களையும், தான் என்ற ஆணவத்தையும், அகற்றிக் கொள்ளுவதை யொட்டித்தான் ஈசனைப் பூஜிக்க வேண்டு மென்பது நன்றாய் விளங்கும். மேலும், ஈஸ்வரனை நம் இச்சைக்கேற்ற ஏவல் காரனாய்க்கொண்டு பூஜிப்பதை விட ஒன்றுமே செய்யாமல் விட்டாலும் நலமென்றே கூறலாம்.

சி:— தாங்கள் கூறுவதைப் போல் எவரும் செய்வதாகத் தோன்ற வில்லையே. ஒரு பலனை எதிர் பார்த்துத் தானே மற்றொரு காரியத்தைச் செய்யத் தொடங்கு கின்றார்கள்?

கு:— ஆம் இதைத்தான் இதற்கு முன்னமே விளக்கிக் கூறி யிருக்கின்றேனே. அதையே திரும்பவும் கேட் கின்றாயே. அதுவும் சரிதான். உலகில் மனிதனைத் தவிர கடவுளோ மற்றெதுவுமோ இல்லை யென்ற, நாஸ்திக வாதத்தைப் பரப்பிக்கொண்டு, எந்த ஸத் விஷயங் களையும் செய்யாமல் விட்டுவிடுபவர்களைக் காட்டிலும்,

தன் சொந்த இச்சையைப் பூர்த்தி செய்து கொள்வதை யொட்டியாயினும் நல்ல முறையில் ஈசனை வழிபடுகின்ற வர்கள் எவ்வளவோ மேலென்று ஒருவர் கூறுமலே விளங்கிவிடும்.

சி:– எதற்கும் ஒரு பலனை எதிர் பார்த்து ஒன்றும் செய்யக் கூடாதென்று தானே கொள்ள வேண்டும்?

கு:– அதையும் ஒரே முடிவாய்ச் சொல்லிவிட முடியாது. உலக வாழ்வைப் பொருத்த வரையில் ஒன்றையும் எதிர் பாராமலிருக்க முடியாது. அப்படி ஒன்றும் தேவை யில்லை யென்கிறவனுக்கு இவ்வுலகத்தில் வாழும் மற்றய செல்வந்தர்களின் கூட்டத்தில் இருப்பதற்கிடமில்லை. தன் தேவைக்கானவற்றைத் தேடிக்கொள்ள வேண்டி யதுதான். அதற்கென்று தீய வழிகளைத்தான் பின் பற்றக் கூடாது. கர்மத்திற்கேற்ற பலனுண்டு என்பதெல்லாம் கடவுளைப்பற்றி வழிபாட்டிற்கு யேற்ற தாய்க் கொள்ளக்கூடாதென்பதற்குத்தான் (ஈசனைச் சம்பந்தப் படுத்திச் செய்யும் காரியங்களில் மட்டுமே பலனை எதிர் பார்க்கக்கூடாதென்பது) அப்படி வற்புறுத் திக் கூறப்பட்டது.

சி:– அது எப்படி ஸ்வாமி?

கு:– ஒரு வியாபாரி தன் வியாபாரத்தின் செழிப்பைத் தன் மனதில் பிரதானமாய் எண்ணிக்கொண்டு, அதை வெளியில் சொல்லாமல், பல தான தர்மங்களைச் செய்து கொண்டும் ஈஸனை வழிபட்டுக்கொண்டு மிருப்பதாய்

வைத்துக்கொள்வோம். இப்படிச் செய்வதினால் ஒரே வழியில் தனக்குச் சாதகமான இரண்டுவிதப் ப்ரயோஜனத்தை (பலனை) அடைகின்றான். எப்படி யெனில் தன் வியாபார விலாசத்தைத் தான் செய்யும் தர்மத்தின் மூலம் மறைமுகமாய் விளம்பரப் படுத்திக் கொள்வதுடன், இந்த விலாசத்தைக் கொண்டவன் மஹா தர்மவானென்றும், பரம தெய்வ பக்தனென்றும் மக்களால் போற்றப்படுகின்றான். இதன் உட்கருத்து என்னவெனில், பொதுவாய் ஒரு வியாபார விளம்பரத்தை அதற்கென்ற உண்மையான வழியை விட்டு வேறு வகையில் செய்து கொள்ளுகின்றான் என்பதேயாகும். என்றாலும் தன் வியாபாரத்தைத் தீய வழியில் நடத்தாமல் (அளவுக்கு மிஞ்சிய லாபத்தை எதிர் பாராமல்) இருக்கும் வரையில், அவன் செய்யும் தான தர்மமென்ற விளம்பரத்தினால் எந்த தோஷமும் கூற இயலாது. எதிலும் தனக்கு மிஞ்சிய வருவாயிருந்தாலன்றித் தர்மங்கள் செய்ய மனம் வருவது கடினம். ஆகவே வருவாயை யுத்தேசித்து விளம்பரம் தேவையானாலும் மித மிஞ்சிய லாபமடைய முயற்சித்தலாகாது. மற்றொருவன் எந்த வியாபாரத் தொழிலும் செய்யாமல் தன்னிடமுள்ள பொருளைக்கொண்டு தேவாலயங்களை நிர்மாணித்தலும், அன்ன சத்திரங்கள் கட்டுதலும் (இலவச போஜன விடுதி) கல்வி ஸதாபனங்கள் நிறுவதலுமாயுமுள்ள மூன்று காரியங்களைச் செய்கின்றான். இம்மூன்றும் எந்த ஒரு மனிதனையும் குறிப்பிட்டுச் செய்வதாகவோ அல்லது வேறு எந்த

வியாபாரத் தந்திரமாகவோ கூறுவதற்கில்லை; இந்தத் தர்மங்கள் தான் பல்லாயிரக் கணக்கிலுள்ளவர்களுக்குப் பயனளிக்கக் கூடியதென்றும் கொள்ளலாம். இதைத் தோற்றுவித்தவனுக்கும் இதைக்கொண்டு எந்த வருவாயும் கிடைப்பதாய்ச் சொல்ல முடியாது. பொதுவாய் பார்க்குமிடத்து, முன் சொல்லிய வியாபாரியைக் காட்டிலும் பொது ஜன தர்ம ஸ்தாபனங்களைத் தோற்றுவித்தவனைத்தான், மக்கள் அதிகமாய் விரும்புவதும் போற்றுவதும் அதிகமென்று நிச்சயித்துக் கூறலாம் இந்த நன் மதிப்புக்கும், போற்றுதலுக்கும், உண்மைக் காரணம் செய்யப்பட்ட நல்ல காரியங்களேயன்றி குறிப்பிட்ட மனிதனல்ல என்பதை நன்குணர வேண்டும். இந்தத் தர்ம காரியங்களையும் ஈசனுக்கே சமர்ப்பித்துச் செய்யும் ஒருவன் தன்னைப்பிறர் போற்றுவதைக் கூட விரும்புவதில்லை (அப்படி விரும்பவும் கூடாது). ஏனென்றால், எப்பொழுது பிறரால் போற்றப் படுகின்றானோ அப்பொழுதே தூற்றுவதற்கும் வித்திட்டுக் கொண்டவனாகி விடுகின்றான் என்பதையும் சிந்திக்க வேண்டும்.

சி:— அவனைத் தூற்றுவதற்கு என்ன காரணம்?

கு:— பலர் தன்னைப் புகழ்வதைக் கண்டு அவனை யறியாமலே தானென்ற அகந்தையும், கர்வமும் கொள்ள ஹேது வாகி விடுகின்றது. அது மனித ஸ்வாபத்தின் இயல்பு. தான் செய்துள்ள நற் காரியங்களைக் கொண்டு, தன்னையே பெருமைப் படுத்திக்கொள்ள முயற்சிக்கின்றான்.

அதுவே பலரால் தூஷிக்கப்படுவதற்கு ஆளாக்கி விடும். அப்படித் தன்னை இவ்விரண்டிற்கும் தன்னைப் பந்தப் படுத்திக்கொள்ளாமல் (கட்டுப்படுத்திக் கொள்ளாமல்) காரியங்களைச் செய்தாலுங்கூட அதன் உண்மையை முற்றிலும் உலகத்தார் தெரிந்துகொள்ளாத வரையில் தூற்றுதலையும் எதிர்நோக்கித் தானாகவேண்டியிருக்கும்.

சி.— அதற்குக் காரணம்?

கு:— சிலர் தாங்கள் செய்யப்புகும் காரியங்களினால், தங்களை வந்தடையப் போகும் பெயரையும் புகழையும் முன் கூட்டியே சிந்திக்கத் தொடங்கி விடுகின்றார்கள். மன திற்குள் மகிழ்ந்து கொள்ளுகின்றார்கள், இதைப் பிறர் தெரிந்துகொள்ளா விட்டாலும் சர்வேஸ்வரன் மட்டிலும் தெரிந்து கொண்டு விடுகின்றார், உடனே இவர்கள் செய்து முடிக்க வேண்டுமென்று நினைத்தக் காரியத்தை (அது நல்ல முறையில் பயன்படுவதாயிருப் பினும் சரியே) முற்றிலும் நிறைவேற்ற முடியாமல் சிதைத்து விடுகின்றார் (அல்லது தடைகள் ஏற்படுத்தி விடுகின்றார்). இதற்குக் காரணம் இரண்டுண்டு ஒன்று இவர்களுடைய அகந்தையையும், தற் பெருமையையும் குலைக்க வேண்டு மென்பதும், மற்றொன்று, இவர்கள் மனதை நன்றாய்த் தெளிய வைத்துக்கொண்டு இனியும் அம்மாதிரி பெருமைக்கென்று எந்தச் செயலிலும் ஈடு படலாகாது என்பதை வற்புறுத்தவேண்டு மென்பதுமே யாகும். மேலும் சொல்லுகின்றேன், நன்றாய் மனதில் பதிய வைத்துக்கொள். வேத புராண,

சாஸ்திர ஆராய்ச்சியில் நன்கு தேர்ந்தவர்களைப்பண்டிதர்களென்றும், வேதாந்திகளென்றும் கூறப்படுவது, அவர்களுக்கு ஈசனால் இடப்பட்ட பெயரோ வெனில் அல்ல. தாங்கள் நன்றாய்க் கற்றுத் தேர்ச்சி பெற்றுள்ள விஷயங்களை, மற்றைய பாமரர்களுக்கும் எடுத்துரைத்துப் போதிப்பதாலேதான் அவர்கள் அவ்வாறு அழைக்கப்படுகின்றார்கள். பொதுவாய். தெய்வீக ரகஸியங்களையும், பண் பாட்டையும் நன்றாயறிந்து அதை யெடுத்துக் கூறும் திறமை பெற்றவர்கள் மற்றவர்களைக் காட்டிலும் உயர்ந்தவர்கள் தானென்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை. ஆனாலும் தாங்கள் கற்ற கல்வி யறிவைக்கொண்டு பெருமையாகக் கருதிக்கொண்டிருப்பார்களே யானால், அதன் முடிவு எப்படியிருக்குமென்பதை இதற்கு முன்னர் கூறிய விஷயங்களிலிருந்தே தெரிந்து கொள்ளலாம். தவிர இவர்களால் பிறருக்கு எடுத்துரைக்கப்படும் நற்போதனைகள் தங்கள் தங்களின் சொந்த விவகாரங்களில் எவ்வளவு தூரம் பயன் பெற்று வருகின்றன என்பதை நன்றாய்ச் சிந்திக்க வேண்டும். எந்த ஒரு கல்வியின் தேர்ச்சியைக்கொண்டு (வேதம், சாஸ்திரம்) ஈஸ்வரனை யடைய வழி செய்து கொள்ள வேண்டுமென்று கூறப்பட்டுள்ளதோ, அதே கல்வி வளர்ச்சியினால் மமதையும், கர்வமும் அதிகம் வியாபிக்க தொடங்கி விடுகின்றது. எதைப் பிறருக்கு விக்ரயம் செய்யலாகாதோ, அதே தன் பொருளீட்டும் காரியங்களுக்கு உபயோகப்படுத்தப்பட்டு விடப்படுன்றது. எதைக்கொண்டு புகழ்ச்சி, இகழ்ச்சி யென்ற இவ்

விரண்டையும் அகற்ற வேண்டுமோ. அது உலகின ருக்குத்தான் தங்களுக்கில்லை யென்று மறந்து புகழையும் பொருளையுமே ப்ரதானமாய்க் கொண்டு போதிக்கப்படுகின்றது. இம்மாதிரியான முறைகளை ஈஸ்வரன் எவ்விதத்திலும் ஏற்றுக்கொள்ளவுமில்லை, சகிப்பது மில்லை. அதனால் தான் இவர்கள் ஒன்றை நினைத்துச் செய்ய அதன் பலன் வேறு விதமாக முடிந்து விடுகின்றது. இதில் முக்கியமாய்த் தெரிந்து கொள்ள வேண்டியதொன்றுண்டு: தான் கற்ற கல்விச் செல்வத்தைக்கொண்டு தன் உள்ளத்தே குடிகொண் டுள்ள சர்வேஸ்வரனைத் தெரிந்து கொள்ள வேண்டுமே யல்லாது, பிறரால் புகழ்ந்து கூறப்படுவதற்கல்ல வென் பதை யுணர வேண்டும். நிற்க, இத்தகைய பண்டிதர்கள் தான், உண்மைத் தர்ம சாஸ்திரங்களுக்கு, தங்கள் தங்களின் அறிவுத்திறன் ப்ரகாசிக்கும் வகையில் வியாக்யானம் (விளக்கி) செய்து எழுதி வைத்து விளங்குகின்ற நூல்களே, மனிதன் அனுஷ்டிப்பதற் கான மார்க நூல்களாகும்.

சி:— தாங்கள் இப்பொழுது எடுத்துரைக்கும் விஷயங்களெல் லாம் எதை யுத்தேசித்து ?

கு:— ஆரம்பத்தில் கேட்டுள்ள பல வினாக்களுக்கும் விளக்கம் தேடும் பொருட்டுத்தான்.

சி:— அதற்கும் இங்கு கூறுகின்றவற்றிற்கும் என்ன சம்பந்தம் ?

கு:– காமக் குரோதங்களின் இருப்பிடமும் அவை எப்படி யெல்லாம் மனிதனை ஆட்கொண்டு ஆட்டி வைக்கின்ற தென்பதையும் வெவ்வேறு வகையில் எடுத்துக்கொண்டு சிந்தித்தால் அதன் உண்மையை நாம் அறியலாம். அதைத் தெரிந்து கொள்வதுதான் சகலரின் கடமை யாகும்.

சி:- அதற்கென்று தானே தங்களை நாடிச் சரணமடைந் ததும்.

கு:– அன்பா, மனிதன் பொதுவாய் எதைச் செய்யும் பொழுதும் அதைத் தூண்டுவதற்குரிய, விதை போன்ற ஆசைக்கு உற்பத்தி ஸ்தானமாயுள்ளது மனிதனின் மனமே யாகும். இம்மனத்திலிருந்துத் தோன்றுவது தான் தீய சக்திகளின் ப்ரெதி பிம்பங்களென்ற, நான்கு குணங்களும். நிற்க, ஏதேனும் ஒன்றைச் செய்யத் தூண்டுவதும் மனமே யென்பதைச் சந்தேகமறக் கூறலாம். எந்தக் காரியங்களையும் செய்ய வேண்டு மென்று நினைக்கும் பொழுதே, இக் குணங்களுக்கும் இடம் தர நேரிடுகின்றது. அப்படி யெதுவுமே செய்ய வேண்டா மென்றாலும், அதுவும் முடியாது. அப்படிச் செய்யாமலிருக்கவும் கூடாது. ஆகவேதான், தனக் குண்டாகும் எண்ணங்களை மட்டிலும் தீயவழிகளை நோக்கிச் செல்லாமல் பாதுகாத்துக் கொள்வதுதான் மிக்க நலம் பயக்கும்; அதற்குற்ற ஒரே வழி சத் கர் மாக்களைச் செய்வதொன்றே யாகும். அதோடு நல்ல காரியங்கள் எதுவாயிருப்பினும், அவைகளைத் திறம்

படச் செய்து முடிப்பதற்கு மனிதன் அதிகாரியே யன்றி அதன் முடிவிலுள்ள பலனைப்பற்றி சிந்திக்கவோ, அல்லது நிர்ணயித்துக் கூறுவதற்கோ அதிகாரியல்ல.

சி:— மனிதன் ஏதுவுமே செய்யாமலிருக்கக் கூடாதென் பதன் காரணமென்ன?

கு:— இதைச் சற்று ஊகித்தறிய வேண்டிய விஷயம். மனிதன் ஜென்மமெடுப்பதற்கு உண்மைக் காரணமே இம்மணுலகில் ஏதோ ஒரு காரியத்தைக் (கர்மாவை) செய்து தீர வேண்டுமென்பதை யொட்டித்தான், என்பது தெளிவு. எதையும் செய்ய வேண்டாமென்பது கடவுளின் விருப்பமே யானுல், மனிதன் இவ்வுலகில் ஜனித்திருக்க வேண்டிய தவசியமேமில்லை. பொதுவாய் ஒரு மனிதன் தன் தாயின் வயிற்றில் (அல்லது கர்ப்பத்தில்) கருவாயிருக்கும் பொழுதே அவனுக்கென்று ஒரு கர்மாவையும் நிர்ணயித்துத் தலை மீது சுமத்தித்தான் சரீர மென்ற உருவ அமைப்புடன் பூமியில் தள்ளப்படுகிறுன். ஆகவே, தான் எடுத்த ஜென்மத்திற்கு ஏற்ற வகையில் ஏதோ ஒரு காரியத்தைச் செய்துதான், தன் கடனைக் கழிக்க வேண்டிய தவசியமாகின்றது. அஃதிருக்கட்டும், கடவுளைக் காண வேண்டுமென்று எந்தக் காரணத்தைக்கொண்டு கேட்டாய்?

சி:— மனிதன் மண்ணில் பிறந்து கொண்டும், இறந்து கொண்டும் இருப்பதுதான் உண்மையில் அவனுடைய தொழிலா? என்பதையும் எடுத்த பிறவியில் சாந்தி யடையும் வாழ்வைப் பெற முடியுமா? வென்பதையும் தெரிந்து கொள்வதற்குமே யாகும்.

கு:— தெரிந்துகொண்டு என்ன செய்யப் போகின்றாய்?

சி:— தெரிந்தவற்றைக்கொண்டு இயன்ற வரையில் கடைபிடித்துச் செல்லலாமென்றுதான்.

கு:— உலகில் மனித ஜெனன மெடுத்த அநேகம் பேர், தெரிந்தோ தெரியாமலோ கடவுளைப் பற்றி சிந்திப்பதும், அவனருள் பெற்று அவனடி சேர வேண்டுமென்று நினைப்பதும் ஆகிய செயல்களைச் செய்கின்றார்கள். ஆனால் தங்களுக்குதிக்கும் அவ்வெண்ணம் அதிககாலம் நீடித்திராமல் மறைந்து விடவும் கூடும். அதைப் போல்தான் நீயும் கேட்கின்றாயா?

சி:— அடியேனின் கருத்து அதுவல்ல. உலக நடைமுறைப் பழக்கத்தில் உள்ள வழிபாட்டு விஷயங்களை, ஒவ்வொருவர் வெவ்வேறு வழிகளில் எடுத்துரைக்கின்றார்களே அதனாலேற்படும் மனக் குழப்பத்தை யகற்றி எதைத் தான் ஸ்திரமானதென்று பின்பற்றிச் செல்வது என்பதற்கே யாகும்?

கு:— உன் சந்தேகத்தை விபரமாய்த் தெரிவி.

சி:— ஒருவர் உருவத்தை வைத்து வழிபட வேண்டுமென்று சொல்வதும், ஒருவர் அவன் நாமத்தை மட்டிலும் சொல்லித் துதி பாடினால் போதுமென்பதும், ஒருவர் தன் மனதிற்குள்ளேயே அவனை வைத்துப் பூஜித்தால் போது மென்பதும், இப்படியவரவர்களுக்கு எது தோன்றுகிறதோ அதை யெல்லாம் எடுத்துரைக்கும்

பொழுது எதைத்தான் உண்மை யென்று நம்பிக் கடைப் பிடிப்பது? மேலும் சிலர் சாஸ்திர முறைப்படித் தான் நடக்க வேண்டு மென்பதும் அது ஒன்றுதான் ப்ரமாணமென்றும், வேறு சிலர் சாஸ்திரங்கள் ஒரு சில குறிப்பிட்டவர்களுக்குத்தான் பொருந்துமென்றும், சிலர் அவையெல்லாம் கற்பித்துக் கூறப்பட்ட நூல்க ளென்றும், சாஸ்திரம் பொய்யென்றும் கடவுளே யில்லை யென்றும் வீண் வாதம் செய்து கொண்டிருக் கும் பொழுது, இதன் ரஹஸியம் என்னவென்பதையும் தெரிந்து கொள்ளத்தானே வேண்டும்.

கு:— நீ கூறுகின்ற ஒவ்வொரு விஷயத்திலும் உண்மையு முண்டு, அதற்கு மாறுன தன்மையு முண்டு எல்லா வற்றையும் அதிகம் விரித்துக் கூறு விட்டாலும் பொது வாயுள்ள, ஒரு சில வற்றை மட்டிலும் சிந்தித்துத் தெளிவடைந்தால் போதும். இதில் கடவுளே யில்லை யென்பவர்களைப் பற்றி நாம் சிந்திக்க வேண்டிய தவசியமே யில்லை.

சி:— அதை எப்படி ஒதுக்கித் தள்ளுவது, அவர்களும் கடவுளால் படைக்கப்பட்ட மனித ஜென்மங்கள்தானே.

கு:— அது உண்மைதான்; இல்லை யென்ற நாஸ்தீகத் தன்மை யையே தங்கள் வாதத்தின் ப்ரதான லக்ஷியமாகக் கொண்டு, அதைப் பறை சாற்றி வருவதன் நோக்கம் தாங்கள் கொண்டுள்ள கருத்தே உயர்வானதென்று நிலை நாட்டிக் கொள்ள வேண்டுமென்றதே யாகுமென்

ருலும், கடவுள் உண்டா இல்லையா வென்பதைப்பற்றி மறை முகமாய் எதைச் சொல்லி வந்த போதிலும் அல்லது சொல்லிக்கொண்ட போதிலும் இவர்களின் மனே சாக்ஷியே இதைப்பற்றி நிர்ணயித்து விடும். ஆனாலும், தான் எடுத்துக்கொண்ட லக்ஷியத்தைக் கைவிடக்கூடாதென்ற பிடிவாத புத்தியினாலே அப்படியெல்லாம் பறை சாற்றப் படுகின்றது. ஆகவே அது விஷயம் நமக்குத் தேவையில்லையென்று நிச்சயமாய்க் கூறலாம். நிற்க, புராணங்களை யெடுத்துக் கொண்டால் அவைகளில் நூற்றுக்கு நூறும் உண்மை யென்று கூற முடியாவிட்டாலும், பெரும் பகுதியாவது உண்மையாக விருக்கலாம். அதுவும் கற்பனையாக எழுதி வைக்கப்பட்டுள்ளதாய்த் தோன்றினாலும், மனிதனின் செம்மைபட்டுச் சீரான வழியை பின்பற்றிச் செல்ல உதவிகரமாயிருக்கு மென்பதை யொட்டித்தான் அவ்விதம் எழுதி வைக்கப்பட்டுள்ள தென்றும் கொள்ளலாம். இது ஒரு புறமிருக்கட்டும். ஒருவன் எதையும் செய்யத் தொடங்குவதற்கு முன்னால் அக் காரியத்தின் தன்மைகளை மனதில் கற்பித்து, பதிய வைத்துக்கொள்ளா விட்டாலும் அதை யெப்படி நடத்திக் காண்பிக்க முடியுமென்பதை யாவது சிந்திக்க வேண்டும். அதைப்போலவே கடவுளைப்பற்றிய விஷயங்களைத் தன் மனதில் பதிய வைத்துக்கொள்ள வேண்டி, அனுமானத்தை (ஹேஷ்யம் அல்லது உத்தேசமாய்)க் கொண்டும், அனுபவத்தை தன் சொந்த நடைமுறையில் பழக்கமாக்கிக் கொண்டதைக் கொண்டும் தீட்டப்

பட்டவைகளே சாஸ்திர சம்பந்தப்பட்ட நூல்களென்று கூறலாம். பொதுவாய் எதையுமே வீண் கற்பனையென்று ஒதுக்கித் தள்ளிவிடலாகாது, முதலில் தன் மனதில் எது ஒன்றைப் பாவனையாக (கற்பனையாக)க் கொண்டு செய்யப்படுகின்றதோ அதே விஷயம் சம்பவத்தில் வரும்பொழுது உண்மை உருப்பெற்று விடுகின்றது. அதற்குண்டான ஒரு தூண்டும் கருவிதான் தர்ம சாஸ்திர நூல்கள், அதை அடிப்படையாகக் கொண்டு இயற்றப் பட்டுள்ளதுதான் புராணங்கள் (அல்லது சரித்திரமென்றும் கூறலாம்.) சரித்திரமாவது உண்மையில் நடைபெற்றிருக்கும் அல்லது நடந்து கொண்டிருக்கும் விஷயங்களை எவ்விதக் கற்பனையுமின்றி எழுதி வைக்கப்பட்டுள்ளதேயாகும். அதையே புராணங்களாகவோ அல்லது எடுத்துரைக்கும் கதைகளாகவோ மாற்றியமைக்கும் பொழுது மனதிற்கு உத்ஸாகத்தையும் வீர்ய உணர்ச்சியையும் தூண்டும் சொந்தக் கற்பனைகளையும் புகுத்தி விடலாம். இதைப்பற்றிய சர்ச்சையில் இறங்கி வீண் சந்தேகங்களையும் குழப்பத்தையும், மனதிலுண்டுபண்ணிக் கொள்வதை விட நமக்குத் தேவையான உண்மைக் கருத்துக்களை மட்டிலும் எடுத்துக்கொண்டு பின் பற்றிச் செல்வதுதான் சிறந்தது. ஈஸ்வர உபாஸனை மார்க்கத்தில் (தெய்வ வழி பாட்டு முறைகளில்) பலர், பல வழிகளை எடுத்துரைப்பதும் சகஜம்தான். ஏனெனில், சாதாரணமாய் இவ்விஷயத்தில் யார், யார், எந்தெந்த விதிகளைத் தங்கள் அனுபவ சாத்யமாய் வைத்துக்கொண்டு,

அனுஷ்டித்து வந்து அதன் உண்மை ரஹஸியங்களே அறிந்துள்ளார்களோ, அதைத்தான் பிறருக்கும் எடுத்துரைப்பார்கள் என்பதில் சந்தேகமில்லை, அதில் உயர்வு தாழ்வென்ற வேற்றுமையான அபிப்பிராயத்திற் கிடமே யில்லை எப்படி யெனில், தனக்குண்டாகும் பசி யென்ற ஒரு காரணத்தை யொட்டி, அதைத் தீர்த்துக் கொள்ளத் பலதரப்பட்ட உணவு வகைகளே எடுத்துக்கொள்வதைப் போலவும், ஒரே ஊருக்குப் பல பாதைகள் இருப்பதைப் போலவும்தான், ஆனல் இவ்விரண்டிலும் எந்த உணவு தன்சரீரத்திற்கு ஏற்றதாயும் ஹிம்சை யில்லாததாயு மிருக்கின்றதோ அதைத்தான் உட் கொள்ள வேண்டு மென்பதும், எந்தப் பாதையில் சென்றால் எளிதில் தான் போய் அடைய முடியுமோ அவ்வழியே செல்ல வேண்டுமென்றும் பொதுவான முறையாகும். இதைப போலவேதான் பகவானேக் குறித்த உபாஸன மார்க்சங்களும் இருக்கின்றன. நிற்க, இதுஒன்று மட்டிலும் அனுஷ்டானத்தில் (பழக்கத்தில்) கொண்டு செலுத்துபவர்களுடைய தீவிர வைராக்கியத்தையும் தந்நம்பிக்கையையும் பொருத்துத்தான் அடையும் உண்மை நிலேயுமிருக்கு மென்பதில் சந்தேகமே யில்லை. இப்படி ஒவ்வொன்றையும் அனுசரித்துத்தான் தனக்கென்று ஒரு குருவைத் தேடி அவரால் போதிக்கப் படுகின்ற வற்றைத் திடமாய் மனதில் வைத்துக் கொண்டு பின் பற்றி யொழுக வேண்டுமென்று கூறப் படுவதின் உண்மைக் காரணமாகும்.

சி:– பகவானை உபசரித்துப் பூஜித்து விட்டாலும் மற்றும் அவரின் காரியமென்பதை யெல்லாம் செய்துவிட்டாலும் கடவுளைக் கண்டதாய்ச் சொல்ல முடியுமா?

கு:– அப்படி நிச்சயமாய்க் கூற முடியாவிட்டாலும் ஒரு வகையில் வழிபடும் முறைகளெல்லாம், ஆரம்பத்தில் தன் மனதை கடவுள் பால் செலுத்துவதற்குண்டான முதற்படியாகவும், அதையே தொடர்ந்து செய்து வந்தால் கடைசியில் மனமே ஈஸன் வஸப்பட்டு விடலாமென்று கூறலாம்.

சி:– ஆலயங்களும், அதில் விக்ரஹங்களும் (உருவத் தோற்றங்கள்) நிர்மாணிக்கக் காரணமென்ன ?

கு:– அங்கு சென்று வழிபடுவதற்கேயாம்.

சி:– அங்கு சென்றால்தான், அது முடியுமென்ற நிச்சயமான திட்டமா ?

கு:– ஆம். அப்படித்தான் சொல்ல வேண்டும். மனம் செம்மைப்பட்டுத் சீராகும் வரையில் தன்னை ஒரு திட்டத்தில் கட்டுப்படுத்திக் கொள்ளத்தான் வேண்டும். நிற்க, ஈஸ்வரனைக் காண வேண்டி. ஏதோ ஒன்றைத் தேடியலைந்து கொண்டிருக்கும் தன் பக்தியையும், மனதையும், வேறு தீய வழியில் செலுத்தாமலிருக்கட்டு மென்பதை எச்சரித்துக் காட்டுவதற்கே ஆலய நிர்மாணங்கள். ஆகவே அங்கு செல்லத்தான் வேண்டுமென்பதை மறுத்துக்கூற இயலாது.

சி:— அதனால் அடையும் பயன் யாது?

கு:— உலகில் வாழும் வரையில், தினசரி நாடகத்தில் தனக்குதிக்கும் தீய எண்ணங்களுக்கு ஒரு சில நிமிஷ நேரமாவாது முற்றுப்புள்ளி வைக்க வேண்டியதவசியமேற்படுகின்றது. அதற்கேற்ற இடம் முதலில் புறத்தோற்ற ஆலயமும், பின்னர் தன் உள்ளம் அல்லது தன்னகமெனப்படும் ஆலயமும்தான். எப்படி யெனில், தன்முன் காணும் விசேஷ அமைப்பைக் கொண்ட பரமேஸ்வரனின் உருவத் தோற்றத்தில் தன் மனதைச் செலுத்திச் சிறிது சிறிதாகத் தெளிவடைந்து, துர்நோக்கங்களை யகற்றிய பின்னர் அதைக்கொண்டே, தன் அகத்தே கோயில் கொண்டுள்ள பரந்தாமனைக் காண்பதற்குச் சுலபமாகும் என்பதற்கே யாம்.

சி:- மனிதனுடைய கற்பனைக் கெட்டாத ஒரு வஸ்துவினிடம் எப்படி நம்பிக்கை கொண்டு நடப்பது?

கு;— நீ கேட்பது ரொம்பவும் சிக்கலான விஷயம் என்றாலும், அதையும் தெரிந்து கொள்ள வேண்டியதே. ஒரு மனிதனுக்குப் பசி யெடுத்துவிட்டால் ஆகாரத்தைத் தேடியலைகின்றானென்பதை இதற்கு முன்னர் வேறு வகையில் விளக்கி யிருக்கிறேன். அப்பசியானது தனக்கு மிஞ்சியதாய் விட்டாலோ அச்சமயத்தில் எது கிடைத்தாலும், அதன் ருசியைப்பற்றிக் கூட சிந்திக்காமல், எப்படியாவது தன் பசிக்கொடுமை தீர்ந்தால் போதுமென்ற ஒரே நோக்கத்துடன் விரைவாக உண்டு விடுகின்றான். அதே மனிதன் தனக்குக் கிடைத்த ஆகாரத்

தைச் சாப்பிடாமல் தன் வாயினால் மட்டிலும் உட் கொண்டு விட்டதாய்ச் சொல்லிக்கொண்டிருந்தாலோ அவன் பசி தீர்ந்து விட்டதாகி விடுமா? அது போகட் டும். ஒருவன் தன் நாவிற்கு ருசியைத் தரக்கூடிய ஒரு பண்டத்தை விரும்பிப் பெற்றுக் கொள்ளுகிறான். அதைச் சுவைத்துப் பார்ப்பதற்கு முன்னரே அதன் தன்மை யிப்படித்தானிருக்கு மென்பதை முன் கூட்டியே தன் மனதில் நிர்ணயம் செய்து கொண்டிரா விட்டால் அவ் வஸ்துவைத் தேடியடையக் காரணமே யில்லை யல்லவா? மேலும் ஒரு நோய் கண்டவன் வைத்தியனை நாடித் தன் பிணிக்கேற்ற மருந்தை வாங்கி யுட்கொள்ளுகிறான். அதன் தரம் எப்படி யிருந்தாலும் அதைப் பற்றிச் சிந்திப்பதே யில்லை; அதன் ருசி யிப்படித்தானிருக்கு மென்று அனுமானித்துக் கொண்ட போதிலும், அதை யுட் கொண்டால் பிணி தீர்ந்து விடுமென்ற நம்பிக்கைதானே, அதை யேற்றுக் கொள்ளச் செய்கின்றது. இதைப் போலவே கடவுளின் பால் நம்பிக்கை கொள்வதற்குக் கற்பனையினால் மட்டி லும் முடியாதென்ற காரணத்தினால்தான் ஆலய வழி பாடு வற்புறுத்தப் படுகின்றது. அதை யனுசரித்துத் தான் அங்கு ப்ரதிஷ்டை செய்யப்பட்டுள்ள உருவங் களுக்கு மனிதனுக்கில்லாத மஹத்தான சக்தியையும் புகுத்தி, அங்க அமைப்புகளிலும் ஒரு தனி விசேஷத் தைக் காட்டியும் நிர்மாணிக்கப்பட்டுள்ளது.

சி:— உருவத்தோற்ற மில்லாத ஒன்றை எப்படி பார்க்க முடியும்?

கு:- முடியாதுதான், அதில் என்ன சந்தேகம்?

சி:- சிலர் ஈஸனைக் கண்டு விட்டதாகவே கூறுகின்றார்களே?

கு:- அப்படியுமிருக்கலாம். ஆனால் அதைப் பிறரிடம் எடுத்துக் காட்டுவது, அவ்வளவு எளிதென்று கூற முடியாது. தவிர, அப்படிப் பார்த்ததாய்க் கூறுவதைப் பற்றியோ சிந்திக்குமளவில் மனதில் உதிக்கும் எண்ணங்களின் ப்ரதிபலிப்பேயன்றி வேறெதுவுமல்ல. வேண்டுமானால், தனக்குள் கடவுளின் அமைப்பு இவ்விதமாய்த் தானிருக்குமென்று அனுமானித்துக் கொள்ளலாமே யன்றி அதையே ப்ரத்யக்ஷ மென்று நிர்ணயித்துக் கொள்ள முடியாது. அப்படியே பார்த்த தாகவும், அத்துடன் ஒன்றுபட்டிருப்பதாகவும் நினைத்துக்கொண்டிருப்பதில் யாதொரு குற்றமுமில்லை.

சி:- இதன் உண்மை விளங்க வில்லையே.

கு:- மனோ தர்மமென்று சொல்லப்படும், தன் கற்பனையி லுதிக்கும் எண்ணங்களின் ரஹஸியத்தை இங்கு அறிய வேண்டிய தவசியம். ஒருவன் தன் மனதில் ஒரு தோற்றத்திற்கு இடமளித்து அதையே சிந்தித்துக் கொண்டிருக்கும் பொழுது, அதனாலேற்படும் ப்ரதி பிம்பத் தோற்றம் தன் முன்னால் காண்பதாய் நம்பி விடுகின்றான். இதையே சித்த விருத்தி யென்றும் கூறலாம். மேலும் இப்படி யொரு தோற்றத்தைக் கற்பித்துக் கொண்டாலன்றி மனம் அதை ஸ்திரமாய்ப் பற்றி நிற்கவும் முடியாமற் போய் விடும். என்றாலும்,

இதுவே உண்மை யென்ற முடிவுக்கு வர இயலாது. நிற்க, ஒரு சம்பவத்தை யொட்டித்தான் மற்ருென்றின் சூக்ஷ்ம ரஹஸியத்தை யடைய வேண்டியிருக்கிறது. ஒரு மனிதன் ஏதோ ஒரு காரியத்தைச்செய்து முடிக்க வேண்டு மென்று திட்டமிட்டுக் கொள்ளுகின்ருன். அதோடு சதா சர்வ காலமும் தான் செய்ய வேண்டியதைப் பற்றி யோசித்துக்கொண்டு மிருக்கின்ருன் இவன் நித்திரையிலிருக்கும் காலத்தில் கற்பனையிலிருக்கும் காரியங்கள் மனக் கண் முன் (மனக் கண்ணென்பது மனிதனுக் குரிய மூன்ருவது கண்ணை குறிப்பதாகும் அதைப் பின்னர் வரும் விஷயங்களிலிருந்து விளக்கிக் கொள்ளலாம்) தோன்றித் தான் நினைத்த காரியத்தைச் செய்து கொண்டிருப்பதைப் போலவும் அல்லது முடிந்து விட்டதைப் போலவும் ப்ரத்யக்ஷமாய் பார்க்குமளவில் காக்ஷி யளிக்கின்றது. அவன் விழித்தெழுந்தவுடன் தன் முன் தோன்றிய யாவும் மறைந்து விடுவதையும் தெரிந்து கொள்ளுகின்ருன் இதைத்தான் ஸ்வப்பனம் அல்லது கனவு என்று சொல்லுகிருர்கள். மனதில் தோன்றக்கூடிய எதுவுமே க்ஷணத்தில் மறையக்கூடிய தென்று முன்னொரு இடத்திலும் எடுத்துரைக்கப்பட்டுள்ளது. இந்த ஸ்வப்பனத்தில் காணும் சுகத்தை யொட்டியதுதான் மனிதன் சதமென்று கருதிக்கொண்டிருக்கும் சுக போக உலக வாழ்வும். நிற்க, கடவுளைக் கண்டதாய்க் கூறும் விஷயமும் ஓரளவு கனவிற்கு உவமையாகத்தான் கூறலாம். வேதங்களினுலும், புராண இதிஹாஸங்

களினுலும், திட்டமாய் இதுதான் என்று நிச்சயித்துக் கூற முடியாத ஒன்றைக்கண்டு விட்டேனென்று கூறினுலும் அதை நிரூபித்துக் காட்டுவது மிகவும் கடினமாகி விடும்.

சி:— அப்படியானுல் ஒருவருமே ஈஸனேக் கண்டிருக்க முடியாதா ?

கு:— அதையும் நிச்சயமாய் கூறமுடியாது ? பரந்தாமனின தரிசனம் கிட்டி அவன் நிலே யெய்தியவர்களுமுண்டு, இது விஷயத்தை ஸ்வப்னத் தன்மைக்கு ஒப்பிட்டுச் சொல்ல முடியாது. பண்டைக்கால தபஸ்விகளும், மஹான்களும் அவரவர்களுடைய நீண்ட கால அனுபவத்தை யொட்டியும், அப்யாஸத்தினுலும் அடைந்துள்ள உண்மை நிலேயைத்தான் ஈஸ்வர தரிசனத்திற்கு ஹேஷ்யமாயும், ஒப்பிட்டும் கூறலாம். தோற்றமென்ற பொழுதே மாயையின் விசேஷமே கவர்ந்து நிற்பதைத் திட்டமாய் மனதில் கொள்ள வேண்டும். எந்த உருவ அமைப்பையும் பெற்றிராத அகண்டா காரமாய்த் வியாபித்துள்ள பரம் பொருளே, சாதாரணப் பாமரர்கள் தன் கண்ணுல் காணமுடியா விட்டாலும் அவனருளேப் பெறவேண்டி ஆலயம் தொழுதுதான் ஆக வேண்டும்.

சி:— தாங்கள் கூறும் ஒவ்வொன்றையும் கடைப்பிடித் தொழுகுவது சுலபமல்ல வென்று ஒதுக்கிக்கொண்டே யிருந்தால், மனிதன் தெளிவதுதான் எப்படி ?

கு.– எதையும் அடைய வேண்டுமென்றால் கொஞ்சம் சிரமப் பட்டு உழைத்தால்தான் முடியுமென்பதை விளக்கத் தான் இவ்வளவும் கூறப்பட்டதே யல்லாது எதையும் கடைப்பிடிக்கலாகாதென்றே கூறவில்லையே.

சி:– முன்னர் கூறப்பட்ட மாயைகளையே தீய சக்தியின் ப்ரதி பலிப்பாய்க் கொள்ள முடியுமா?

கு:- அதை பற்றிப் பல வகையிலும் விளக்கியாய் விட்டதே, திருப்பவும் கேட்கக் காரணம்?

சி:– தாங்கள் அதை ப்ரதானமாய்ச் சம்மந்தப்படுத்திச் சொல்வதினால்தான்?

கு:– தீய சக்திகளை மட்டும் குறிப்பாய் மாயை யென்று கொள்வதை விட வெளியுலகிலும் சரியே, மனித னுடைய கற்பனையில் தோன்றும் ஒவ்வொரு விஷய மும் சரியே. தோன்றி மறைகின்ற எதுவுமே அதனால் கூறப்பட்டுள்ளவைதான் என்பதில் சந்தேகம் கொள்ள அவசியமேயில்லை யென்றுதான் கூறமுடியும்.

சி:– மாயையினால் சூழ்ந்துள்ள அவஸ்தைகளுக்குள் ளாகாமல் இருக்கும் வஸ்து உலகில் ஒன்றுமே யில்லையா?

கு:– நீ கூறுவதைப்போல மாயையினால் சூழப்படாத வஸ்து ஒன்று இருக்க வேண்டுமேயானால், அது எங்கும் வியாபித்துள்ள அகண்ட சத் சித்தானந்தமாய் விளங்கு

கின்ற பரம்பொருளான சர்வேஸ்வரனொருவனுகத்தா னிருக்க முடியும்.

சி:— அந்தப் பரம்பொருளின் உண்மை லக்ஷணத்தை இனியாவது வெளிப்படையாக எடுத்துரைக்கலாகாதா?

கு:— அன்பா. இதை நன்ருய் மனதில் பதிய வைத்துக்கொள். நிரூபன் (எந்த விதத் தோற்றமுமில்லாதவன்) தோற்றங்களுக்கெல்லாம் ஜீவாதாரமாய் யிருப்பவனும் நிர் குணன் (காமக்குரோதமென்றதும் மற்றும் செயல் படுகின்ற எந்தக் குணங்களுக்கும் இடமளிக்காதவன் அல்லது எந்தக் குணமும் அற்றவனும்) நிர்பேதன் (வேற்றுமை கொண்ட பாகுபாடுகளற்றவனும்) நிஷ்களங் கன்—எவ்விதக் களங்கமும் அற்றவனும் அல்லது எந்தக் களங்கத்தையும் கற்பித்துக் கூற முடியாதவனும், நிச்சந்தேகன்—(எவ்விதச் சந்தேகமு மற்றவன் அல்லது மனிதனின் மனப்பிராந்தியினுல் இதுவோ, அதுவோ வென்று எந்தச் சந்தேகத்தைக் கொண்டும் நிர்ணயம் செய்து கொள்ள முடியாதவனும்) மனச் சந்தேகத் துடன், வழிபடுகின்றவர்களுக்குத் தென்படாதவன், நிர்மலன் — அழுக்கென்று சொல்லப்படும், மல மூத்திர மாம்ஸாதிகளற்றவன் அல்லது ஆணவம், மாயை, கர்ம மென்ற மும்மலங்களும் தன்னை யணுக வொட்டாமல் தடுத்து நிற்பவனும் லோகாதீதன் மாயையினுல் நிறைந்த உலகத்திற்கு அப்பாற்பட்டவன், அல்லது அவ்வுலகையே தன் வசமாய் வைத்துக்கொண்டுள்ள வனும், நிர்நாசன்—எந்த சக்தியைக் கொண்டும் அழிக்க முடியாதவன், அல்லது அவனையடைய விரும்பும்

பக்தர்களையும் மஹான்களையும் நாச சக்தியிலிருந்து காப்பவனும் நித்யன் — என்றும் அழியாதவன் அல்லது பிறப்பு இறப்பென்ற இரண்டு மற்றவனும், நித்யா நந்தன் — என்றும் அழியாத சந்தோஷத்தைக் கொண்டவனும் தன்னைச் சரணடைந்தவர்களுக்கு உலக மென்ற பந்த பாசத்தை நீக்கித் தன்னிருப்பிடமான சாயுஜ்ய பதவி என்ற அழியாச் சுகத்தை யளிப்பவனும், எதையும் க்ஷண நேரத்தில் ஆக்ஞாபித்து நடத்திச் செல்லும் சர்வ வல்லமை பொருந்தியவனும் சர்வ லோகத்திற்கும் ஒரே ப்ரபுவாய் விளங்குபவனுமான சாக்ஷாத் பரமேஸ்வரன் ஒருவனே அப் பரம்பொரு ளாகும்.

சி:- குருதேவா, இனி சர்வேஸ்வரனின் ப்ரபாவத்தை யன்றி வேறெதையும் தெரிந்து கொள்ள என் மனம் இச்சை கொள்ள வில்லை.

கு:- அதைச் சிறிது சிறிதாகத் தெரிந்து கொள்வாய். அன்பனே, உன்னை யொத்த உண்மை சீடர்களாலன்றி வேறு எவர்தான் ஈஸ்வர ப்ரபாவத்தை யறிய முடிய மென்று நினைக்கின்றாய்; தவிர அன்பும் பக்தியும் மிகுந்த சீடர்களுக்குத்தான் ஈஸ்வரன் கட்டுப் படுகின்றார் (ஆதரவளிக்கின்றார்). அதைபற்றி மனதில் கொஞ்சமும் சஞ்சலம் வேண்டாம்.

சி:- ஸ்வாமி, அந்த ப்ரபுவானவர் நம் சரீரத்தில் எப்படி வியாபித்து நம்மை ஆட்கொண்டுள்ளார்?

கு:– சரீர சூக்ஷ்மத்தையும் தெரிந்து கொண்டு விட்டால் ஈஸன் எப்படி ஆவிர்பவிக்கின்றாரென்பது விளங்கி விடும். அதைத் தெரிந்து கொள்வதும், எடுத்த ஜென்மத்தில் கொண்டுள்ள கடமைகளில் ஒன்றாகும். நம்மிடம் வியாபித்துள்ள பரம் பொருளை உலகெல்லாம் தேடித் திரியாமல் ஒரு மனப்பட்ட சிந்தனையுடன் நம் உள்ளத்திலேயே காணும் பொருட்டு வழி காட்டுவதென்பதற்கே இயற்ற பட்டுள்ளன தர்ம நீதி நூல்களெல்லாம். ஆனால், அதன் உண்மை லக்ஷியங்களை மறந்து கண் முன்னால் காணும் வஸ்துக்களுக்கு மனதைப் பலியிட்டு, அதை சாஸ்வதமென்று நம்பிக்கொண்டு நம் உள்ளத்தைப் பந்த பாசமென்ற மாயத்திரையிட்டு, ஈஸனைக்காண வொட்டாமல் மறைத்துக்கொண்டுள்ளோம். அதனால் தான் பகவானை காண முடிவதில்லை. எப்படியெனில், ஆகாசத்தில் தோன்றிப் பிரகாசிக்கும் சூரியனை கரு மேகங்கள் சூழ்ந்து மறைத்துவிடுவதைப் போலவேயாகும். ஆனாலும் அவன் உதிக்காமலிருப்பதுமில்லை அவன் ஒளி குன்றிவிடுவதுமில்லை. அதைப் போலவே நம் கண்ணிற்கு ஈசன் புலப்படாவிட்டாலும் அவன் நம்மை விட்டு எங்கும் சென்று விட வில்லை. மேலும், பெரும் காற்றினால் மேகக் கூட்டங்கள் கலைக்கப்பட்டவுடன் சூரியனின் ஒளி நமக்குத் தென்படுவதைப் போல, மனமென்ற வஸ்துவைச் சூழ்ந்துள்ள தீய எண்ணங்களென்ற மாய மேகக் கூட்டங்களை ஈஸ்வரப் பக்தி யென்ற காற்றினால் கலைத்து, அப்புறப் படுத்தி விட்டால் நம்மிடம் கோயில் கொண்டுள்ள பரந்தாமனைத் தரிசிப்பதும் சுலபமே; இதற்குச் சிரத்தை

மிகுந்த தன்னை மீறிய அனன்யமான பக்திதான் தேவை. மற்றெந்தக் காரியங்களைக் கொண்டும் எண்ணச் சுழல்களை யகற்ற முடியாதென்று நிச்சயமாய்க்கூறலாம். இனி, நம் சரீரத்தைப் பற்றிக் கவனிப்போம்.

சி:— ஸ்வாமி, நிற்குணமானவன் எப்படிக் காரியங்களைச் செய்ய முடியும்?

கு:- கேவலம் – நிற்குணப்ருஹ்மமான சர்வேஸ்வரன் அந்த கரணத்தில் (உள்ளத்தே) பரமாத்ம ஸ்வரூபனாய் (ஆத்மா வென்று சொல்லப்படுவதற்கும் அப்பாற் பட்டவனாய்) வீற்றிருக்கின்றான். ஆனாலும், உலகத்தை எப்படி ரக்ஷிக்கின்றானோ அதைப்போலவே நம் சரீரத்தை ரக்ஷிக்கும் பொருட்டு சகுண ஸ்வபாவத்தைப் பெற்றுக்கொண்டு (ப்ரஹ்மத்திலிருந்து சேதிக்கப்பட்டு அல்லது அதிலிருந்து பின்னமாக்கப்பட்டு) மற்றும் (1) ப்ருதிவி (2) அப்பு, (3) தேஜஸ் (4) வாயு (5) ஆகாசமென்ற பஞ்ச பூதங்களாயும், அன்னமயம், ப்ராணமயம் மனோமயம் விஞ்ஞான மயம், ஆனந்த மயமென்ற பஞ்ச கோசங்களாகவும், கர்மேந் திரியம் ஐந்து, ஞானேந் திரியம் ஐந்து ஆக தஸேந்திரியங்களாகவும் குறிப்பாய் இவைகள் ஒவ்வொன்றும், அதனதன் வேலைகளைச் சரிவரச் செய்வதற்குத் தூண்டி இயங்கவைக்கும், ஜீவேஸ்வரன் என்று சொல்லப்பட்ட ஜீவாத்மாவாகவுமே வியாபித்துள்ளான். இவ்வளவிற்கும் மேலாக மனச் சாக்ஷியாகவும் இருக்கின்றான்.

சி:— ஈஸ்வரத்தன்மை இருவகைப்பட்டதாகத்தான் நம்மிடம் வியாபிக்கின்றதோ ?

கு:- இதைக்கூறுமிடத்து இருவகைப்பட்டது மட்டிலுமல்ல. எதிலுமுள்ள செயல்புரியும் தன்மை அல்லது செயலற்ற தன்மை இவ்விரண்டைத்தான் முக்கியமாய் வைத்துக் கொண்டு சிந்திக்க வேண்டுமென்றாலும், அது பலதரப் பட்ட வழிகளில் கொண்டு செலுத்துகின்றதைத்தான் நன்குணர வேண்டும். எதற்கும் காரணமாயுள்ள வஸ்து ஒன்றானாலும், அதிலிருந்து ப்ரதிபலிக்கப்பட்ட செயல் முறைகள் பலவகையாயிருப்பதை யொத்தே ஈஸ்வர வ்யாபகத்தன்மையும். நிற்க, இச் சரீரத்தை மூன்று வகையாகக் கூறலாம். ஸ்தூல சரீரம் (வெளி யங்கமாயுள்ளது), ஸூக்ஷ்ம சரீரம் (நம் கண்ணினால் காண முடியாத உட் சரீரம், காரண சரீரம் (இவ்விரண் டும் சேர்ந்து இயங்குவதற்குரியது). ஆக இம்மூன்றை யும் பரிபாலிப்பவன் நிர்குண ப்ரஹ்மந்தானென்றாலும் அதிலிருந்து பிரிந்து தனித்தியங்கும் ஜீவ சக்திதான் சகுண பாவத்தைக் கொண்டுள்ளது. அதையே செயல் களுக்கும் அதிபதியாக (அல்லது அதிகாரி யென்றும்) கூறலாம். ஆகவே, இந்த ஜீவனின் ரஹஸியத்தை யறிவது தான் அவசியமென்றும் அதைக்கொண்டுதான் பரமேஸ்வர நிலை யெய்த முடியுமென்பதைப் பற்றியும் அடுத்து வரும் அத்யாயங்களில் விளக்கமாய்த் தெரிந்து கொள்ளலாம்.

சி:- அதை மட்டிலும் தான் சிந்திக்க வேண்டுமா?

கு:- ஆம், அவசியம் தெரிந்துக் கொள்ளத்தான் வேண்டும். அவ்வாறில்லாமல் சர்வேஸ்வரனின் ஸ்வரூபலக்ஷணத் தை யறிய முடியாதென்று நிச்சயமாய்க் கூறலாம்.

தவிர, எங்கும் வியாபித்துள்ள ஜீவித சக்தியின் ஸூக்ஷ்மத்தைக் கொண்டுதான் சரீர சம்பந்தபட்ட சகல தர்மங்களும் (செயல்படும் எல்லா வேலைகளும்) நடைபெற்று வருகின்றன. சுருங்கக் கூறின் ஜீவன் தான் சரீரத்திற்குக் காரண பூதமாய் விளங்குகின்றது என்பதே யாகும்.

சி:— ஜீவன் சரீரத்திற்கு சம்பந்தபட்டதுதானே?

கு:— ஸ்தூல சரீரமென்ற மாம்ச கூட்டினுள் தங்கியிருக்கும் வரையில், அதைச் செயலில் ஈடுபட இயக்கும் அளவில் சம்பந்தம் கொண்டதுதான். ஆனால் சரீரத்தில் பொருத்தப்பட்டிருக்கும் மற்ற அங்க அமைப்புகளைப் போல எதையும் பற்றிக்கொண்டிருக்க வில்லை என்பதை மட்டிலும் கூற முடியும்.

சி:— ஸ்வாமி, ஜீவன் எப்படித் தன் காரியங்களை செய்து முடிக்கின்றது?

கு:— சரீர மென்பது இதற்கு முன் கூறிய (ஐந்தைந்து அம்சங்களை யொட்டிய) ரத்தம், சுக்லம், நீர், மாம்ஸம், எலும்புகள், தசைகள், முதலியவைகளாலும், மற்றும் மெய், வாய், கண், மூக்கு, செவி போன்றவைகளாலும், புலப்படக் கூடாத தாயிருக்கும் மனத்தினாலும் ஒருங்கே அமையப்பெற்ற ஒரு பிண்டமென்றே சொல்லலாம். இப்படி யமைந்துள்ள வஸ்துக்களின் உதவியைக் கொண்டுதான் ஜீவன் தன் வேலைகளைச் செய்து முடித்துக்கொள்ளுகின்றது. நிற்க, இச்சரீரத்

திற்கு மூன்று வித அவஸ்தைகளுண்டு. முறையே ஜாக்கிரதாவஸ்தை (மனிதன் விழித்திருத்தல்) இந்த அவஸ்தையில் மனிதன் வெளியங்க பங்களென்ற கர்மேந்திரியங்கள்) அதிகமாய் வேலை செய்து கொண்டிருப்பது). ஸ்வப்பனுஅவஸ்தை (மனிதன் நித்திரை செய்யும் காலத்தில் மனதிலுதிக்கும் எண்ணங்களின் ப்ரதித் தோற்ற மென்ற கனவு). இதைப்பற்றி முன்னொருயிடத்திலும் கூறப்பட்டுள்ளது. ஸுஷுப்தி (கனவிற்கு பின்னர் ஏற்படும் அமைதியான நித்திரை அல்லது எவ்விதத் தோற்றமும் மறைந்திருத்தல்.) இம் மூன்று அவஸ்தைகளிலும் ஜீவேஸ்வரனின் ப்ரபாலமே அதிகமென்று கூற வேண்டும். ஏனெனில் அங்ஙன மில்லை யெனின் இந்த அவஸ்தா தத்வங்களை மனிதன் தன்னுடைய அனுமானத்தில் (உத்தேசத்தில்) கூடத் தெரிந்து கொள்ள முடியாது.

சி:- ஸ்வாமி, இவ்விஷயத்தைச் சற்று விளக்கமாய்த் தெரிந்து கொள்ள ஆசைப்படுகின்றேன்.

கு.- நன்றாய்க் கவனமாய்க் கேட்டுக்கொள். மனிதன் விழித்துக்கொண்டிருக்கும் பொழுது விவஹார திசையில் (வேலைகளைச் செய்து கொண்டிருக்கும் பொழுது) அதற்குண்டான கர்மேந்திரிய ஞானேந்திரியங்கள் மனதின் கட்டளைப்படி நடத்திவரத் தூண்டும் ஜீவ சக்தியே ஜாகிருதை அவஸ்தை யென்று சொல்லப்படு கின்றது. ஸ்வப்னுவஸ்தையில், மனிதன் ஜாகிருதா வஸ்தையில், சஞ்சரித்துக் கொண்டிருந்த செயல் புரியும்

எண்ணங்களின் இருப்பிடமான மனமே தன் வேலை களைச் செய்கின்றது. இச்சைக்கிடமளிக்கும் மனதிற்கும் ஜீவனுக்கும் ரொம்பவும் நெருங்கிய சம்பந்த முண்டு. இதைத் துணையாகக் கொண்டுதான் மேலும் மேலும் ஒன்றைவிட்டு ஒன்றை நினைக்கச் செய்து கொண்டிருக்கும் பொழுது அவ்வெண்ணமே நித்திரையில் தோற்றமாய்க் காட்சியளிக்கின்றதை முன் இரண்டு இடத்தில் வேறு வகையில் குறிப்பிடப் பட்டது. நிற்க, மனிதன் நித்திரையிலிருந்து விழித் தெழுந்தவுடன் தன் முன் தோன்றியவற்றைச் சிந்தித் துப் பார்க்கிறுன். அவைகளில் சில ஞாபகத்தில் புலப் படுகின்றன, சில மறந்து விடுகின்றன. இது ஒரு புற மிருக்கட்டும். நித்திரை செய்யுங் காலத்தில், மற்ற கர்மேந்திரியங்கள் வேலை செய்யா விட்டாலும், ஜீவ னும் மனமும் மட்டிலும் தன் தொழிலை விடாமல் செய்து கொண்டே வருகின்றதென்பதை யறிய வேண்டும். இவ்விஷயத்தைத் தன் ஞானேந்திரியங் களின் உதவியைக் கொண்டு தெரிந்து கொள்ள முடிகின்றது. அவ்வாறு இல்லாவிட்டால் தான் நித்திரையில் கண்டவற்றை பிறரிடம் எடுத்துச் சொல்ல ஹேதுவில்லை யென்றே கூறலாம். மூன்றுவதான ஸுஷுப்தியும் நித்திரையிலேற்படுவதுதான்.

சி:— இதற்கும் முன் இரண்டிற்கும் ஏதேனும் வித்தியாச முண்டோ?

கு:— ஆம், உண்டென்றுதான் சொல்ல வேண்டும். எப்படி யெனில், மற்ற இரண்டு அவஸ்தைகளைப்போல

இதை யெளிதில் புரிந்து கொண்டு நிர்ணயம் செய்ய இயலுவதில்லை யென்றாலும் ஸுஷுப்திக்கு எந்த உணர்வுத் தன்மையுமில்லை யென்று மட்டிலும் ஓரளவு கூறலாம்.

சி:– ஏன் ஸ்வாமி அப்படி.

கு:– இந்த அவஸ்தையில் எந்த உருவத்தோற்றமோ அல்லது ஒன்றை ஸ்பரிஸிக்கும் (தொட்டு பார்த்தல்) தன்மையோ கிடையாது. சாதாரணமாய் மனம், மற்ற இந்திரியங்கள் சகலமும் சிறிது நேரம் ஓய்வு பெற்றுக்கொண்டு மனிதன் நன்றாய்த் தூங்கும் நிலை எதுவோ அதைத்தான் ஸுஷுப்தி யவஸ்தை யென்று கொள்ள வேண்டும் இதில் குறிப்பாய் இரண்டு விஷயங்களை மனதில் பதிய வைத்துக்கொள்ள வேண்டியதவசியம். ஒன்று இந்த அவஸ்தை நிலையில் மனமும் தன் வேலையிலிருந்து கொஞ்சம் ஓய்வுபெற்றுக் கொள்வதினால்தான் எதையும் நிர்ணயிக்க முடியவில்லை யென்பதையும், சரீரத்தில் பொருந்திய சகல அங்கங்களும் மற்ற இந்திரியாதிகளும் ஓய்வு பெற்றுக்கொண்டிருந்த போதிலும் ஜீவன் மட்டிலும் இளைப்பாறுவதில்லை என்பதையும் அறிய வேண்டும். அப்படி யதுவும் தன் வேலையிலிருந்து விடை பெற்றுக்கொண்டால் மனிதன் செய்து கொண்டிருந்த நித்திரையிலிருந்து திரும்பி விழித்தெழ வேண்டியதவசியமுமில்லை, அந்த க்ஷணமே இம்மண்ணுலகில் அவனுக்கென்று எந்த வேலையும் எதிர் பார்த்துக் கொண்டிருக்காது.

சி:– ஏன் ஸ்வாமி அப்படி? இதன் உட் கருத்தென்ன?

கு:– இதன் உள் ரஹஸியத்தைப் பின்னால் அறியலாம்.

சி:– அதுவும் சரியே. இந்த அவஸ்தை ஒவ்வொன்றிலும் எஜமானனாய் விளங்கும் ஜீவனுக்குத் தனித் தனியாக ஏதேனும் பெயர்களுண்டோ?

கு:– உலகில் மனிதன் தெரிந்து கொள்ள வேண்டிய பொருள்கள் ஒவ்வொன்றிற்கும் ஒரு பெயரை குறிப்பிட்டுத்தான் அழைக்கின்றான். அப்படி ஒரு பெயரு மில்லாத ஒன்றைத் தெரிந்து கொள்ளவும் முடியாது. அதை யொட்டித்தான் பகவானுக்கு ரூபம் ஒன்று மில்லா விட்டாலும், பல ரூபங்களையும் பல பெயர் களையும் இட்டு நாம் அழைக்கின்றோம். அதைப்போல வே, அந்தந்த அவஸ்தைகளில் பரிணமிக்கும் ஜீவனுக் குத் தனித் தனிப் பெயர்களுண்டு. ஸ்தூல சரீரத்தின் ஜாகிருதாவஸ்தையிலுள்ள ஜீவனுக்கு விஸ்வனென் றும் ஸூக்ஷ்ம சரீரத்தின் ஸ்வப்பனவஸ்தையில், தைஜஸனென்றும், காரண சரீரத்தைத் தாங்கி நிற்கும் ஜீவனுக்கு ஷுஷுப்தியில், ப்ராக்ஞனென்றும் பெயர் பெற்று விளங்கி அந்தந்த அவஸ்தைகளிலேற்படும் தன்மைகளை யனுபவித்து வருகின்றது.

சி:– குரு தேவா, நம் சரீரத்தில் எந்த இடத்தை ஈஸ்வரன் தன் வாஸஸ்தலமாய்க் கொண்டுள்ளான்?

கு:– நம் சரீரத்தில் முக்கியமான ஸ்தானங்கள் ஆறு உள்ளன. அவைகள் முறையே பின் வருமாறு:—

(1) மூலாதாரம் (2) ஸ்வாதிஷ்டானம் (3) மணிபூரம் (4) அநாஹதம் (5) விஸுத்தி (6) ஆக்ஞா சக்ரமென்பதாகும். இவைகளையே ஷட் சக்ரங்களென்றும், ஷடாதாரமென்றும் கூறுவதுமுண்டு. இதற்கப்பாற்பட்ட ஸ்தானமும் ஒன்றுண்டு. அதுதான் சாயுஜ்ய பதவி அல்லது மோக்ஷ நிலைக்கிருப்பிடமான (ஸ்ஹஸ்த்ராரமெனப்படும் சர்வேஸ்வரனின் இருப்பிடமாகும். இதில் ஆவிர்பவித்துள்ள நிர்குண ப்ருஹ்மத்தினிடமிருந்து பிரிக்கப்பட்டுள்ள சகுண ப்ரஹ்மமானது நாமரூப, குண பேதங்களுடன் கூடி ஒவ்வொரு ஸ்தானத்திலும் ஒவ்வொரு பெயரைக் கொண்டு வீற்றிருக்கின்றது. மேலும், சஹஸ்த்ராரத்திற்கு எவ்வளவு முக்யத்வ மளிக்க பட்டுள்ளதோ அதைப்போன்றதேயாகும் முதல் ஸ்தானமாகிய மூலாதாரமுமென்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டியதவசியம்.

சி:— ஏன் அது மட்டிலும் அவ்வளவு முக்கியம்?

கு:— நாம் மண்ணுலகில் ஜெனித்து, ஊர்ந்து, தவிழ்ந்து, நடந்து, வாழ்ந்து, திரும்பவும் மண்ணில் மறையும் வரையில் நாம் செய்கின்ற ஒவ்வொரு காரியத்திற்கும் சூக்ஷ்ம சக்தியாக விளங்கி, இயங்கச் செய்து கொண்டிருக்கும், ஜெகதம்பிகையின் அம்ஸமான குண்டலினி சக்தியின் இருப்பிடமே மூலாதாரமாகும். தவிர இதையே வேறு வகையில் சொல்லுமிடத்துச் சகல ஜகத்திற்கும் மூலப் பொருளாய் விளங்குபவனும் எந்தச் சுபா சுப காரியங்களையும் யாதொரு தடையுமின்றி (நிர்விக்னமாய்) செய்து முடிப்பதற்குற்ற

துணைவனும் சகல கணங்களுக்கும் அதிபதியாய் (அரசனாய்) விளங்குபவனும், ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், திரோதானம் அனுக்ரஹமென்ற பஞ்சக்ருத்யங்களுக்கும், ஐந்து கிரியைகளுக்கும் அப்பாற்பட்டவனும், மஹா கணபதி யல்லது விநாயக மூர்த்தியென்ற பெயர் பெற்றவனும், ப்ரணவ மென்று சொல்லப்படுவதின், ஆதார புருஷனாய் விளங்கும், ஆதி முதற்பொருளாகிய பரணவ மூர்த்தியே மூலாதார ஸ்தானத்தை தன்னிருப்பிடமாய் கொண்டுள்ளா னென்றும் கூறப்படலாம். ஆகவே தான், அதற்கென்று தனி முக்யத்வ மளிக்கப்பட்டுள்ளது. இதற்கடுத்தபடியாக வுள்ள ஸ்வாதிஷ்டானம் (மூலாதாரத்திற்கும் நாபி கமலமென்ற தொப்புள் ஸ்தானத்திற்கும் மத்தியில் உள்ளது அடி வயிறு என்றாலும் பொருந்தும்) (இரண்டாவது அத்யாயத்தில் கூறியுள்ள மூன்று சக்தியம்ஸங்களில் ஒருவளான) கலைகளுக்கு அரசியென்றும் கலாவாணி யென்றும், வீணாதாரிணியும், ஸரஸ்வதி யென்ற பெயரையும் பெற்றவளுடைய நாதனாய் விளங்கும் ப்ருஹ்மாவின் இருப்பிடமாயுள்ளது. (இதில்தான் பரமேஸ்வரன் சகல ஜகத்தையும்) தன் கர்ப ஸ்தானத்தில் வைத்துக்கொண்டு ப்ருஹ்மா என்ற பெயருடன் தன் சிருஷ்டித் தொழிலை நடத்துகின்றார். அதை யொட்டியே அவனை ஹிரண்ய கர்பனென்றும் கூறுவதுண்டு. மூன்றாவது ஸ்தானமாகிய மணிபூரம் (நாபி கமலகம்) உலகில்உள்ள சகல ஜீவராசிகளையும் சம்ரக்ஷிப்பவரும்) துஷ்ட நிக்ரஹம் (அஸத்யத்தையும் துஷ்கிருத்யங்களையு மழித்து) சிஷ்ட பரி பாலகரும் உண்மை

தர்மத்தையே தங்கள் லக்ஷியமாகக் கொண்டுள்ள பரம பக்த, பாகவத சிரோமணிகளான தர்மாத்மாக்களை ரக்ஷிப்பவரும். தசாவதார மெடுத்தவரும் (பத்து உருவத் தோற்றங்களை) தன் பரம பக்தனான அர்ஜுன னுக்குக் கீதை யென்ற, ப்ருஹ்மதத்வ விசேஷத்தைப் போதித்தவரும், தன்னைச் சரணடைந்து ப்ரார்த்திக் கின்றவர்களுக்கு, வேண்டிய சகல ஐஸ்வர்யங்களையும் (பொருட் செல்வம் மற்றுமுள்ளவைகள்) கொடுத்துதவு பவனும்) செல்வங்களுக் கரசியாய் விளங்குபவளும் மஹா லெக்ஷ்மி யென்று பெயரைப் பெற்று விளங்கு பவளின் பதியுமான மஹா விஷ்ணுவின் ஸ்தான மாயுள்ளது. நான்காவது ஸ்தானமாகிய அனுஹதம் (ஹ்ருதய ஸ்தானம்) தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷ மென்று சொல்லப்படும் (அதாவது தன்னை சரணடைந்து, தன் மனதில் விரும்பி யாசிக்கும் நான்கு விதப் பலன்களை யருளுபவரும்) சகல ஜகத்தையும் அழிக்கு வல்லமை பெற்றவரும், சம்ஹார மூர்த்தி யெனப் படுவரும், மஹேஸ்வர னென்ற பெயரைப் பெற்றவரும், ஹிமவான் புத்திரி என்று சொல்லப் படுபவளும் சகல லோகத்திற்கும் மாதாவாய் (தாயா ராக விளங்குபவளும்) பார்வதி யென்ற பெயரைக் கொண்டவளுடைய பதியுமான ருத்ர மூர்த்தியே தன் இருப்பிடமாய் கொண்டுள்ளார். மிகுதியுள்ள இரண்டு ஸ்தானங்களையும் மிக்க சூக்ஷ்ம புத்தியுடன் அறிந்து கொள்ள வேண்டிய விஷயங்களாகும். ஐந்தாவதான விசுத்தி (கண்ட ஸ்தானம்) தொண்டை ப்ராண சக்தியைத் தன் சகியாகக் கொண்டு ஜீவாத்மா வென்ற

பெயருடன் விளங்குபவரின் ஸ்தானமாகவுள்ளது. இதற்கடுத்துள்ள ஆக்ஞா சக்ரமெனப்படும் ஆருவது ஸ்தானம் (புருவ மத்ய பாகம் – அல்லது நெற்றிக்கண்ணிருப்பிடம்) இச்சைக்கும் (எதையும் அடைய வேண்டுமென்ற ஆசைக்கும்) அல்லது பரமேஸ்வரனுல் செய்யப்படும் சங்கல்ப காரியங்களுக்குத் தூண்டுகோலாய் விளங்கும் இச்சா சக்தியைத் தன் சகியாகக் கொண்டவரும் பரமாத்வா வென்ற பெயரைக் கொண்டவரின் இருப்பிடமாயுள்ளது. கடைசியாகவுள்ள ஸ்ஹஸ்த்ரார மெனப்படும் சிரோ ஸ்தானம் (ஸிரஸின் மத்ய பாகம்) ப்ருஹ்ம, விஷ்ணு, ருத்திர னென்ற மும்மூர்த்திகளின் செயல்களை ஒருங்கே பெற்றவரும், மோக்ஷத்திற் கிருப்பிட மானவரும் அல்லது மோக்ஷ சக்தியைச் சகியாகக் கொண்டவரும், ஞானத்திற்கு அதிபதியாய் விளங்குபவரும், சதாசிவனென்றும் ஞான மூர்த்தி யென்றும், ஸ்ரீ குருவென்றும் பெயர்களைப் பெற்று விளங்குபவரின் இருப்பிடமாய் விளங்குகின்றது. இதையே உண்மையில் மோக்ஷ நிலையடையும் ஸ்தான மென்பதையும், நிற்குண ப்ருஹ்மத்தின் இருப்பிடமிட மென்றும் கூறலாம். இதைச் சூசனையாக எடுத்துக் காண்பிக்கும் அடையாளமாகவே இரு கைகளையும் கூப்பிச் சிரசின் மேல் வைத்து ஈசனைத் துதிப்பதின் உண்மை ரஹஸிய மென்றும் கூறத்தகும்.

இத்துடன் மூன்ருவது அத்தியாயம் முற்றிற்று.

# நான்காம் அத்தியாயம்.

---

சி:— குருதேவா, இப்படி நம் சரீரத்தில் வெவ்வேறு தோற்றத்தோடும், அமைப்போடும் கூடிய ஈஸ்வரனை எப்படி ஒருமுகப் படுத்திக் காண்பது ?

கு:— அன்பனே, அதற்கென்று தான் மனிதனுக்கு மனம், புத்தி என்ற இவ்விரண்டு பிரத்யேகமான வஸ்துக்கள் கொடுக்கப்பட்டுள்ளன. அதுவும் தவிர அவ்விரண்டையும் எவ்வகையில் உபயோகிக்க வேண்டும் என்பதற்காக வகுத்து வைக்கப்பட்டுள்ள மார்க்கங்களெல்லாம் வற்புறுத்திக் கூறுகின்றனவே.

சி:— மனிதனுக்கு ஏற்படும் உணர்ச்சிகளெல்லாம் எதன் உதவியால் உண்டாகின்றன, மனதினுலா? இந்திரியங்களினுலா? அல்லது ஜீவனுலா ?

கு:- ஜீவனுக்கோ, அல்லது மனத்திற்கோ எதையும் ஸ்பரிஸித்துப் பார்க்கும் தன்மை யில்லை. ஒன்றை ஸ்பரிஸிக்க வேண்டுமே யானுல், (தொட்டுப் பார்த்து உணர்ந்து கொள்ளல்) ஸ்தூல ஸரீரமென்று சொல்லப்படும் வெளி யங்கங்களினுல் தான் முடியுமே யன்றி சூக்ஷ்ம சரீரத்தினுல் முடியாது. ஸ்தூல சரீரமும்கூட இந்திரியங்களின் உதவியின்றி தான் ஸ்ப்ரிஸித்தவற்றின் தன்மையை உணர முடியாது; ஏனென்ருல் நம் சரீரம் இயங்குவதற்கு (செய்யப்படும் காரியங்

களுக்கு) மூல காரணமாயிருந்து உதவியளிக்கும் மனம், புத்தி, இந்திரியங்கள், இம்மூன்றுமே விசைக் கருவியாய் விளங்குகின்றன. இதில் மனமும் புத்தியும் வேறு வகையிலிருந்தாலும் இந்திரியங்கள் தான் உணர்ச்சி யென்ற தன்மைக் கிருப்பிடமாயுள்ளன.

சி:- அப்படியானல், மனமும், புத்தியும் முக்கியமாய் கருதப்பட வேண்டியவை யல்லவா?

கு:- எடுத்துக் கொண்டுள்ள இவ்விஷயம் மனிதன் செயல்படும் காரியங்களைப் பொருத்தது. மேலும், இதில் தான் உணர்ச்சிக் குரிய தன்மைகளைத் தெளிவு படுத்திக் கொள்ள முடியும். தவிர இவ்விஷயத்தில் மட்டிலும், அறிவும், மனமும் அவ்வளவு ப்ரதானமாய் கொள்ளப்பட வேண்டியதில்லை யென்றே கூறலாம். இது ஒரு புறமிருக்கட்டும். மனதிற்கு ஏதோ ஒன்றைவிட்டு ஒன்றைச் சிந்தித்துக் கொண்டிருப்பதற்கு மட்டிலும் வலிமை இருக்கிறதே யல்லாமல் எதையும், செய்து முடிக்கும் ஆற்றல் கிடையாது, அந்த சிந்தனைச் சக்தியும்கூட ஜீவனின் உதவியினல் தான் ஏற்படுகின்றது. அறிவையும் அப்படித்தான் சொல்ல வேண்டும். எப்படியெனில், மனதினல் நினைத்த ஒன்றின் தராதரத்தைப் பற்றி நிர்ணயிக்க முடியுமேயன்றி வேறெதுவும் செய்ய சக்தியற்றது. இவ்விரண்டுமே கண்ணிற்குப் புலப்படாத சூக்ஷ்ம சரீரத்தை, தாயகமாய் கொண்டவைகள். நிற்க, இந்

திரியங்கள் தான் (கர்மேந்திரியங்கள்) பொதுவாய் ஸ்தூல சரீரத்துடன் பிணைக்கப்பட்டவைகள். ஆகவே இந்திரியங்களுக்குத் தான், உணரும் தன்மையுண்டு என்பது நன்கு புலப்படும்.

சி:— தாங்கள் இதற்குமுன் (மூன்றும் அத்தியாயத்தில்) எடுத்துக் கூறிய மூன்று அவஸ்தைகளுக்கும் (ஜாக்ர, ஸ்வப்ன, ஸுஷுப்தி) மனதிற்கும் என்ன சம்பந்தம்?

கு:— இதன் சம்பந்தத்தைத் தெளிவாய்க் கூறுமிடத்து மனம், புத்தி, இந்திரியங்கள் இவைகளெல்லாம் ஜீவனின் உதவியை எதிர்நோக்கி யிருப்பவைகளென்றே தான் சொல்லவேண்டும், அல்லது ஜீவனுடன் பிணைக்கப்பட்டவைக ளென்றும் கொள்ளலாம்.

சி:— ஸ்வாமி, இதை யெப்படி நிர்ணயித்துச் சொல்வது?

கு — சாதாரணமாய் இதுவோ, அதுவோ வென்ற மனக் குழப்பத்தைக் கொண்டுள்ள அனுமானத்தில் பார்ப்பதைவிட, தன் அனுபவத்திலேற்படும் (மனிதனின் ப்ரத்யக்ஷ உணர்வைக்கொண்டே நிர்ணயம் செய்து கொள்வதுதான்) உண்மையை யறிந்துகொள்ள ஹேதுவாகவிருக்கும். அதை யொட்டியதுதான் ஜீவனுக்கும் மனதிற்குமுள்ள உறவும். நிற்க, அவஸ்தைகளுக்கு மூலகாரணமா யிருப்பதும் இவ்விரெண்டும்தா னென்பதை, இனியும் அதிகம் கூறத்தேவையில்லை. முன்னர் கூறிய மூன்று அவஸ்தைகளில் முதல் இரண்டைவிட்டு

மூன்ருவதை மட்டிலும் எடுத்துக்கொண்டு சிந்தித்தால் உண்மை விளங்கும். எப்படியெனில், சுஷுப்தியில் மனம் எந்த வேலையும் செய்வதில்லை (எந்த நினைவும் மனதில் கொள்வதில்லை). அப்பொழுதும் ஜீவன் மட்டிலும் தன் வேலையைத் தொடர்ந்து செய்து கொண்டு வருகின்றதென்பது தெரிந்தவிஷயமே. ஒரு மனிதன் நன்ருய் தூங்கி யெழுந்தவுடன், தன்னை யறியாமலே நன்ருய் தூங்கியதாய் கூறுவதாய் வைத்துக் கொள்வோம், சிந்தனை நித்திரை யுண்டானுல்தான் இப்படிக் கூறத்தோன்றும். இதற்கு முந்திய ஸ்வப்ன அவஸ்தையிலோவெனில், மனமும், ஞானேந்திரியங்களும் கர்மேந்திரியங்களும் கூடியே வேலை செய்வதாகச் சொல்லலாம். உதாரணம் ஒரு மனிதன், தன் நித்திரையில், சில விபரீதமானதும், பயங்கரமானதுமான, கனவு காண்கின்ருன் (தன்னை எவரோ ஹிம்ஸிப்பதைப்போலவும், தான் ஏதோ ஒரு ஸ்திரீயுடன் சிற்றின்பம் அல்லது கலவியனுபவிப்பதைப் போலவும்). இதை யனுசரித்து தன் முன்னுல் தோன்றிய தோற்றத்தினுலோ அல்லது ஜாக்ரத்தில் தான் நினைத்துக்கொண்டிருந்த எண்ணத்தினுலோ, அது எதுவாக விருப்பினும் சரியே, அதை நித்திரையில் பிதற்றுகின்ருன், கூச்சலிட்டு அலறுகின்ருன், திடீரென்று விழித்துக்கொள்ளுகின்ருன், தன் சரீரமே தான் அறியாமல் ஆட்டம் காண்கின்றது. மேலும் இன்பக்கனவுகண்ட பலன், திடமற்ற சரீரம் கொண்டவனுயிருக்கும் பக்ஷத்தில் சில

சமயம் சுக்லமென்ற இந்திரியம் ஸ்கலிதமாகிவிடுவது முண்டு (வெளிப்பட்டுவிடுவது). இதிலிருந்து மனம் ஜீவனிடமிருந்து பிரிந்து அதற்குண்டான இயற்கை சேஷ்டைகளைக்கொண்டு, நம்மை யாட்டிவைக்கும் அரசனாய் திகழ்கின்றதென்பது நன்கு புலனாகின்றது. நிற்க, இது ஒவ்வொன்றும் கொண்டுள்ள உறவைத் தங்கள், தங்களின் அனுபவசாதனையில் நன்கு தேர்ச்சி பெற்றுள்ளவர்கள்தான், யோக சாதனத்தைக் கடைப் பிடிக்கும் யோகிகளும், தன் மனத்தை பரந்தாம னிடமே அற்பணித்து அவனையே தன்னிருப்பிடமாய் கொண்டுள்ள மும்முக்ஷக்களென்று கூறப்பெற்றவர் களுமாவார்கள்.

சி:- ஸ்வாமி, பூர்வ ஜென்ம விசேஷத்தைப்பற்றி ஒன்றுமே சொல்லவில்லையே.

கு:- அதைப் பற்றி நீ கேட்கவுமில்லை, அதனால் அதை யெடுத்துக் கொள்ளவில்லை. அதிலென்ன சந்தேகம்?

சி:- அது பற்றியும் கொஞ்சம் தெரிந்துகொள்ள ஆசைப் படுகின்றேன்.

கு:- இதற்கு முன் ஈஸனைத்தவிர வேறெதையும் தெரிந்து கொள்ள வேண்டியதில்லை யென்றாயே; திரும்ப வேறொன்றைக் கேட்பதின் காரணம்?

சி:- ஸ்வாமி, மன்னிக்கவும். ஜென்ம விசேஷமும் ஈஸனின் செயலைப் பற்றியதல்லவா, அதனால் தான் அதையும் தெரிந்துகொள்ள மனம் விருப்புகின்றது.

கு:- பூர்வ ஜென்ம மென்பது முற் பிறவி யென்பதின் கருத்தே யாகும்.

சி:- அப்படி யானல் இப்பிறவிக்கு முன்னும் மனிதன் பிறந்திருக்கின்ருனா?

கு:- ஆம் எடுத்திருக்கத் தான் வேண்டும்.

சி:- அது எந்த அமைப்பைக் கொண்ட ஜென்ம மாயிருக்கும்?

கு:- அதை திட்டமாய் கூறமுடியாது.

சி:- நிச்சயமாய் கூறமுடியாத ஒன்றை எப்படி அனுமானத்தில், உறுதியாய்க் கொள்ள முடியும்?

கு:- உத்தேசத்தைக் கொண்டு தான் கூறப்பட்டதேயன்றி நிச்சயித்துச் சொல்ல வில்லையே. அதன் உண்மையும் அறியவேண்டியதே. இதற்கு முந்தியது எந்த அமைப்பைக் கொண்ட ஜென்ம மாயிருப்பினும் சரியே, அதைப் பற்றிய சிந்தனை நமக்கு தேவையில்லை. இதற்குமுன் ஒரு பிறவி யிருந்திரா விட்டால் இம் மனிதப்பிறவி யெடுத்திருக்கக் காரணமில்லை. நம் கண் முன்னல் காணும் ப்ரத்யக்ஷ உதாரணங்களைக் கொண்டு தான் ஊகித்தறிய வேண்டும். மனிதனை சிருஷ்டித்த கடவுள், வேறு ஒன்றையும் படைத்திரா விட்டால் ஜென்மத்தைப் பற்றி சிந்திக்க வேண்டிய தவசிய மேற்பட்டிராது. அப்படிக் கில்லாமல் மனித

னைத் தவிர, மற்ற எத்தனையே ஜீவராசிகளையும் சிருஷ் டித்திருக்கும் பொழுதும், அவைகளும் ஒன்று பிறப்ப தும், மற்றொன்று இறப்பதுமாயிருக்கும் நிலையில் நாமும் அவைகளில் ஒன்ருயிருந்திருக்கலா மல்லவா ?

சி:– கற்பனை யென்பதின் கருத்தென்ன ?

கு:– கண்ணில் காணமுடியாத ஒன்றை நினைத்துச் சொல் வதே கற்பனையின் பொருளாகும். அது சிலவற்றிற்கு பொருத்தமாகவு மிருக்கலாம், சிலவற்றில் பொருத்த மற்று மிருக்கலாம்.

சி:– அப்படியானல் முற் பிறவியைப் பற்றி, இதுதா னென்று நிச்சயித்துக் கூற முடியாதா ?

கு:– ஓரளவு அப்படித்தான் சொல்லவேண்டும்.

சி:– முன்னுளில் எழுதி வைக்கப்பட்டுள்ள சாஸ்திர நூல் களில் திட்டமாய் கூறப்பட்டிருக்கலா மல்லவா ?

கு:– இருக்கலாம். ஆனல் அதுவும் நிச்சயமென்று ஊர்ஜிதப்படுத்த முடியாது.

சி:– என், அப்படிச் சொல்கின்றீர்கள் ?

கு:– மனிதன் பூமியில் பிறந்து, வளர்ந்து, தன்னை யுணரும் வினத் தெரிந்த பின்னர் தான் சாஸ்திர நூல்களை ஆரா யத் தொடங்கு கின்ருன். எழுத்தறிவு பெற்றவர் களுக்குத் தான் அதவும் சாத்யமாகின்றது. மற்றவர்

களுக்கு அது விளங்குவது மில்லை. அதைக்கொண்டு எப்படி நிச்சயமென்று கூறமுடியும்.

சி:– சாஸ்திரங்கள் உண்மை யல்லவா?

கு:– அதில் உண்மையு முண்டு, கற்பனையு மிருக்கலாம். தவிர அதில் உண்மையாயும் திட்டமாயும் கூறப்பட்டிருந்தாலும் அவை யெல்லாம், அனுமானத்தில், உள்ள ப்ரத்யக்ஷ ப்ரமாணத்தைக் கொண்டு தீட்டப் படுகின்றதென்பதை மட்டிலும் கூறலாம். ஏனென்றால் சாஸ்திர மென்பது, மனிதன் சீர்பட்ட வாழ்வை கடைப்பிடித் தொழுக வேண்டு மென்பதை யொட்டி மனிதனாலேயே உண்டுபண்ணி வைக்கப்பட்டுள்ள சட்ட திட்டங்களே யாகும். நிற்க, உலகில் வாழும் மனித சமுதாயத்தைத் தவிர வேறு எந்த ஜீவராசி களிடமாவது சாஸ்திர சம்ப்ரதாயங்கள் எடுத்துரைக் கப்படுகின்றனவா, அவைகளும் சரியே தன்னுடைய வாழ்வை சாஸ்திரங்களுக்கு அனுசரித்த முறையில் கட்டுப்பட்டுத்தான் நடக்கின்றனவா வென்பதை நன்றாய் சிந்திக்க வேண்டும். ஆனாலும் சாஸ்திரங்கள் உண்மையல்ல வென்றோ, அல்லது கற்பனை யென்றோ எவரும் கூற இயலாது. இது ஒரு புறமிருக்கட்டும். மனித ஜென்மத்தை மட்டிலும் எடுத்துக்கொள் வோம். கண் முன்னால் காணும் மற்றைய பிறவிகளின் மாறுபட்ட அமைப்புகளைக் கொண்டு சிந்திக்குமளவில் முற் பிறவியின் கர்ம பலன் ஒன்றுண் டென்ப

தும் அந்த கர்ம பலனின் கடைசி முடிவு தான் மனித ஜென்மமென்பதும் ஊகித்தறிந்தால் நன்கு புலப்படும். உதாரணமாய் காட்டில் வாழும் விலங்கினங்கள் ஒரு வகை யமைப்புகளுடனும் நாட்டில் வாழும் ஜந்துக்கள் ஒருவித அமைப்புடனும் தோற்றுவிக்கப் பட்டுள்ளன வென்பது, கண் கூடு. இதையும் தவிர ஊர்வனவும், பறப்பனவும், நீர் வாழ்வனவும் போன்ற அநேகம், இதன் மத்தியில் தான் மனிதனும் தோன்றியுள்ளான். இம்மனித ஜென்மத்திலுங்கூட எத்தனை மாறுப்பட்ட அமைப்புகள்; ஒருவன் குருடன், மற்றவன் கை, கால் ஊனன் (நொண்டி, முடம்), ஒருவன், ஊமை, மற்றவன் செவிடன், இதைப்போல எத்தனையோ கணக்கி லடங்காதவைகள். இவ்வளவிற்கும் அடிப்படையாக ஒரு காரண மிருந்தாலன்றி காரியமாக உருப்பெற்றிருக்க முடியாது. ஆகவே இதைக்கொண்டு வீண் சர்ச்சையி லிறங்காமல், எடுத்த பிறவியில் முக்கியமாய்ச் செய்ய வேண்டியதை மட்டிலும் தெரிந்து நடந்துகொள்ள முயர்ச்சித்தால் போதும். இதை இத்துடன் விட்டு மற்றதைக் கவனிப்போம்.

சி:- கடவுளைப் பற்றிய விஷயம் இவ்வளவுதானா, இன்னும் அடியேனுக்கு விளக்க வேண்டிய துண்டா ?

கு:- என் ? இதற்குள் சகலமும் தெரிந்துகொண்டு விட்டாயா. அல்லது இவ்வளவு தானென்று தீர்மானித்து கொண்டாயா ?

சி:– அடியேனின் அவசர புத்திக்கு மன்னிக்கவும், இன்னும் தெரிந்துகொள்ள வேண்டிய ஜீவன் முக்திநிலை, மோக்ஷத்தின் ரஹஸியம் போன்ற அநேக விஷயங்கள் உள்ளனவே.

கு:– அதுவும் தெரிந்துகொள்ளவேண்டியதுதான்: ஆனல் ஜீவன், மனம், இவைகளின் உறவை முற்றிலும் தெரிந்துகொண்டுவிட்டாயா என்ற, சந்தேகமேற்பட்டுள்ளது.

சி:– ஆம். அதில் இன்னும் சில விஷயங்களும் பாக்கியுள்ளன வென்பதை கேட்க மறந்துவிட்டேன்.

கு:– அவைகளென்னவோ, அதையும் தெரிவித்து முற்றிலும் சந்தேகமறத் தெரிந்துகொள்.

சி:– மனிதனிடம் குடிகொண்டுள்ள குணத்திற்கு காரணமாயுள்ள மனம் எது வரையில் தன் வேலைகளைச் செய்துகொண்டிருக்கின்றது?

கு:– ஜீவன் சரீரத்தில் எந்த நிமிஷம் வரையில் தங்கியிருக்கின்றதோ அதுவரையும் மனமும் வேலை செய்துகொண்டுதானிருக்கும். தனக்குதித்த எண்ணங்கள் செயலில் நடைபெருவிட்டாலும், நினைவுமட்டிலும் அகன்றுவிடுவதில்லை யென்றே நிச்சயமாய் கூற முடியும். இதில் இன்னுமொரு விஷயத்தையும் அறிந்து கொள்ளவேண்டிய தவசியமாகும்.

சி:– அதென்னவோ?

கு:– உலகில், சுகமென்றும், துக்கமென்றும், இன்பம், துன்பமென்றுமுள்ளவைகளை உண்மையில் அனுபவிப்பது யாரென்பதேயாகும். உலகில் சிருஷ்டிக்கப்பட்டுள்ள வஸ்துக்களனைத்தும் (போக்ய வஸ்துக்களென்றும்) அனுபவிப்பதற்கென்றே உண்டாக்கப்பட்டதான வஸ்துகளென்றும் கூறப்படலாம். அவைகளையனுபவிப்பவன் போக்தாவென்றும் கூறப்படுகிறுன். இதைத் தெரிந்துகொள்வதுதான், மனதிற்கும் ஜீவனுக்குமுள்ள தொடர்பை நன்ருய் நிர்ணயித்துக் கொள்ள வழியாகும். உலகில் தோன்றும் சகல வஸ்துக்களையும் அனுபவிக்க வேண்டுமென்று நினைத்துக் கொள்வது மனமேயாகும். தனது எண்ணத்தைக் கொண்டு, ஜீவனுல் தூண்டப்பட்டு இயங்கும் இந்திரியங்களினுல் செய்யப்படும் காரியங்கள் சகலவற்றையும் தானே அனுபவிப்பதாக பாவித்து மகிழ்ச்சியடைகின்றது. நிற்க இந்திரியங்களுக்கு இயங்கும் சக்தி குன்றிவிட்டால் (பலம் குன்றிவிட்டால்) எதையும் செய்யமுடியாமல் போய்விடுகின்றது. அப்படிக்கிருந்தாலும் மனதிற்கு அனுபவ ஆசைமட்டிலும் அகன்றுவிடுவதில்லை. நிற்க, சுகம், துக்கம் இவைகளின் இருப்பிடந்தான் மனமேயன்றி அவைகளை உண்மையில் அனுபவிப்பவன் ஜீவனேயன்றி வேறெதுவுமல்ல. மனம் ஒரு வஸ்துவைப் பற்றிக்கொண்டால் அதை உடனே செயலில் கொண்டுவர ஜீவனுக்கு கட்டளை

யிடுகின்றது. உடனே ஜீவனும் தன் கீழ் வேலைசெய்யும் இந்திரியங்களுக்கு கட்டளை யிடுகின்றது. அச்சமயங்களில் அறிவென்ற வஸ்துவைச் சரியான வழியில் உபயோகப்படுத்தாவிட்டால் செயல்படும் காரியங்களும் விபரீதமாய் முடிந்துவிடுகின்றன. இதனுலேற்படும் பலன்களை, இந்திரியங்களைக்கொண்டு ஜீவன்தான் அநுபவிக்கின்றது(சூக்ஷ்ம ரஹஸியம் இதுவேயாகும்). இவைகளையே கர்ம பலனென்றும் கூறலாம். இதற்கேற்றபடி ஈஸனுல் நிர்ணயிக்கப்பட்ட ஜென்மமெடுப்பவனும் ஜீவனேயாவான். ஜீவன் மனமென்ற அரசனுக்கு கட்டுப்பட்டவனுகி, அவனுல் தூண்டப்பட்டு செய்யும் காரியங்களில், பாபம், புண்யமென்றதும், நன்மை தீமை யென்றதுமாகிய, கர்மவினைகள் ஜீவனைத்தான் சூழ்ந்துகொள்ளுகின்றது. இதை யொட்டித்தான் ஆரம்பத்திலிருந்து மனத்தையே செம்மைபடுத்திக்கொள்ள முயலவேண்டுமென்று வற்புறுத்தப்படுவதுமாகும். ஆகவே மனிதன் செய்யும் நன்மை தீமையென்ற சகல காரியங்களுக்கும் ஏதேனும் பலனிருக்குமேயானுல் அது ஜீவனைத்தான்பற்றி நிற்குமேயன்றி வேறெதையுமல்ல.

சி:- உலகம், மனிதன் இவ்விரண்டும் எதிலிருந்து உண்டாயின?

கு:- ஆக்ஞா சக்ரமென்று சொல்லப்பட்டுள்ள, பரமேஸ்வரனின் நெற்றிக்கண்ணிலிருந்து (அதைத்தான் மனித

னுக்கிருக்கும் இரண்டு கண்களைத்தவிர மூன்ருவது கண்ணென்றும் அகக்கண்ணென்றும் கூறுவது) தோன்றிய (இரண்டாவது அத்யாயத்தில் கூறியுள்ள) "ஓம்" என்ற ப்ரணவநாதமாகும். அப்ப்ரணவத்தையே வேதாகம சாஸ்திரங்களிலும் மற்றும், மனிதனின் அன்ருட சுபாசுபகாரியங்களிலும் மூலப்பொருளாய் கூறப்பட்டுள்ளது. சப்தத்திலிருந்து (ஒலியிலிருந்து) உதயமாவதே நாதமெனப்படும் அல்லது ஒலியின் முடிவே நாதமெனப்படலாம், அதிலிருந்து தோன்றியதே உலகம். மனித சரீர சம்பந்தப்பட்டவரையில் அது இயங்குவதற்கு ஜீவன்தான் காரணமென்ருலும், அது பூரணமாய் உருப்பெற்று வளர்ந்துவருவதற்கு மூலப்பொருளாய் விளங்குவது, ப்ரணவத்திலிருந்துதித்த நாத பிந்துவேயாகும், அதன் ப்ரெதிபலிப்புதான் மனித ஜெனனமாகும்.

சி:- ஸ்வாமி, மனம் ஒன்றைவிட்டு ஒன்றைப்பற்றி நிற்கக் காரணமென்ன?

கு:- அவித்யை (அல்லது அக்ஞானத்தினுல்) சூழப்பட்டு, தோன்றும் சகலவற்றையும் அனுபவிக்கும் கர்த்தா, தானேயென்று, எண்ணிக்கொண்டிருப்பதினுல்தான்.

சி:- அக்ஞானமேற்படக் காரணமென்ன?

கு:- இதில் இரண்டு வகையுண்டு: ஒன்று ஞானம் (அறிவு-புத்தி), மற்ருென்று அக்ஞானம் (அறிவின்மை—புத்தி

ப்ரகாசமில்லாமை). இவ்விரண்டிற்குமே காரண வஸ்துவாயிருப்பதுதான் பூர்வஜென்ம ப்ராரப்த விசேஷமெனப்படும் முன் வினைப்பயன்.

சி:- அக்ஞானத்தை எதைக்கொண்டுப் போக்குவது?

கு:- ஞானமென்ற ஒரு வஸ்துவினாலன்றி வேறெதைக் கொண்டும் இயலாது. எப்படியெனில், இருட்டாக ஒரு இடத்தில் ஒரு தீபத்தை யேற்றிவைத்தவுடன் அங்குள்ள இருள்நீங்கி தீபத்தின் ப்ரகாசமே (ஒளியே) தென்படுகின்றது. அதுவும் தீபத்தின் ஒளி எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாக ப்ரகாசிக்கின்றதோ (மற்ற விளக்குகளை காட்டிலும் அதிகபக்ஷ ஒளியைத் தரக் கூடிய மின்சார விளக்கைப்போன்றதாக) அதற்கேற்றபடி, இருளே தென்படுவதில்லை யென்றும் கூறலாம். நிற்க, தீபமென்று கூறுமிடத்து ஒளியுடன் கூடிய ஜ்வாலையும் (எதையும் எதிர்த்துவிடும் சக்தியும்) கொண்டுள்ளது, ஒருவர் சொல்லாமலே விளங்கும். அதை யொத்த நம்மிடமுள்ள ஞானமென்ற சுடரானது, (தீபமானது) நன்றாய் ப்ரகாசித்து ஒளி வீசும்பொழுது மனதைச் சூழ்ந்துள்ள அக்ஞானமென்ற இருளை நீக்குவதுடனில்லாமல், மாய்கையின் விசேஷத்தினால், மனிதனுக்குண்டாகும் தீய குணங்களையும் சுட்டெரித்துவிடுகின்றது. அத்தகைய ஞான சுடரின் இருப்பிடமே கடவுளின் இருப்பிடமென்றாலும் அல்லது ஞானமே கடவுளென்றாலும் பொருந்துமென்றே

கூறலாம். இதைத்தவிர தன் புத்தியைக்கொண்டு செய்யும் காரியங்கள் நன்மை பயக்கக்கூடியதாயிருப்பினும் அதில் பற்றுதல் கொள்ளச் செய்வதையே விஷய ஞானமென்றும் கூறத்தகும்.

சி:- இந்த ஞானத்தின் சூக்ஷ்மத்தை யறிந்துகொள்ள விரும்புகின்றேன்.

கு:- அதன் ரஹஸிய தத்வத்தை எந்த அளவிலும் நிர்ணயிந்துச் சொல்ல இயலாது; ஏனெனில், அதைப் பரம்பொருளுக்குச் சமானமான தென்றும், அதையே ஈஸ்வரனென்றும் கூறும்பொழுது, மனித புத்தியைக் கொண்டு இதுதானென்று எப்படி நிச்சயித்துக் கூற முடியும்? என்ருலும், மனிதனின் பகுத்தறிவுக் கெட்டிய வரையில் கொஞ்சம் தெரிந்துகொள்ள வேண்டியதே. பொதுவாய் ஈஸ்வர தத்வ மறிந்து அதையே பின் பற்றிச் சென்று அல்லது அத்துடனேயே பிணைத்துக்கொண்டிருப்பதே யாகும். சித்தத்தில் (மனதில்) தோன்றும் எண்ணங்களுக்கு இடம் கொடுக்காமலும், எதுவும் தனது, அல்லது நான் என்ற மமதாகாரத்தை யகற்றியும், எதுவும், பரந்தாமனின் கட்டளைக் கப்பாற்பட்டதல்ல என்ற திடநம்பிக்கை கொண்டுள்ளதுமான நிலை யெதுவோ அதையும் ஓரளவுக்கு ஞான மடைந்ததின் சூஜ்ஞையாகக் கொள்ளலாம். இந்த மனோநிலை யேற்படுவதற்கும், மனிதனின் முடிவு காலம் நெருங்குவதற்கும்

சற்றேறக் குறைய, அநேகமாய் ஒத்ததாய்த்தானி ருக்கும். இது ஒருபுற மிருக்க, உண்மையில் நாம் அறிந்துகொள்ள வேண்டியது ஆத்ம ஞானத்தை (ஈஸனை) பற்றியதே யாகும்.

சி:- அப்படியொன்று தனியா யிருக்கின்றதா ?

கு:- ஆம், அதுதான் நம் உள்ளத்தே குடிகொண்டு நான் என்ற பாவத்திற்கும், அல்லது சொல்லிக்கொண் டிருப்பதற்கும் காரணமாயுள்ள வஸ்துவான பரம் பொருளின் இருப்பிடம். அல்லது அதையே பரம் பொருளென்றும் கூறலாம்.

சி:- அதை யறிந்தவர்கள் எவரோ ?

கு:- அதைக் குறிப்பிட்டுக் கூறமுடியாது.

சி:- அநேகர் தங்களுக்கு ஞானம் வந்துவிட்டதாய்ச் சொல்லிக்கொண்டிருக்கின்றனரே.

கு:- அநேகர் கூறிக்கொண்டிருக்கலாம், உண்மையில் அந் நிலை யெய்தவர்கள் (பெற்றவர்கள்) கோடிக்கு ஒரு வராய்த் தானிருக்க முடியும். தவிர, அப்படியே சகல ரும் சொல்லிக்கொண்டாலும் அவை யெல்லாம் தானென்ற அகந்தையினல் கூறப்படுமே யல்லாது வேறெதுவும் அல்ல. அந்த "நான்" என்ற சொல் லற்று, சிந்தை யற்று, செயலற்று இருக்கும் நிலையெய் தவர்கள் (பெற்றவர்கள்) தாங்கள் ஞானத்தை

யடைந்து விட்டதாய் எவரிடமும் சொல்லி பெருமை படுத்திக்கொள்ள முன்வர மாட்டார்கள். இந்த நிலை யடைய (தன்னிடமுள்ள ஈஸனைக் காண) தன் ஆத்ம தத்வ சோதனையைக் கொண்டுதான் ஈஸனை யறியவும் முடியும். இப்படி யறிந்தவர்கள் தான் ஆத்ம ஞானிக ளென்றும், ப்ருஹ்ம ஞானிகளென்றும் கூறப்படு கின்ற மஹான்களாவர்.

சீ:- இச் சரீரத்தை சிலர் இகழ்ந்து பேசுவதும் சிலர் புகழ்ந்து கொள்ளுவதும் எதை யுத்தேசித்து, அல்லது என்ன காரணம்?

கு:- இதற்கென்று தனியாக எந்தக் காரணத்தையும் கூற முடியாது. வெளிப்படையாகப் பார்க்குமிடத்து அவ ரவர்களின் மனோ தர்மத்தை யொட்டி எப்படி வேண்டு மானாலும் சொல்லிக்கொண்டிருக்கலாம். ஒருவன் சரீர தூஷணை, பூஷணைகளைக் கண்டு அவனது ஸ்வபாவத்தை நிர்ணயித்துவிடவும் முடியாது. பொதுவாய் சரீர மெடுத்து உலகில் நடமாடிக்கொண்டிருக்கும்வரையில் நன்மை, தீமை, சுகம், துக்கமென்ற எத்தனையோ விஷயங்களை அனுபவித்துக்கொண்டிருக்கும் சுகத்தில் ஆனந்தமும் துக்கத்தில் சஞ்சலமும் வெறுப்பும் கொள்வது மனிதனுடன் ஒட்டிய இயல்பாயுள்ளது. இதை யனுசரித்தவிஷயமே தூஷணை பூஷணை யென்ற இரண்டு விஷயங்களும். இதற்கும் ஆதி காரணமா யுள்ள உலகமெல்லாம் நொடியில் சுற்றிக்கொண்டு

திரும்பவும் தன்னிருப்பிடமேவந்து சேரும், மனித னின் மனமேதான், என்று நிச்சயித்துக்கொள்ளலாம். இது ஒரு புற மிருக்கட்டும். அப்படித் தன் சரீரத்தை யிகழ்ந்துகொண்டிருப்பதாயும் வைத்துக்கொள்வோம். தன் பாப கர்ம விசேஷத்தினுல் ஏதேனும் நோய், நொடி கண்டுவிட்டாலும், அல்லது வேறு ஏதேனும் உபாதிகள் தோன்றிவிட்டாலும், அதற்கு எந்தப் பரி ஹாரமும் (கஷ்ட நிவர்த்திகுரிய மாற்று வழிகள்) தேடாமலிருக்கின்றுர்களா, அல்லது அப்படித்தா னிருக்கமுடியுமா என்பதைச் சிந்திக்கவேண்டும். தான் நினைத்தபடி ஒருவனுக்கு நிவர்த்தியேற்பட்டாலே அதில் திருப்தியடைகின்றுன், அப்படிக்கில்லாவிட் டாலோ சரீர நிந்தனையில் கொண்டுபோய்விடுகின்றது. அத்துடனில்லை; ஈஸ்வரனை நிந்திக்கவும் தொடங்கிவிடு கின்றுன். இப்படி தூஷித்துக்கொண்டேயிருப்பவர் கள் தனக்கென்ற விருப்பத்தை யகற்றிவிட்டார்களா, அல்லது ஏதேனும் போஷணைகளில் குறைத்துக் கொள்ளப்படுகின்றனவா, இதையெல்லாம் அவரவர் களே தீர யோசித்துக்கொள்ளவேண்டிய விஷயம். நிற்க, மனிதனைவிட்டு எந்த கர்ம வினைகளும் அகன்று விடுவதில்லை, அல்லது கர்மங்களை மனிதன் ஒதுக்கித் தள்ளவும் முடியாது. இவை யெல்லாம் எப்படி யிருந்த போதிலும், என்றோ ஒரு நாள் இம்மண்ணில் வைத்து எறிக்கப்பட்டோ, புதைக்கப்பட்டோ மறை யப் போகும் இச்சரீரத்தை புகழ்ந்துகொள்வதினுலோ

அல்லது இகழ்வதினலோ அடையப் போவது ஒன்று மில்லை. இவ்விரண்டிற்கும் தான் அதிகாரியல்ல வென்பதை உணர்ந்து கொண்டால் அது பற்றிய சிந்தனைக்கே யிடமில்லை யென்பது நிச்சயம்.

சி:- நம் சரீரம், மிகவும் அறுவறுக்கத் தக்க மல, மூத்திர மாம்ஸாதிகளினல் தானே அமையப் பெற்றுள்ளது, அதில் பகவான் எப்படி தங்கியிருக்கின்ருன் ?

கு:- ஆம் நீ கேட்பதும் சரிதான். ஈஸ்வரன் நமது ஆத்மா வேயாகும். சரீரத்திற்கு ஆதார பூதமாயுள்ளது, அதுவே யென்ருலும் எதையும் பற்றிக் கொண்டிருக்க வில்லை. தவிர, மனித உடற்கூடு அசுத்தம் நிறைந்தவை யென்ருலும், பரமேஸ்வரன் அதற்கப்பாற் படடவனு கவே தனித்து நிற்கின்ருன். மேலும் அவனை நிர்மல மானவன் என்று கூறும்பொழுது, சுத்தா சுத்தத் தைப் பற்றிய சிந்தனை அவனுககேது ; இவ்விரண்டை யும் பற்றிச் சொல்வதெல்லாம் மனிதனுடன் கூடி வாழும் எண்ணம் இருக்கும் வரையில் தானே இவ் விரண்டையும் கற்பிததுக் கொள்வதும் மனமே யல் லவா ? நிற்க, அசுத்தமென்று தெரிந்த சரீரத்திற்கு ஏன் அர்த்தமற்ற அலங்காரங்கள் செய்துகொள்ள வேண்டும், ஆடையாபரணங்களெதற்கு, அந்த அசுத்த தன்மை மென்மேலும் வளர்க்க உணவெதற்கு இவை யெல்லாவற்றையும் தனக்குத் தேவையென்று விரும்பி யழைப்பது மனிதனின், மனமா அல்லது

சரீரத்தில் நிரம்பியுள்ள அசுத்த வஸ்துக்களா என்பதை சிந்திக்க வேண்டும். சரீரத்தைக் காட்டிலும் பன் மடங்கு அசுத்தம் நிறைந்த பாத்திரம் ஏதேனும் ஒன்றுண்டென்றல், அது தனக்குத் தோன்றிய வகையெல்லாம் கற்பித்துக் கொண்டிருக்கும் மனமேயாகும். சிந்தனையற்று, செயலற்று, பரமேஸ்வர ஸ்வரூபமாய் விளங்கும் ப்ருஹ்மத்திற்கு சுத்தா சுத்தத்தைப் பற்றி எண்ணத்திற் கிடமில்லை யென்பதையும், அவை யெல்லாம் மனிதனுக்கே யன்றி ஈஸனுக்கல்ல வென்பதையும், நன்குணர வேண்டும்.

சி:- மனித சரீரம் அழியக் காரண மென்ன ?

கு:- இதற்கு முன்னல், ஜீவனே சரீரத்தைக் கொண்டு தன் கர்மாக்களை அனுபவிக்கின்றன் எனக் கூறப்பட்டதல்லவா ? அக்கர்மங்கள் எவ்வகைப் பட்டதாயினும் சரியே அவைகள் சகலமும் செய்து முடிந்த பின்னர், அல்லது அதற்கென்ற கால நிர்ணயப்படி, தான் பெற்ற உடற் கூட்டைவிட்டு எங்கு போய் சேர வேண்டுமென்று ஈஸனல் ஆக்ஞாபிக்கப்படுகின்றதோ அவ்விடத்தை யடைந்து விடுகின்றன். ஜீவன் கூட்டை விட்டு வெளியேறிய பின்னர், இம்மாம்ஸ பிண்டத்தில் எவ்வித ப்ரயோஜனமுமற்று விடுகின்றது. உபயோகமற்ற ஒரு பொருளைத் தங்களுக்குத் தேவையில்லை யென்று ஒதுக்கி தள்ளுவதைப்போல சரீரத்தையும் அப்புறப்படுத்தி அழிக்கின்றனர்.

சி:– இப்படிச் சரீரம் அழிந்துபோவதைத் தானே, சாவு அல்லது மரணமென்று சொல்லப்படுவது.

கு:– ஆம்.

சி:– அதிருக்கட்டும். சிலர் பால்யத்திலும், சிலர் சிசு பருவத்திலும், சிலர் தாயின் வயிற்றினின்று வெளிப்பட்டவுடனேயும், மறித்து விடுகின்றார்களே, அந்த ஜீவன்களுக்கு பூமியில் செய்யவேண்டிய கர்மங்கள் ஒன்றுமில்லையோ ?

கு:– நீ கேட்பதைப்போல் பெரும்பாலான ஜீவர்களுக்கு ஏற்படுவதில்லை. பலகோடி ஜீவன்களில் ஏதேனும் ஒரு சில சத விகிதங்களுக்குத்தான் அப்படி யேற்படும். அதுவும் எந்த அளவில் சரீரமென்ற கர்மத்தை தாங்க வேண்டுமோ அது வரையில் சுமந்த பிறகு தான் வெளியேறுகின்றது. நிற்க, ஜீவன் மண்ணில் பிறந்தவுடன் மறிப்பதை சிந்திக்கும்பொழுது, அதை கற்பத்தில் தாங்கி யிருந்த தாயின் கர்ம விசேஷத்தை மட்டிலும் தான் ஆராய்ந்து பார்க்க வேண்டியவை யாகும். இவைகளை யெல்லாம் சுருங்கக் கூறுமிடத்து, ஜீவன் செயல்பட்டு அனுபவிக்க வேண்டிய கர்மாக்களுக்கு எவ்வளவு கால அளவு நிர்ணயிக்கப்பட்டுள்ளதோ அதுவரையில் சரீரத்தைத் தாங்கி நிற்கின்றதென்பதே யாகும்.

சி:– மரணத்தைக் கண்டு மனிதன் கலங்குவானேன் ?

கு:– இதைப்பற்றி பின்னால் தெரிந்துகொள்ளலாம்.

சி:- அதற்கென்று தனியாகக் காலம் வேண்டுமா ?

கு:- ஏன், இவ்வளவு அவசரம் ; எது ஒன்றும் அதற் கேற்ற காலங்களில் மனதில் தெளிவாய் பதியும். அதைவிட்டு எதை வேண்டுமானாலும், எப்பொழுது வேண்டுமானாலும் தெரிந்து கொள்ளலாமென்றோ, தெரிந்தவற்றைச் செயலில் கொண்டுவர விரும்புவது, நிதான புத்தியை இழக்கச் செய்துவிடும். அப்படி தன் நிதானம் தவறி செய்யும் காரியங்களும் சரியே, தெரிந்துகொள்ளும் விஷயங்களும் சரியே ஒன்றிற் கொன்று நேர் மாறான பலனைத் தான் அளிக்கும். நிற்க, இம்மரண மென்ற விஷயமோவெனில், மனித வாழ்வின், முடிவான கடைசி நிமிஷத்தில் ஏற்படும் சம்பவத்தைப் பற்றி நிர்ணயிக்க வேண்டியவை யாகும். அதற்கு காரணமாயுள்ள மற்றவைகளை சிந்தித்த பின்னர் இதை யெடுத்துக்கொள்வதே நலம்.

சி:- நம் மனதைக் கொண்டு ஈசனைக் காணமுடியுமா ?

கு:- மனம் ஒரு நிலைப்பட்டால் காணமுடியுமென்றே கூற லாம்.

சி:- ஈசனை வழிபட்டால், மனிதனை சூழ்ந்துள்ள கர்ம வினைகள் தீர்ந்துவிடுமா ?

கு:- அதை நிச்சயித்துக் கூற இயலாது. ஏனெனில், மனி தனுக் கேற்பட்டுள்ள ஜென்மமே முன்னாள் வினை பயனை யொட்டியே ஈசனால் நிர்ணயம் செய்யப்பட்

டுள்ளபொழுது அவைகளை யனுபவித்துத் தான் கழிக்க வேண்டுமே யல்லாது, அது நம்மைவிட்டு எளிதில் அகன்றுவிடுமென கூறுவதற்கில்லை. தவிர, அவரவர்கள் செய்ய வேண்டிய சத் காரியங்களெல்லாம் எதை யுத்தேசித்தென்றாலோ எடுத்துள்ள இப் பிறவிக்குப் பரிஹாரம் தேடிக்கொள்ளும் பொருட்டே யாகும். நம்மைவிட்டு எதுவும் அகலப் போவதில்லை யென்று எந்த நல்ல காரியமும் செய்யாமலிருந்து விடலாமென்று நினைப்பதும் தவறாகும்.

சி:- ஸ்வாமி, ஒன்றும் செய்யாமலிருந்து விட்டால் என்ன வாகும்?

கு:- அதன் முடிவு எப்படி வேண்டுமானாலு மிருக்கட்டும், பல ஜென்மங்கள் எடுக்கபெற்று ஒவ்வொன்றையும் கழித்தப் பின்னரே மனித ஜென்மம் கொடுக்கப்பட்டுள்ளதாய் பெரியோர்களால் திட்டமாய் கூறப்படுகின்றது. முற் பிறவியில் தெரிந்தும் தெரியாமலும் செய்துள்ள பாப புண்ய கர்ம விசேஷங்களுக்குப் பரிஹாரம் தேடிக்கொள்ளத்தான் பகுத்தறிவுள்ள மனிதப்பிறவி யளிக்கப்பட்டுள்ளது (இதுதான் உண்மையில் மனித ஜென்மத்தின் சூக்ஷ்ம ரஹஸியம்). சத் கர்மா வென்று சொல்லப்படுவதும் ஈஸ்வர சிந்தனையும், அவனைக் குறித்த காரியங்களுமே யாகும். இப்பொழுதே யவைகளைச் செய்து முடித்துக் கொள்ளாவிட்டாலோ, (உலகமும், அதில் அடையும் சிற்றின்ப,

சுகமுமே ஆநந்தமென்று கருதி வாழ் நாள் பூராவும் பர மேஸ்வரனை சிந்திக்காமல் வீண் நாளாய் கழிப்பவற்கே இது பொருந்தும்) அடுத்த பிறவி யெப்படி யிருக்கு மென்று முன் கூட்டி திட்டமிட்டுச் சொல்லமுடி யாது. குறிப்பாய்ச் சொல்ல வேண்டுமேயானால், தன் வாழ் நாளில் தீமைகளையன்றி, நன்மையான வற்றைத் தன்னிடம் அணுக விடாதவன் அடுத்த பிறவிக்கென்ற வித்தை, இம்மனிதப் பிறவியிலேயே நட்டுக்கொள்ளு கின்றான் என்பதே யாகும். இவை யொரு புறமிருக் கட்டும். இதற்கு முன்னர் ஒரு பிறவி யிருந்திருக்குமே யானால், இதற்குப் பின்னரும் ஒரு பிறவி நமக்கென்று காத்துக் கொண்டிருக்கின்ற தென்பதை நன்குணர வேண்டும். எந்த நற்காரியமாயிருப்பினும் சரியே, அவை யெல்லாம் ஈசனுக்கே போய் அடைய வேண் டியதற்கு முன் நம் மனதை பரிசுத்தப்படுத்திக் கொள்ள வேண்டும்.

சி:- பரிசுத்தமென்று எதை குறிப்பிட்டுச் சொல்கின் றீர்கள்.

கு:- நம் வீடுகளில் நடக்கும் விசேஷ வைபவ காலங்களில் வீட்டை துப்புரவாய் பெருக்கி, மெழுகி, கோலமிட்டு இதர, பசுமை நிறைந்த வஸ்துக்களால் அலங்கரித்து, விளக்கேற்றி வைத்த பின்னரே, குறிப்பிட்ட வைப வத்தைக் கொண்டாடுவது பொதுவாயுள்ள ஹிந்து மதப் பண்பு. இதை நம் அன்றாட நிகழ்ச்சிகளில் ப்ரத்

யக்ஷமாய் காண்கின்றோம். நிற்க, ஒரு நல்ல காரியங்கள் நடைபெற வேண்டுமேயானால் அது எங்கு நடைபெற்றாலும் சரியே, முதலில் அவ்விடத்தின் தூய்மை, செய்து முடிக்கின்றவர்களின் மனப்பண்பு எவ்வளவுக் கெவ்வளவு உயர்வாயிருக்கின்றதோ அதற்கேற்றபடியே காரியத்தின் விசேஷமும் ப்ரகாசிக்கும். அதைப்போலவே நம் ஹ்ருதய கோயிலில் குடிகொண்டுள்ள பரந்தாமனை, வழிபடுவதற்கும், அவனைக்கண்டு தரிசிப்பதற்கும், கல்மஷம் நிறைந்த (அழுக்கடைந்த) எண்ணங்களை நீக்கி, சத்யம், தர்மம், ஒழுக்கமென்ற வஸ்துக்களினால் அலங்கரித்து, பக்தி யென்ற விளக்கேற்றிவைத்து, அதிலிருந்து ப்ரதிபலிக்கும் ஞானமென்ற ஒளியைக்கொண்டு அவனிருப்பிடத்தைத் தேடிப்பிடித்தால், அவனிருப்பிடத்தை அவனே நமக்கு காட்டுகின்றான்.

சி:— பக்தியென்பது பிறரைப் பின்பற்றினால்தான் ஏற்படுமா?

கு:— அன்பனே, எதையும் பிறரைக்கொண்டுதான் ஏற்படுமென்று கொள்வது ஒரு குறிப்பிட்ட அளவிற்குத்தான் முடியும். அதுவும் உலக வியவஹாரங்களை பொருத்தமட்டிலு மென்றுதான் கூறலாம். ஈஸ்வர பக்தி யென்பது பிறரைக்கொண்டுதான் ஏற்படுமென்று கூறுவதற்கில்லை. அப்படியே பிறர் போதனையினால் உண்டாயிற்றென்றாலும் அது அதிக காலம் நீடித்திருக்கவும் முடியாது. அதுமட்டிலுமல்ல. ஒரு

வனுக்கு உண்டாகும் சத்கர்ம இச்சையெல்லாம், அவனுடைய பூர்வ புண்ய விசேஷத்தை யொட்டியதே யல்லாமல் போதனைகளைக்கொண்டல்ல. ஆனால், அவைகளைச் செய்துமுடிக்கவேண்டிய வழி துறைகளை மட்டிலும், அதில் நன்கு தேர்ச்சிபெற்றுள்ள பெரியோர்களைக்கொண்டுதான் தெரிந்துகொள்ளமுடியும்.

சி:- இதற்கு முன் (இரண்டாவது அத்தியாயத்தில்) எனக்கு குருவைப்பற்றி எடுத்துரைத்தபொழுது அவரை சாதாரண மனிதனுக்கு ஒப்பிட்டுக் கருதக்கூடாதென்றதின் கருத்தென்ன?

கு:- அதைத்தான் விளக்கியாய்விட்டதே. அதில் இன்னும் என்ன சந்தேகம் தோன்றிவிட்டது?

சி:- சந்தேக மொன்றுமில்லை; அதன் உள் ரகசியத்தை நன்றாய் தெரிந்துகொள்ளவில்லை.

கு:- ஆத்மஞானமடைந்து தன் அனுபவத்தின் மூலம் ப்ருஹ்ம சாக்ஷாத்கார நிலையெய்தியவர்களையே மஹான்களென்றும், அவர்களையே குருவாயேற்று, பின்பற்றி நடக்கவேண்டுமென்றும் (முன்னேரிடத்தில்) சூஜனையாய்க் குறிப்பிடப்பட்டுள்ளது. அவர்களையன்றி மற்றெவராலும் நம்மைப் பிடித்து ஆட்டிவைக்கும் அக்ஞானமென்ற பேயை விரட்டி யடிக்கமுடியாது. நிற்க, சாதாரண பாமரனுக்கு ஈஸ்வரனே நேரில் தோன்றி தன் ரகசியங்களை விளக்கிக் காட்டுவதில்லை,

மஹான்களுக்கு மட்டிலுமே தன்னிருப்பிடத்தை யெடுத்துக் காட்டுகின்றார். ஆனாலும் பாமரர்களுக்கும் தேவையான உதவிகளைமட்டிலும் செய்துவருகின்றார். அதுவும் எப்படியெனில், ஒரு மனிதனுக்குத் தேவைப் படுகின்றவற்றை அவனையொத்த மற்றொரு மனிதனைக் கொண்டு அடையப்பெறச் செய்வதேயாகும். இதைப் போலவே தன்னையடையவேண்டுமென்று சதாசர்வ காலமும் சிந்தித்துக்கொண்டிருப்பவர்களுக்குத் தன் னிருப்பிடம் காணும், உற்ற மார்க்கத்தை யெடுத் துரைக்க, அவர் மனித உருபெற்ற குருவாய்தோன்றி விளங்குகின்றார். அத்தகைய குருவினால் போதிக்கப் படுவது மற்றெந்த, உலகையொட்டியதான சாதாரண விஷயமுமல்ல. மனிதனை சாயுஜ்ய பதவியை (என்றும் நிலைத்திருக்கக்கூடிய) யடையச் செய்யவும், உண்மை யானந்தமென்று கூறப்படும் நித்ய சுகத்தை கொடுத் தருள்வதற்குரிய பரமேஸ்வரத்தையே எடுத்துரைக் கின்றான் (போதிக்கின்றான்). அப்படிபட்டவனை சாதா ரண மனிதனுக்கு ஒப்பிடுவது அவ்வளவு சிறந்ததல்ல வென்றுதான் கூறமுடியும். தவிர, திடீரென்று தோன்றி க்ஷண நேரத்தில் மறையும் ஒரு வஸ்துவை மற்றவனிடம் பெற்றுக்கொள்ளும்பொழுது, அம் மனிதனுக்கு எவ்வளவு நன்றி, விஸ்வாஸங்கள் தெரி விக்கப்படுகின்றன; அப்படியிருக்க தன் ஆத்மஞான குருவாய்தோன்றி சர்வேசுவரனிருப்பிடத்திற்கு வழி காட்டி, அழைத்துச்செல்பவரிடம் எப்படி நடந்து

கொள்ளவேண்டும், அல்லது அவரை பாவிக்கவேண்டும், என்பதை அதிகம் விளக்கிக் கூறத்தேவையில்லை.

சி:- ஒருவரையொருவர் வணங்கிக்கொள்வது அவசியம் தானு, அதன் உண்மைக் கருத்தென்ன?

கு:- அவசியமென்றுதான் சொல்லவேண்டும், ஆனல் அதன் கருத்தைச் சரிவரத் தெரிந்துகொண்டு செய்வது தான் சிறந்த வழியாகும்.

சி:- தாங்கள் கூறுவதின் உண்மையென்ன?

கு:- உலகில் தோன்றியுள்ள இந்த வணக்கமுறையில் எவ்வளவோ மாறுபட்ட கொள்கைகளும் லக்ஷியங்களும் பலதரப்பட்டவைகளாகக் காணப்படுகின்றன. சுருங்கக்கூறின், அதன் உண்மை லக்ஷியத்தைக் காற்றில் பறக்கவிட்டு,மிகச்சிலேடையாகவும் பரிஹஸிக்கத்தக்க வழியிலும், கேலிக்கூத்தாகவுமே, இன்றைய வணக்க முறைகள் காக்ஷியளிக்கின்றன வென்பதை நன்குணர வேண்டும். உதாரணமாய் ஒருவன் வணக்கமென்பதும் மற்றவன் கண்டு ஹாஸ்யப்படுவதும் அல்லது பரிஹஸிப்பதும், ஒருவன் நமஸ்தே யென்பதும், மற்ற வந்தனமென்பதுமாய் வாயளவில் நின்றுகொண்டிருக்கின்றன. இது ஒருபுறமிருக்கட்டும். ஒரு அதிகாரியிடம் வேலைபார்க்கும் சிப்பந்தி, தன் வாழ்வைக்கடத்த ஊதியம்பெருவதை லக்ஷியமாய்க்கொண்டு தன் வணக்கத்தைச் செலுத்துகின்ருன். இது அதிகாரியை

திருப்திப்படுத்தவேண்டுமேயென்ற பயத்துடன் கூடிய மரியாதை. இணைபிரியா நண்பனென்று வாயளவில் சொல்லிக்கொண்டு சஞ்சரிப்பவர்கள் ஒருவரையொருவர் பிரிந்து திரும்பச் சந்திக்கும்பொழுது இன்றைய நவீன முறைப்படி வணக்கம் செலுத்திக்கொள்வதுமுண்டு. சிலர் தெய்வீக உருவத்தோற்றங்களை கண்டவுடன், இரு கைகளை மட்டிலும் கூப்பித்தொழுவதும், சிலர் சிரசின்மேல் கை கூப்பித் தொழுவதும், சிலர் தங்கள் சரீரம் பூறுவுமே ஈஸ்வர ஸன்னிதியில், பூமியில் பதியும் வண்ணமும் நமஸ்கரிப்பது முண்டு. கடைசியில் கூறிய இம்மூன்று முறைகள் தான் தொன்று தொட்டு ஆதிகாலம் முதல் அனுஷ்டானத்தில் (பழக்கத்தில்) இருந்து வருகின்றனவாகும். நிற்க, இதில் யார் எந்த எண்ணத்தைக் கொண்டு தங்கள் வணக்க முறைகளைக் கையாண்டாலும் அதனுட் கருத்தொன்று தான் சிந்தித்தறிய வேண்டியது. தன் ஹ்ருதயத்தில் (மார்பில்) இரு கைகளையும் கூப்பி வணங்குவதானது, எங்கும் அகண்ட காரயாய் வியாபித்திருக்கும் பரம்பொருள் தன் ஹ்ருதய கமலத்திலும் வீற்றிருக்கின்றானென்பதையும், தன்னிடம் ஆத்ம ஸ்வரூபனாய் விளங்குபவன் இஜ் ஜெகத்தில் சகலரின் உள்ளத்திலும் ஆத்ம ஸ்வரூபமாய் விளங்குகின்றானென்பதையும் எடுத்துக் காட்டும் சமிக்ஞையே (அடையாளமே யாகும்). சிரஸில் கைகூப்பித் தொழுவதின் ரஹஸியத்தை இதற்கு முன்னர் (மூன்

ரும் அத்தியாயத்தில்) சஹஸ்ர்ரார கமலத்தில் விளக்கப்பட்டுள்ளது. சரீரம் பூருவும் பூமியில் பதியும் வண்ணம் (சர்வாங்க வந்தனம் அல்லது நமஸ்காரம்) வணங்குவதின் கருத்து, தன்னிடமுள்ள, ஆணவம், மாயை, கர்மமென்ற மும்மலங்களையும் நீக்க பெற்றவனாய் எந்த ஒரே பரம்பொருளான சர்வேஸ்வரனுல் சரீரத்தைக் கொண்ட மனித ஜென்மம் கொடுக்கப்பட்டதோ அப்பரங் பொருளுக்கே இதை யற்ப்பணிக்கின்றேன் என்பதையும், என்றும் ஈசனின் பாத சரணத்தைத் தவிர தனக்கு வேறு கதியில்லை யென்பதையும், இவ்வுடலைவிட்டு ஜீவன் பிரிந்தால், இச்சரீரம் மண்ணில்தான் மறைகின்ற தென்பதையு மெடுத்துக் காட்டும் அடையாளக் குறியே யாகும். பொதுவாயும் வெளிப்படையாகவும் இவ்வணக்கத்தின் சிறப்பு, தன்னடக்கத்தின் தன்மையையும், உண்மைப் பண்பையும் எடுத்துக் காட்டுவதென்றும் நிச்சயமாய்க் கூற முடியும். இதே முறைகளைப் பின்பற்றித்தான் (ஈசனிடம் செலுத்தும் அன்பும் பக்தியும் நிறைந்த அடிபணிதல்). தன்னை சீடனாய் ஏற்றுக்கொள்ளக் குருவினிடமும் செலுத்த வேண்டியதே உய்யவழியாகும்.

சி:- ஸ்வாமி, குரு எதைச் சொன்னாலும் அதை யப்படியே பின் பற்றிச் செய்யத்தான் வேண்டுமோ?

கு:- மெய்ஞானியா யுள்ள ஒரு குருவானவர் தன் சீடனிடம் சத் விஷயங்களையன்றி, சம்பந்தமற்ற வேறு

எந்த விஷயங்களையும் எடுத்துரைக்க மாட்டார்கள் அல்லது அம்மாதிரியான காரியங்களுக்குக் கட்டளை யிட மாட்டார்கள். அவர்களால் போதிக்கப்படும் எந்த விஷயமாயினும் சரியே, தன்னை யண்டி வந்தவர்கள் (சீடர்கள்) நன்ருய் தெளிவடைந்து, தன்னை ஒரு முகப்படுத்திக் கொள்ளும் வகையில்தானிருக்குமென்பதில் சந்தேகமில்லை. அப்படியே சீடனின் நோக்கத்திற்கு சம்பந்தமற்ற முறையில், அவனைப் பரீக்ஷிப்பதின் பொருட்டுக்கூட, தீய விஷயங்களைப் போதித்தாலும், அதையே செயல்படுவதற்கு ஆக்ஞையிட்டாலும் அதைச் சீடன் பின்பற்றவேண்டுமென்று எந்த நீதி நூல்களும் கூருது, அப்படிச் செய்யவும் கூடாது. இதன் பலனைப்பற்றிச் சிந்திக்கும்பொழுது ஒன்றிலிருந்து பலவித தீமைகள் தோன்றிவிடுகின்றன வென்பது நன்கு புலப்படும். எப்படியெனில், தூய்மையான உள்ளத்தில் அழுக்கு நிறைந்த எண்ணங்களைப் புகுத்திவிடுவது (ஒன்று) தன்னை நம்பி வந்தவனை ஏமாற்றி அல்லலுக்குட்படுத்துவது (இரண்டு) கடைசியில் தானும் பெற்ற ஞானத்தை யிழந்து அல்லல்பட்டு அழிய நேரிடுகின்றது (மூன்று) ஆகவே குருவும் சரியே, சீடனும் சரியே நீதிக்குப் நேர்மைக்குமுள்ள உண்மை லக்ஷியத்தையே தங்கள் தங்களின் ஒரே நோக்கமாய்க் கொள்ளவேண்டுமென்பதை நிச்சயம் மனதில் வைத்துக்கொள்ளவேண்டும். இதற்கு முந்திய அத்தியாயத்தில், விட்டுவைத்த

மார்க்கங்களைப் பற்றியும், அதை அனுசரித்துச் செய்ய வேண்டிய முறையைப் பற்றியும், கவனிப்போம்.

சி:– இதற்குமுன் கூறிய மூன்று மார்க்கங்களிலும், பக்தி மார்க்கத்தில் மட்டிலும் எடுத்துரைத்தீர்கள், மற்றய வைகளை கூறவில்லையே.

கு:– அவ்விதிமுறைகளைச் சற்றுச் சுருக்கமாய்க் கூறுகின்றேன். நன்ருய் மனதில் பதிய வைத்துக்கொள்ளவும். பக்தி செய்வது என்பது ஈசனைக் குறித்துத் துதி பாடுவதும், தன் குருவினுல் உபதேசிக்கப்பட்ட மந்திரங்களை ஜபித்தல், அவனையே பூஜித்தல், அவன் நாம சங்கீர்த்தனங்களை மட்டிலும் (வாயினுல்) பாடுவது போன்றவைகளாகும். இதனையே மனதில் இருக்கச் செய்வதை ஜபித்தல் என்றும், ஸ்மரணம் என்றும் கூறலாம். நாம சங்கீர்த்தனங்களுக்கு ஏற்ற மந்திரம் பின்வருமாறு:—

(1) ஹரே ராமா என்றும், ஹரே கிருஷ்ணு என்றும், "ஓம்" நம: சிவாய என்றும் அந்தரங்க சுத்தியுடன் (தூய்மையான மனதுடன்) மனதில் சதா நினைத்துக் கொண்டிருப்பது. (2) அவருடைய நாம பிரபாவங்களை நாத, ஸ்வரத்துடன் மனம் கசிந்து உருகி தன்னை மறந்து தன் வாயினுல் புகழ்ந்து பாடுவதாகும். இதுவே பஜனம் என்று சொல்லப்படும். (3) அவனுடைய சரித்திர பிரபாவத்தை எடுத்துக் கூறுவதை

ஸ்ரவணம் செய்தலுமாகும். (பிறர் சொல்வதை தன் காதுகளினால் கேட்டு மகிழ்வது). இவைகளைத் தவிர அவனுடைய பீஜாக்ஷர மந்திரங்களைமட்டிலும், மனதில் ஜெபம் செய்வதுமாகும்.

சி:- ஸ்வாமி, பீஜாக்ஷரம் என்றால் எதைக் குறித்துச் சொல்லப்படுவது?

கு:- பீஜமென்பதின் பொருள் விதையென்பதேயாகும். ஒரு ஜீவன் உற்பத்திக்குக் காரணமாயுள்ள வஸ்து பிந்து என்ற விதையாகும். ஒரு மரம் அல்லது செடி கொடி முதலியவற்றிற்கு உற்பத்திக்காரணமாக உள்ளது அதன் விதைகளேயாகும். ஈஸ்வரனுக்கு ஜீவ நாடி போன்றது பீஜாக்ஷரங்களாகும். க்ஷர மென்பது சலனத்தோடு கூடிய அழியும் தன்மையைக் குறிக்கின்றது. அக்ஷரம் என்பதின் பொருள் என்றும் எப்பொழுதும் அழியாத ஒன்றைக்குறிக்கின்றது. அப்படியுள்ள வஸ்து ஈஸ்வரன் ஒருவனேயல்லவா. அதுவும் தவிர, அகாரம் முதல் க்ஷ காரம் வரை பரியந்தம் உள்ள சகல எழுத்துக்களுமே ஈஸ்வரனுடைய பீஜவடிவமாகும். இந்த எழுத்துக்களை ஒன்றையொன்று பிணைக்கும்பொழுது ஏற்படுவது நாமமாகும் (பெயராகும்). ஆகவே, இந்த எழுத்துக்களை மட்டிலும் அவைகளை பிணைத்துக்கொடுக்கும் வகையில், தன் மனதில் ஜபித்து த்யானித்தலே, ஜெபித்தலென்றும் கூறலாம்.

சி:- ஸ்வாமி, பக்தியினுலன்றி வேறெந்தக் காரியங்களைக் கொண்டும் ஈஸனை அடைய முடியாதா?

கு:- முடியும்; ஆனுல் மற்ற விஷயங்களைக்காட்டிலும் பக்தி செய்வதுதான் சாத்தியப்படக்கூடியதென்றும், அதிக விஷயம் உள்ளதென்றும் கூறப்பட்டுள்ளது. நிற்க, ஈஸ்வரன், மனிதனின் அளவற்ற பக்திக்குக் கட்டுப் பட்டுப்பட்டவனேயன்றி, தான் என்ற மமதை கொண்டு செய்யும் மற்றெந்தக் காரியங்களுக்கும் கட்டுப்பட்டவனல்ல. மேலும், மனிதனுல் செய்யக் கூடிய எளிய முறையும் பக்தி ஒன்றுதான். சாதா ரணமாக தனக்கு முடியாத ஒரு காரியத்தில் பிரவே சித்து அதை முழுக்க சாதிக்கவொட்டாமல் பின் னடைந்துவிட்டால் அக்காரியம் நிறைவேருமல் போவ துடன் தன் மனதையும் எவ்வளவு அல்லல்படுத்திக் கொள்ளவேண்டியிருக்கிறது. அதைப்போல் பக்தியி லிட்ட மற்ற மார்க்கமெல்லாம். நிற்க, அவனைக் குறித்த வேறு எந்தக் காரியங்களைச் செய்தாலும் அல்லது செய்யவேண்டுமென்று விரும்பினுலும் அதற்குப் பக்தி யில்லாவிட்டால் எதுவும் நிறைவேருது.

சி:- ஈஸ்வரனைக் குறித்து புகழ் பாடுவதின் கருத்தென் னவோ?

கு:- அன்பனே, அதில் இரண்டுவித பிரயோஜனத்தை யடையமுடியு மென்பதே யாகும். எப்பொழுதும்

உலக வியவஹாரங்களைப்பற்றிய விஷயங்களைப் பேசிக் கொண்டிருக்கும் வாயினுல் சுத்தம், அசுத்தம் இவ் விரண்டும் கலந்துவந்துகொண்டே யிருக்கும். அப் படிப் பேசிக்கொண்டிருக்கும் நாவிற்கு பாபதோஷம் ஏற்படுவதிலிருந்து தடுத்துக்கொள்வதற்காகவே நாமா வைச் சொல்லவேண்டுமென்பதையும், ஈஸ்வர நாமா வைத்தவிர இஜ் ஜென்மத்தில் வேறெதைக்கொண்டும் நாம் பாபகர்மாவிற்குப் பரிஹாரம் காணமுடியா தென்பதையும் அவ்வப்பொழுது வலியுறுத்திக்கொள் வதற்கென்றும், வைத்துக்கொள்ளலாம். அடுத்த படியாக வாயினுல் சொல்லும் நாமாவிற்கு த்வனியைக் கொடுக்கும் நாத ப்ருஹ்மத்துடன் மனமானது லயப் படும் (ஒன்ருக அத்துடன் பிணைத்துக்கொள்ளும்). வேருென்றையும் சிந்தனையில் வைக்காமல் தன் உள் ளத்திலிருந்துவரும் நாமத்துடன் ஒன்றுபடும்பொழுது தன் நிலையையும், இவ்வுலகத்தையும் மறந்து, தன் உருவத்தை ஈஸ்வரனுய்ப்பாவித்து (தன் மனதில்) கற் பித்து பாடுகின்ருனே அதே யுருவம் தன் உள்ளும் புறமும் பார்க்குமிடங்களிலும் அப்படித் தோன்றும். அதையே தன் மனம் ஸ்திரமாய்ப் பற்றி நிற்கும் பக்ஷத்தில் தன் முன்னுல் தோன்றிய உருவத் தோற் றங்கள் மறைந்து உள்ளத்தே ப்ரகாசிக்கும் ஆத்ம ஜோதியுடன் கலந்துவிடும். இப்படி பக்தி பரவசப் பட்டுச் செய்யும் நாம சங்கீர்த்தனமே உண்மை பஜன மென்றுக் கூறத்தகும். இதற்கடுத்தபடியாக வுள்ள

கர்மயோகத்தைப் பற்றிச் சிந்திக்கு மளவில் உலகில் செய்யப்படும் சகல காரியங்களையும் கர்மாக்க ளென்றே கூறலாம். அதில் பரந்தாமனைக் குறித்துச் செய்யப்படும் எந்த காரியமும் யஜ்ஞம், அல்லது யாக மென்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. மனிதனுக்கென்று அவனால் செய்து முடிக்க வேண்டிய ஐந்து கடன் களும் அவன் ஜெனன மெடுக்கும்பொழுதே தலையில் சுமத்தப்பட்டுள்ள அவைகளாவன: (1) தாய் தந்தைய ரைப் பேணிப் போஷித்துப் பின்னர் அந்திம கிரியை களைச் செய்து முடித்தல். (2) தான் உபதேசம் பெற ஏற்றுக்கொண்ட ஆச்சாரியனைப் போஷித்தல். (3) அதிதிகளை உபசரித்தல் (விருந்தோம்பல்). (4) ஈஸ்வர உபாசனை. இவைகள் மனிதனுடைய தவிர்க்க முடியாத கடமைகளாகும். நிற்க, ஈஸ்வர யஜ்ஞத்தில் இரண்டு வகை யுண்டு. ஒன்று அந்தர் யாக மெனப்படும்; தன் சரீரத்தைக் கொண்டும், மனதைக் கொண்டும், ஜீவ னைக் கொண்டும், தன்னகத்தே வியாபித்துள்ள ஆத்ம ஜ்யோதியைப் பற்றி முதலில் சிந்தித்துப் பின்னர், இந்திரிய சேஷ்டைகளை யடக்கி மனதையும், ஜீவனையும் அஜ்ஜோதியுடன் கலக்கச் செய்வதே யாகும். இது தான் யோக சாதனமென்று கூறப்படுவது. மற் றொன்று, யோக மார்க்கத்தைக் கடைப் பிடிக்க முடி யாதவர்கள் அல்லது அதில் தேர்ச்சி பெற்றவர்களா யிருந்தாலும் சரியே, வெளியங்கமாய், தன் மனம் விரும்பிய வகையில் பரந்தாமனின் உருவங்களை வைத்து

அதற்கென்ற விதி முறைகளுடன் பூஜித்தல் (ஆராதித்தல்) பஹிர்யாக மெனப்படும். பக்தி மார்க்கத்தைப் போல் அவ்வளவு எளிதில் இதைக் கடைப் பிடித்துச் செய்ய முடியுமென்று கூறுவதற்கில்லை. ஏனென்றால், ஒரு ப்ருஹ்ம ஸ்வரூபத்தை இருவகைத் தோற்றங்களாகக் கொண்டு (அதாவது ஸ்திரீயாகவும் புமானாகவும் பாவித்து) அநேக உருவ அமைப்புக்கள் உண்டாக்கப்பட்டிருக்கின்றன. அவ்வுருவங்களை பூஜித்தலே, விக்ரஹ ஆராதனை யென்பதாகும். அதில் பகவான் தன்னை யொத்த ஆண் பிறவித் தோற்றத்தைக் கொண்டவனே என்ற மனோபாவத்துடன் பூஜிப்பவர்களுக்கு, அது சுலபமாய் முடியுமென்றே சொல்லலாம். அப்படிக் கில்லாமல், ஸ்திரீ ரூபத்தை பூஜிக்க வேண்டுமேயானால், அதற்கு திடத்தன்மையும், வைராக்யமும் அதிகம் தேவைப்படும். இவ்விரண்டுமற்றவர்கள் ஸ்திரீ உருவ வழிப்பாட்டினால் அடையும் பலனை அதிகம் கூறத் தேவையில்லை. இதன் முடிவு எப்படியாகுமெனில், பிறர் மனைவியைத் தீண்டுகின்றவனுக்கும் அல்லது மனதில் நினைத்துக் கொண்டிருப்பவனுக்கும் உண்மையில் எந்த மறியாதைகள் உலகத்தாரால் அளிக்கப்படுமோ, தன் உடன் பிறந்த சோதரியை தாரமாய் கருதுகின்றவனுக்கும் எந்த கதி கிடைக்குமோ அதைவிட ஆயிர மடங்கு கஷ்டங்களை பல ஜென்மங்களுக்குத் தொடர்ந்து அனுபவிக்கநேரிடும். நிற்க, எவன், உலகில் பிறந்துள்ள மற்ற ஸ்திரீ ஜாதி

களைத் தன் சோதரியைப்போலவும், தாயைப்போலவும் பாவிக்கின்றானோ அவனே அப்பூஜை செய்யத்தகுதியுடையவன். நல்ல பக்குவமடைந்த ஞானிகள் தங்கள் தாரத்தைக்கூடத் தாயாக பாவித்துக்கொள்ளுவது முண்டு. இது ஒருபுறமிருக்கட்டும். ஈஸ்வரனிடம் தாயின் ஸ்வபாவத்தைக் கற்பித்து அவனைப் பூஜித்தலே சாலச்சிறந்ததென்று சொல்லலாம். உலகில் பெற்ற தாயைக்காட்டிலும் தன்னிடம், பரிவு காட்டக்கூடியவர்கள் மற்றெவருமில்லையென்று நிச்சயமாய்க் கூற முடியும். அதைப்போலவே தாயின் உருவத்தைப் பெற்றுள்ள ஜெகதம்பிகையானவள் அவளுடைய சேயென்று சொல்லப்படும் பக்தன் (உபாஸகன்) தனது ஆன்மீகப் பசிக்கேற்ற ஆகாரத்தைவேண்டிப்ரார்த்திக்கும்பொழுது ஞானமென்னும் அமுதையளித்து களைப்பாற்றுகின்றாள்.

சி:– ஸ்வாமி, பூஜை செய்வதும், வகுத்து வகுத்துள்ள சட்டதிட்டங்களைக்கொண்டுதான் நடத்தப்பட வேண்டுமா?

கு:– இதில் எது வேண்டும் அல்லது வேண்டாமென்று சொல்வதற்கே யிடமில்லை. மனிதன் எது ஒன்றைச் செய்ய விரும்பினாலும், அதற்கென்றுள்ள பலனைப் பற்றி முன் கூட்டியே திட்டமிட்டுக்கொண்டுதான் காரியத்தில் இறங்குவது பொதுவாயுள்ளமுறை. யாரும், எதையும் விரும்பாமல் செய்வதாய்க் கூறிக் கொண்டாலும், அவையெல்லாம் வெளிப்படையாகத்

தானிருக்குமே யன்றி உள் நோக்கத்தைப் பிறர் அறிய முடியாது. அப்படியே யிருந்தாலும் லக்ஷத்தில் ஒருவர், அல்லது இருவர்தான் பலனே யெதிர் நோக்காதவர்களாயிருக்க முடியும். ஒரு காரியமென்றிருந்தால் அதற்கேற்ற பலனும், ஒன்று நிச்சியமாயுண்டென்பது தெளிவு. தர்ம சாஸ்திர ஆராய்ச்சியாளர்களும் கர்மத்திற் கேற்ற பலனுண்டென்பதை அவரவர்கள்படித் தறிந்த நூல்களை ப்ரமாணமாய்க்கொண்டு எடுத்துரைக்கின்றார்கள். நடைமுறையும் அப்படித் தானிருக்கின்றது. இதை யொட்டியது தான் ஈஸனே வழிபடும் தன்மையும். மனிதனுக்குத் தேவைப் படும் ஒவ்வொன்றையும் ஈஸனிடம் யாசித்துப் பெற வேண்டு மென்பதையே (சங்கல்பித்துக் கொண்டு) மனதில் நினைத்து வழிபடத் தொடங்குகின்றான். இப்படி வேண்டியவற்றைக் கொடுத்துதவுவதற் கென்றே தன்னிடம் பல்வேறு இலாக்காக்களை வைத்துக் கொண்டுள்ளான். எப்படியெனில், ஒரு ராஜ்யத்தில், மக்களுக்குத் தேவைப்படுகின்ற ஒவ்வொன்றையும் கிடைக்கும் பொருட்டு, பல்வேறு ஸ்தாபனங்கள் வேலை செய்து தேவைகளைப் பூர்த்தி செய்வதைப்போல, மனிதனல் கொடுக்க முடியாத, அநேக தேவைப்படுகின்ற பல முக்கியமான விஷயங்களைத் தன் கீழ் வேலை பார்க்கும் சிப்பந்திகளுக்கு முறையாகப் பகிர்ந்தளித்து, உலக வாழ் மக்கள் எதை விரும்பிக் கேட்கின்றார்களோ அதற்கென்றுள்ள இலாகாவின் அதிகாரிக்கு உத்தர விடுகின்றார்.

சி:- இது எப்படி?

கு:- மனிதனுக்குத் தவிற்க முடியாத தேவைகளில் அதி முக்கியமானது: தண்ணீர், உஷ்ணம், வெளிச்சம், குளிர்ச்சி, காற்று. தண்ணீரைக் கொடுத்துதவ மழையும் அதற்கு அதிகாரியான வருண பகவான், உஷ்ணத்தைக் கொடுக்க நெருப்பும் அதற்கு அதிகாரியான அக்னி பகவான், வெளிச்சத்திற்குச் சூரியனும், குளிர்ச்சிக்குச் சந்திரனும், காற்றிற்கு வாயுவுமாகவும்; மேலும், தன, தான்யத்திற்கு லக்ஷ்மியும், கல்விக்குச் சரஸ்வதியும் போன்ற ஸ்தீரி கபால சக்திகளையும் நிர்ணயித்திருக்கின்றான். இதுமட்டினு மல்ல. ஒரு ராஜ்ய அதிகாரி(ஜனதிபதி)அவசர காலத்திற்கென்றும், குற்றவாளிக்கு ப்ரத்யேக கருணை காட்டுவதற்கென்றும் விசேஷ அதிகாரத்தைத் தன் வசமே வைத்துக் கொண்டிருப்பதைப் போல (இவ்வதிகாரம் ப்ரதான நீதிஸ்தலமாய் விளங்கும் சூப்ரீம் கோர்ட்டில் அளிக்கப்படும் தீர்ப்புக்கும் அப்பாற்பட்ட தென்பதை குறித்தது) மற்ற எந்த அதிகாரிகளிடமும் மனுச் செய்து எவ்வித பலனும் விரும்பாமல் தன்னிடமே நேரில் மனுச் செய்துகொண்டு ப்ரார்த்திக்கின்றவர்களுக்குத் தேவையானவற்றைக் கொடுத்தருள்வதுடன்; இவன் ப்ரார்த்தனைக் கேற்றபடி (உபாசகனுக்கு) ஜனன, மரணமென்ற தண்டனையைத் தள்ளுபடி செய்யவும், சாயுஜ்ய பதவி யல்லது மோக்ஷ சாதனமென்ற தீர்ப்பை யளிக்கவும் உண்டான விசேஷாதிகாரத்தை,

தன்னிடம் வைத்துக்கொண்டுள்ளார். ஆகவே இதில் கூறப்பட்டுள்ள ஏதேனும் ஒன்றில் இச்சை கொள்ளா மல் பூஜிப்பதில்லை யென்று தான் பொதுவாய்க் கூற வேண்டி யிருக்கின்றது. குறிப்பிட்டுத் தனித் தனி யாக விளங்கும் சக்திகளைப் பூஜித்தல் அவசியமே என்றாலும், சர்வேஸ்வரனின் கட்டளையின்றி, இவர் கள் எதையும் கொடுத்தருள மாட்டார்கள் என்பதை யுணர வேண்டும். இப்படிக் கூறப்படும் சகலவற்றிற் கும் எஜமான ஸ்தானம் பெற்றிருக்கும் சர்வேஸ் வரன், ஒருவனை மட்டிலும் பூஜித்தாலும் போது மென்றே சொல்லலாம். அப்படிச் செய்யாவிட்டால் விரும்பும் எதுவும் கிடைக்காமல் போய்விடும்.

சி:- ஒன்றையும் தனக்கென்று விரும்பாமல் இருப்பவர்கள் எதுவும் செய்யத் தேவையில்லை யல்லவா?

கு:- நீ கூறுவதும் உண்மை தான். ஆனால் ஒருவனும் அப் படி யிருக்க முடியாது? அப்படியே தனக்கு எதுவும் தேவையில்லை யென்று கூறினாலும், ஞானம் பெற வேண்டுமென்றோ, ஈசனைத் தரிசிக்க வேண்டுமென்றோ, அல்லது மோக்ஷ நிலையடைய வேண்டு மென்றோ நினைக்காமலிருக்க முடியுமென்று சொல்வதற்கில்லை. அப்படி நினைத்துக் கொண்டிருப்பது ஒரு பலனை யெதிர் நோக்கி யிருப்பதே யாகும். அதை யடைவ தற் கென்றாவது ஈசனை வழிபட்டே யாகவேண்டும். இதைச் சுருங்கக் கூறுமிடத்து ஈசனைக் குறித்த எந்

தக் காரியமாயினும் அதற்கென்ற பலனைப் பற்றித் திட்ட மிடாதிருத்தல் தான் சாலச் சிறந்தது. ஜென்மம் எடுத்துள்ள ஒவ்வொருவனும் சத்கர்மாக்களைச் செய் வதற்கு அதிகாரியே தவிர அதன் பலனை நிர்ணயிக்க அதிகாரியல்லவென்பதை யுணர்தலவசியம்.

சி:- இனி உருவங்களை வைத்துப்பூஜிக்கும் முறைகளைச் சொல்லுங்கள்.

கு:- முதலில் தன் முன்னால் உள்ள உருவத்தை (விக்ர ஹத்தை) தான் எந்த வகையில் வரிக்க விருப்ப முள்ளதோ, எப்படியெனில் ராமர், கிருஷ்ணர், பரம சிவன், முருகன், விநாயகன் (கணபதி), பராசக்தி போன்ற அவையவைக்குண்டான அமைப்பைக் கொண்டு, ப்ரதிஷ்டைசெய்து (ஸ்தாபித்து) அதற் கென்று இயற்றப்பட்ட மந்திரசாஸ்திர முறைகளின் படி செய்யவேண்டியதே சரியான முறையாகும். ஈஸனை உபசரிக்கும் வகைகளை ஆரம்பம் முதல் கடைசி வரையில் (பூஜைமுடிந்து யதாஸ்தானம் செல்வது) (இருப்பிடத்திற்கே திருப்பியனுப்புவது வரையில்) அவைகளாவன :—(1) ஆவாஹனம் (2) ஸ்தாபனம் (3) சந்நிதானம் (4) சன்னிரோதனம் (5) அவ குண்டனம் (6) பாத்யம் (7) அர்க்யம் (8) ஸ்நானம் (9) ஆசமனியம் (10) வஸ்த்ரம், கந்த, புஷ்ப, ஆபரண அலங்காரம் (11) அர்ச்சனம் (12) தூப, தீப, நைவேத்யம் (13) ஆரார்திகம் (14) புஷ்பாஞ்சலி

பூஜா உத்வாஸனம். இப்படிக் குறிப்பிட்டுள்ள ஒவ்வொன்றிற்கும் அதற்கான வஸ்துக்களுடன் மந்திர பூர்வமான கிரியைகள் சொல்லப்பட்டிருக்கின்றன. இதை யனுசரித்துச்செய்வது வெளியங்கமாய் பூஜிப்பதில் உள்ள உண்மை தத்வத்தை யறியமுடியும்.

சி:- இவைகளைச் செய்வதற்கு பொருள் வசதியிருந்தால் தானே முடியும்?

கு:- நீ கூறுவதும் உண்மைதான். உலகில் சகலரும் ஒரே மாதிரியாக பொருள் வசதி பெற்றிருக்கவில்லை. அவர்களை யுத்தேசித்துத்தான் மிகவும் எளிதான பக்தி மார்க்கம் எடுத்துரைக்கப்பட்டுள்ளது. நிற்க, பரந்தாமன் இதைத்தான் செய்யென்றோ அல்லது செய்யாதேயென்றோ, நம்மை யெதுவும் கேட்கவில்லை. நம்முடைய மனத் திருப்திக்காகவும், அவனை நம்பால் இறங்கச் செய்வதற்காகவும் செயல்புகும் அந்தரங்க பூஜைக்கு பொருள் வசதிகளைப்பற்றிச் சிந்திக்கவேண்டியதவசியமேயில்லை. யாதொரு வசதியுமற்றவர்கள் உள்ளன்பு பக்தி யென்ற இவ்விரண்டு வஸ்துக்களைக் கொண்டு பூஜித்தாலே போதுமெனலாம். இப்படிப் பூஜிப்பதின் பரம ரஹஸிய தத்வம் யாதெனில், தனக்கும் கடவுளுக்குமுள்ள அபேத பாவத்தை (வேற்றுமை நீங்கிய தன்மையை) எடுத்துக்காட்டுவதற்கும், தீய சக்திகளிடமிருந்து தன் மனதை விடுவித்து ஈஸ்வரனுடன் ஒன்றாய் பிணைக்கச் செய்வதென்பதே

யாகும். அடுத்தபடியாக யுள்ள மந்திர ஜெபத்தை யெடுத்துக்கொள்வோம். இதைப் பற்றிச் சிந்திக்கு மளவில் அக்ஷர வடிவமாயுள்ள (எழுத்துக்களை) ஒன்றை யொன்று பிணைத்துத் தன் மனதினால் ஸ்மரிப்பதே யாகும் அல்லது மனதில் தரிக்கச் செய்வதே யாகும். இதை யனுஷ்டிப்பதில் மூன்று வகையுண்டு. (1) பிறர் காதில் படும்படியாக உரக்கச் சொல்லுவது (2) தன் காதிற்கு மட்டிலும் கேட்கும்படியாய் மெதுவாக (குறைந்த த்வனியுடன்) சொல்லிக்கொள்வது (3) தன் வாய் திறவாமல் மனதிலேயே ஸ்மரிப்பது. இதைத் தான் உண்மையில் ஜெபித்தல் என்றும் கூறலாம்: எடுத்துக்கொள்ளும் மந்திர ஜெபங்கள் எதுவாயிருப்பினும் சரியே. அவைகளை குறைந்த பக்ஷமாக 32 முதல் — (64), 108—1000 வரையில் சக்திக்கேற்ற வரையில் ஜெபித்தல் அவசியம்.

சி:- இப்படி ஜெபங்கள் செய்வதற்கு எத்தனைவித மந்திரங்கள் இருக்கின்றன?

கு:- அவைகளை கணக்கிட்டுச் சிந்தித்துக்கொண்டிருப்பதை விட, நமக்குத் தேவையான சிலவற்றை மட்டிலும் எடுத்துக்கொண்டு அதிலும் ஒன்றிரண்டையே, அனுஷ்டானத்தில் கொண்டு வருவது தான் நல்லது. உலகில், கணக்கில் நிர்ணயிக்கப் பட்டிருப்பதாய்ச் சொல்லப்படும் மந்திரங்கள் ஸப்தகோடியாம் (ஏழு கோடி). இவைகள் எல்லாம் அந்தனையும் மனிதனின்

மனமென்ற ஒரு சித்தத்தைப் பரிசுத்தப்படுத்திக் கொள்வதற்கே தோன்றியவை யென்ருலும் சகல மந்திரங்களையும் ஒரு மனிதன் ஒரே காலத்தில் மனதில் புகுத்திக் கொள்வது முடியாத காரியம். அதைக் கொண்டு மனதில் குழப்பத்தை யுண்டு பண்ணிக் கொள்வதற்குத் தான் முடியுமே யன்றி உண்மை தெரிந்துகொள்வது முடியாதென்றே கூறலாம்.

சி:- முக்கியமான ஒரு சிலவற்றை யேனும் தெரிந்து கொள்ள வேண்டாமா?

கு:- ஆம், முக்கியமானவற்றை மட்டிலும் மனதில் பதிய வைத்துக் கொள்வோம். அவைகள் முறையே பின் வருமாறு:—(1) ஓம். ராம் ராமாய நம: (ராமனை குறித்த தாரக மந்திரமாகும்) (2) ஓம் நமசிவாய (பரமசிவனை குறித்த பஞ்சாக்ஷரம்) (3) ஓம் சரவண பவா (முருகன் அல்லது சுப்ரமண்ய) ஷடாக்ஷர மந்திரம். இதற்கடுத்தபடியாக வுள்ளது மிகவும் ரகஸியமானதும் சூக்ஷ்ம தத்வங்களைக் கொண்டது மாகும். சக்தியம்சமாயுள்ள ஜெகதம்பிகையின் ஜபங்கள் (1) ஐம், க்லீம், ஸௌ: ஸௌ: க்லீம், ஐம்: (பாலாபரமேஸ்வரீ). (2) ஓம் ஸ்ரீம். ஹ்ரீம், க்லீம் (மஹாலக்ஷ்மி) (3) ஓம். ஐம். ஸ்ரீம் ஹ்ரீம் (புவனேஸ்வரி). இதையும் தவிர, பதினைந்து அக்ஷரங்களைக் கொண்ட, பஞ்சதஸாக்ஷரி யெனப்படுவதும் (மஹா திரிபுர ஸுந்தரி) ஷோடஸி என்று சொல்லப்படும்

பதினொரு அக்ஷரங்களைக் கொண்ட (ராஜ ராஜேஸ்வரி). பொதுவாய் இம்மந்திரங்களை உச்சரிக்கும் முறைகளையும் மனதில் ஜெபிக்கும் வழிகளையும், நன்கு தேர்ச்சி பெற்றுள்ளவர்களைக் குருவாய்க் கொண்டு அவர்களிடமிருந்து தெரிந்துகொள்வதே முறை. இவைகள் எல்லாவற்றைக் காட்டிலும் ராஜ மார்க்கமென்று கூறப்படும் (நிர்பயமாய்) பின் பற்றிச் செல்லும் வழியான, பகவந் நாம சங்கீர்த்தனமும், நாம பாராயணமுமே மிக்க சிரேஷ்டமானது.

சீ:– குருதேவா, பகவானுக்கு நைவேத்தியம் என்று சொல்லி மற்ற ஜீவஜந்துக்களைக் கொலைசெய்து அதை ஈஸ்வரனுக்கு அர்ப்பணம் செய்வதுதான் நைவேத்யமா?

கு:– ஏன் அப்படிக் கேட்கின்றாய்?

சி:– அத்தகைய கொடூர முறைகளும் நம் பழக்கத்தில் இருக்கின்றனவே, அதையும் ஈஸ்வரன் ஏற்றுக்கொள்கின்றானா என்னும் சந்தேகத்தை தெரிந்துகொள்வதற்கே!

கு:– அதை நைவேத்யமெனக் கூறலாகாது, வேண்டுமானால் பலியிடுதல் என்றுதான் சொல்லலாம். நிவேதனத்தின் உட்கருத்து, தன்னால் சமைக்கப்பட்ட (அல்லது தயார் செய்யப்பட்ட போஜன வஸ்துக்களும் மற்றுமுள்ள இதர வஸ்துக்களும், சர்வேஸ்வரனைக் குறித்தே செய்

யப்பட்டதாகவும்) அதை அவனுக்கு சமர்ப்பணம் செய்து, அவர் உட்கொள்ளுவதாக மனதில் பாவித்த லுமேயாகும். மேலும் பரமாத்மா உண்ட சேஷத்தை திரும்பவும் அவனை ஆராதிக்கும் பக்தர்கள் எடுத்துக் கொள்ளவேண்டு மென்பதுமே உண்மைப் பொருள். அதைத் தான் ப்ரஸாதமென்று கூறுவது வழங்கப்படு வது. இதைவிட்டு பலி யென்பதின் உண்மைப் பொருள் வேறு நோக்கத்தைக் கொண்டதே யாகும்.

சி:- அதன் கருத்தென்ன, ஸ்வாமி?

கு:- நாம் செய்யும் பூஜைகளை வெற்றிகரமாய் நிறைவேற வொட்டாமல் தடுத்து நிற்பதற்கு, நம் கண்ணிற்குத் தெரியாமல் சில, பூத, ப்ரேத பிசாசங்கள் மறைவாக நின்று காத்துக்கொண்டிருக்கின்றன.

சி:- அத்தகைய பூதங்கள் எதுவோ?

கு:- காமம், க்ரோதம், லோபம், மதம், மாத்ஸர்யம், பேதம், சஞ்சலம் இவைகளும் இவைகளுக்கு எஜ மானாய் விளங்கும், மனம்போன்ற இத்யாதி விஷ யங்களே யாகும். இந்த பிசாசங்கள் எங்கிருந்து நம் மீது ஏவப்பட்டதோ, அதே யிடத்திற்குத் திரும்பவும் அனுப்பி வைத்தலே யாகும் (அதாவது "ஈஸ்வர சன் னதிக்கு முன் இந்தத் தீய சக்திகளைக் கொன்று அவர் பாத சரணத்தில் தன்னை அர்ப்பணித்துக் கொள்ளு தலே உண்மை பலியிடுதல் ஆகுமென்று கூறலாம்.

எப்படியெனில் அத்தகைய குண தோஷங்களுக்குத் தன்னிடம் எடுத்துக் காட்டுவதே யாகும். இதை விட்டு உயிர் பலியிடுவ தென்பதைப் பற்றிக் கூறுமிடத்துத் தன் அக்ஞான கொள்கையினுலோ அல்லது தன் சுய இச்சைக்கோ, ஏதோ ஒன்றைக்காரணமாகக் கொண்டு செய்யப்படுவதாகவே கொள்ளமுடியும். நிற்க, இப்மாதிரிச் செயல்களை ஈஸ்வரன் விரும்புவதில்லை என்பதை நிச்சயமாய்க் கூறமுடியும். தன்னுல் உண்டாக்கப்பட்ட ஒரு ஜீவனை தானே பலியாக ஏற்றுக்கொள்ளமாட்டார். அதர்மமான வழிபாட்டு முறைகளை ஏற்றுக்கொள்வதில்லை. அப்படியே அவன் நம்மை ஏதோ ஒன்றைக் கேட்பதாய் வைத்துக்கொண்டாலும், அல்லது பாவித்துக்கொண்டாலும் அவையெல்லாம் நமது தீய குணங்களையும், தீய செயல்களையும், அவனது காலடியிலிட்டு பலியிடச் சொல்கின்றுனேயல்லாது தன்னிடம் ஊசலாடிக்கொண்டிருக்கும் ஜீவனைப் பலியாகக் கேட்கவில்லையென்பதை சந்தேகமறக் கூறலாம்.

அடுத்தபடியாகவுள்ளதோ த்யானம் அல்லது யோக மார்க்கமென்பதாகும். (மூன்றுவது அத்யாயத்தில் கூறப்பட்டுள்ள) ஜாக்ரத் ஸ்வப்ன ஸுஷுப்தி அவஸ்தைக்கு இருப்பிடமான ஜீவனைப்பற்றி இங்கு அறிதல் அவசியம். இந்த ஜீவனை யோகசாதனையினுல் தன்னிடம் நிர்குண ப்ருஹ்மமாய் விளங்கும்

சர்வேஸ்வரனுடன் சேர்ந்து மனதையும் அத்துடன் லயிக்கச் செய்வதே த்யானத்தின் உண்மைப் பொருளாகும். எப்படி யெனில் நம் சரீரத்தில் ஆறு ஆதாரங்கள் (ஸ்தானங்கள்) இருக்கின்றன வென்று கூறப்பட்டதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளல் வேண்டும். இதில் மூலாதாரம் முதல் ப்ருஹ்மரந்திரம் வரையில் (மேரு தண்டத்தின்வழியாக ஒரு நாடி செல்கின்றது) (இதை சுஷும்னை நாடி யென்றும்) ஜீவநாடி யென்றும் கூறப்படுவதுமுண்டு. இந்த நாடியில் குறிப்பிட்ட ஆறு ஸ்தானங்களும் கிரந்தி யென்றுரைக்கப்படும். முடிச்சுகளால் பிணைக் கப்பட்டுள்ளது. இதற்கு அடிபாகத்தில்தான் சாக்ஷாத் ஜகதம்பிகை ஸ்வரூபமான குண்டலினி சக்தியானவள் பூமியை பார்த்தவண்ணம் உறங்கிக் கொண்டிருக்கிருள். இவள் இருப்பிடத்திற்குக் கீழாக உள்ள ஸ்தானத்திலிருந்து வலப்பக்கமாகவும், இடப் பக்கமாகவும், இரண்டு நாடிகள், இரண்டு நேத் திரங்களின் (கண்கள்) வழியாக ப்ரூமத்யம் வரையில் (புருவ நடுவரையில்) செல்லுகின்றது. வலப்பக்க நாடிக்கு இடையென்றும் இடப்பக்க நாடிக்கு பிங்கலை என்றும் பெயர். இந்த நாடிகளின் வழியா கத்தான் நமது ஜீவன் மேலும் கீழுமாகப் போய்வந்து கொண்டிருக்கிருன். இப்படிச் சஞ்சரித்துக்கொண் டிருக்கும் ஜீவனுக்கு அதிஷ்டான (இருப்பிடமாக) தேவதையாய் இருப்பவளே குண்டலினி சக்தியாகும்.

இந்தக் குண்டலினி சக்தியைத் தன் இருப்பிடம்விட்டு எழுப்பி அதற்கு மேலாகவுள்ள ஒவ்வொரு ஸ்தானத்தின் வழியாகவும் (அவைகளை பேதித்துக்கொண்டு) கடைசியாவுள்ள ஸதாசிவ ஸ்தானமென்று சொல்லப்பட்ட ஸஹஸ்த்ரார கமலத்தில் வீற்றிருக்கும் பரமேஸ்வரனுடன் சேர்ப்பித்தலேயாகும். அப்படிச் சேர்ந்த பின்னர் குண்டலினி சக்தியானவள் திரும்பவும் தன் இருப்பிடம் நோக்கி வாராமல் அங்கேயே நிலைத்திருக்கச்செய்து அத்துடன் தன் மனதையும் ஒன்றாய் லயிக்கச்செய்தலே த்யானத்தின் ஸூக்ஷ்ம ரஹஸியமெனப்படலாம்.

சி:- அங்கேயே குண்டலினியை நிறுத்தா விட்டால் என்ன நேரிடும்?

கு:- ப்ரபஞ்ச மென்ற வாசனையைத் தன்னைவிட்டுச் சுற்றிக்கொண்டு சர்வேஸ்வரன் ஒருவன் ஸ்திரமாய் அடையத் தக்கவன் என்பதைத் தன் மனதில் எப்பொழுதும் ஸ்திரமாய் வைத்துக் கொள்வதற்கு த்யானஞ் செய்ய வேண்டு மென்பதே கருத்து. குண்டலினி சக்தியானவள் அங்கு போய் சேர்ந்த க்ஷண மாத்திரத்தில் திரும்பவும் தன்னிருப்பிடமான மூலாதாரத்திற்கு வந்துவிடுகின்றாள். இதுவே அவளுடைய ஸகஜமான செயலென்று தான் கூறமுடியும். எப்படியெனில் ஒரு கல்லைத்தூக்கி உயரமாய் எறிந்தால் அது எப்படித் திரும்பவும் பூமியில் விழுகின்றதோ

அதைப்போலவே தான். இப்படி தன்னிருப்பிடத்திற்கு வந்து தங்கிவிட்டால் தன்னுடன் பிணைக்கப்பட்டுள்ள ஜீவாத்மாவிற்குத் திரும்பவும் பிரபஞ்சலாஸனைகளை ஞாபகமூட்டித் தன் செயலில் ஈடுபடச் செய்து விடுகின்றாள்.

சி:- ஸ்வாமி, இச்சக்தியானவள் ஈஸ்வரனுடன் சேர்ந்திருக்கும் பொழுது ஏதேனும் தனி உருவ அமைப்புத் தென்படுமா?

கு:- அவை யெல்லாம் மனம் பண்படைந்தவரை தான் தீர்மானித்துச் சொல்லமுடியும். மேலும், தன் மனத் திரையிலோ அல்லது வெளியுலகிலோ ஒரு தோற்றமென்பதைப்பற்றி நிற்கும் வரையில் மனமானது தன்னிலை மறந்துவிட்டதாய்க் கூறுவதற்கில்லை. மனத் தோற்றம் எப்பொழுது மறைகின்றதோ அப்பொழுது உண்மை த்யான நிலை ஏற்பட்டதாய்ச் சொல்லமுடியும். உருவம் தென்படாவிட்டாலும் கோடி சூரியன்கள் ஒரே காலத்தில் ஒன்ருய்ச் சேர்ந்து ப்ரகாசித்தால் எந்த ஒளி யேற்படுமோ அத்தகைய ஜோதி ஸ்வரூபம் மட்டிலும் தென்படலாம். அதுவே நம் ஆத்மஜோதியாகும்.

சி:- குருதேவா, அதை நாம் எப்படிப் பார்க்கமுடியும்?

கு:- இதை பிறரால் எடுத்துச் சொல்லவும் முடியாது. அதையே ப்ரத்யக்ஷமாய்க் காட்டவும் முடியாது. தன் மனே பக்குவத்தையும், சரீர உழைப்பையும்

கொண்டுதான் இது முடியும், அல்லது முடியாதென்று தனக்குள்ளாகவே தீர்மானித்துக் கொள்ளவேண்டிய விஷயம். அப்படியே யிருந்தாலும் மிகுந்த ப்ரயாசை யுடன் பார்த்துத் தெரிந்துகொள்ளவேண்டிய ஒன்றை நம்மிடமிருந்து மறைத்துவிடுவதற்கு எப்போழுதுமே மாயத்திரை காத்து நிற்கின்றது. மனக்கண் நம்மை மறைத்துவிட்டால் உண்மையில் நாம் விரும்பும் பிரம்ம ஐக்கியமாகும் தன்மை மறைந்து, வேண்டாது ஒன்றை (மாயையின் வசப்பட்ட உலகில் காணும் நிகழ்ச்சிகளையே) தோற்றுவிக்கும். இதை யவரவர் களின் சரீர அப்யாச சாதனையைக் கொண்டுதான் தெரிந்துகொள்ளமுடியும்.

சி:- ஸ்வாமி, இந்த முறையை அனுஷ்டிப்பதற்கு எப்படி இருக்கவேண்டும்?

கு:- இதை கடைபிடிக்கும் சாதகன், சரீரபலம்பெற்ற வனும், மனோதிடம் பொருந்தியவனும், தன் சரீரத் தில் நடமாடும் இந்திரிய சேஷ்டைகளை யடக்கியும், மனம், புத்தி இவ்விரண்டையும் வேறெங்கும் செலுத் தாமல், ஒருமுகப்படுத்தி நிறுத்திக்கொள்ளும் வலிமை வேண்டும். இவ்வளவிற்கு மேலாக குரு கடாக்ஷம் பெற்றவனாகவும், ஈஸ்வர பக்தி நிறம்பியவனாகவும் இருக்கவேண்டும். இவ்வளவும் ஒருங்கே கூடியிருந்தா லும், பூர்வ புண்ய கர்ம விசேஷம் இவனுக்குச் சாதக மாயிருக்கவேண்டும். அப்படிக்கிருந்தாலன்றி இச் சாதனையில் வெற்றி காண்பது கடினம்.

சி:- இதற்கும், மனதில் ஸ்மரிப்பதற்கு, ஏதேனும் மந்திரங்களுண்டா?

கு:- ஆம், மந்திரமுண்டு; அதுதான் ப்ராணாயாம மந்திரமென்று சொல்லப்படுவது. நிற்க, மந்திரங்களை மனதில் ஸ்மரித்துக்கொண்டிருக்கும் வரையில் எண்ணங்களற்றுவிடுவதில்லை. வேறு அசுத்தமான சிந்தனைக்கு இடந்தராதிருக்கும் பொருட்டே மந்திரம் ஜபிக்கச் சொல்லப்பட்டது. மனம் செம்மையடைந்து ஒருமுகப்பட்டபின்னர் மந்திரங்களைப்பற்றிய சிந்தனைக்கும் இடமில்லை. இந்த அப்யாசத்திற்கென்ற மந்திரத்தைப்பற்றிச் சொல்லும்பொழுது, நாம் விட்டு வாங்குகின்ற ஒவ்வொரு ஸ்வாஸமும் ஈஸ்வரனைக் குறித்த மந்திரமென்றே கொள்ளவேண்டும். இதுவே அஜபா காயத்ரீ என்றும் சொல்லப்படுவதுண்டு. நம் புத்தியினாலும், மனதினாலும் கற்பித்துக்கொண்டு ஜெபிக்க முடியாதது, இதுவே அஜபை யென்பதின் பொருளாகும். நாம் ஒரு நாளைக்கு காலை ஆறு மணி முதல் மறுநாள் காலை ஆறு மணி வரையில், சற்றேறக்குறை 21600 ஸ்வாஸங்கள் (மூச்சுகள்) விட்டு வாங்குவதாய் கணக்கிட்டுச் சொல்லப்பட்டுள்ளன. இந்த ஸ்வாஸங்களை, நம் சரீரத்திலுள்ள ஆறு ஸ்தானங்களிலும் வீற்றிருக்கும் மூர்த்திகளுக்கு, முறையே, மஹா கணபதிக்கு 600 ஸ்வாஸங்களும், ப்ருஹ்மாவிற்கு (6000) ம், விஷ்ணுவிற்கு (6000) ம், ருத்திரனுக்கு (6000) ம், ஜீவாத்மாவிற்கு (1000), பரமாத்மாவிற்கு

(1000) ம், பரம்பொருளென்று கூறப்பட்ட ஸ்ரீ குரு விற்கு (1000) ம், ஆகப் பகிர்ந்து நிவேதனம் செய்யப் படுகின்ற தென்பதே அஜபையின், பாவத்தின் கருத்து. இதன் உள் ரஹஸியம் தான் விட்டு வாங் கும் ஸ்வாஸத்தை ஸ்தம்பிக்கச் செய்து தன்னையே ஈஸ்வரனுக்கு அர்பணித்துக்கொள்ளுதலே யாம்.

சி:– இதை அப்யஸிக்க (கடை பிடிக்க) என்ன செய்ய வேண்டும்?

கு:– சாதகனானவன் ப்ரதி தினமும் அதிகாலையில் $4\frac{1}{2}$ மணிக்கு எழுந்திருந்து, நல்ல, குளிர்ந்த நீரில் ஸ்நானம் செய்து, சிவ சின்னமோ, அல்லது வைஷ்ணவ சின் னமோ அணிந்துகொண்டு (திருநீறு அணிதலும், புண்ட்ரம் அல்லது நாமம் அணிதலுமாகும்) (ப்ராஹ் மணர்களாய் இருக்கும் பக்ஷத்தில்) அவர்களுக் கென்று சாஸ்திர பூர்வமாய்ச் சொல்லப்பட்டுள்ள, (சம்ப்ரதாயமான) கடமைகளில் ஒன்றான காலைக் கடனை முடித்துக்கொண்டு (ப்ராதக்கால சந்தியாவந் தனம்) அதன் பிறகு அப்யாஸத்திற்கு உட்காரவேண் டும். அதுவும் சுத்தமாயுள்ள ஒரு இடத்தில், சம மட்டமான பலகையின்மீது, புலித்தோல், மான்தோல் அல்லது வெண்மையான வஸ்திரம் இவைகளில் ஏதே னும் ஒன்றை ஆஸனத்தில் விரித்து பத்மாஸனமிட்டுக் கொண்டு உட்கார வேண்டும்.

சி:— பகவானை பூஜிப்பதற்கு இப்படித்தான் உட்கார வேண்டுமோ ?

கு:— இப்படி உட்காருவது தான் நலம்.

சி:— ஆஸனமில்லாமல் பூமியில் உட்கார்ந்து கொண்டு செய்யலாகாதா ?

கு:— பூமிக்கு எப்பொழுதும் எதையும் தன் வசமே இழுத்துக் கொள்ளும் சக்தியுண்டு என்பது தெளிவு. ஆகவே, பூமியில் உட்கார்ந்து கொண்டு செய்வதனால் எதை யுத்தேசித்து நம் சக்தியை செலுத்துகின்றேமோ அதில் பெரும் பகுதியை பூமி யிழுத்துக் கொள்ளுகின்றது. அதனல் நாம் செய்யும் அப்யாசமோ அல்லது பூஜை முதலிய காரியங்களோ நிறைவேறாமல் போய்விடலாம். எக்காரியத்தையும் பூமியில் உட்கார்ந்து செய்யலாகா தென்பதே பொது விதியாகும்.

சி:— மான் தோல், புலித்தோல், ஆஸனம் எதற்கு?

கு:— மான் தோல் ஆஸனத்தினல் புத்தி கூர்மையும் சாதுத் தன்மையும் (சாந்த புத்தியும்) சமத்வ மனோநிலையும், ஏற்படுகின்றது. புலித்தோல் ஆஸனத்தினல் திருட வைராக்யமும், மனோதிடமும் ஏற்படுகின்றது. இவ்விரண்டுமே ஈஸ்வர உபாஸனைக்கு ரொம்பவும் அவசியம். அதில் அவரவர்கள் எதை விரும்புகின்றார்களோ அதையே எடுத்துக்கொள்ளலாம்.

சி:- விபூதியே (திருநீறு) அல்லது புண்ட்ரமோ (நாமம்) தரித்துக்கொள்வதின் அவசியம்?

கு:- அவைகளை யணியத்தான்வேண்டும். ஏனென்றால் இரண்டுவித காரியங்களை ஞாபகத்தில் வைத்துக் கொள்வதற்கேயாகும்.

சி:- அதன் கருத்தென்னவோ, அதை விளக்கிச்சொல்லவும்.

கு:- நாம் குடியிருக்கும் வீட்டை பசுமாட்டு சாணத்தினால் மெழுகிச் சுத்தப்படுத்துவதைப்போல் ஈஸ்வரன் குடியிருக்கும் நம் சரிரமென்ற வீட்டைச் சுத்தம் செய்து கொள்ளவேண்டிய அவசியமன்றோ. அதற்காக அந்த சாணத்தை சுட்டெரித்து பஸ்மமாக்கி அதைக் கொண்டே நம் உடலை மெழுகுவதற்கு அடையாளமாகவே அதைத் தரித்துக்கொள்வதென்றும், (2) மனிதன் மண்ணில் பிறந்தவன், என்றோ ஒருநாள் பிடிசாம்பலாய்விடுகிறான், என்பதை மனதில் எப்பொழுதும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டுமென்று எடுத்துக்காட்டுவதற்கென்ற மற்றொரு காரணமாயும் கூறலாம். உண்மை தத்துவ மிதுதான். (மனிதனை சுட்டெரித்தபின்னர் அவனிடம் மிச்சப்படுவது நீறுக்கப்பட்ட சாம்பல் ஒன்றுதான் என்பதை மனதில் கொள்ளவேண்டும்.)

சி:- பத்மாஸனமென்றால் எப்படி யுட்காரவேண்டும்?

கு:- இரண்டு குதிங்கால்களும் அடிவயிற்றிற்கும், தொப்புளுக்கும் கீழ்ப்பாகத்தில் நன்றாய்ப் பொருந்தியிருக்கும்படியாய் வலது குதிகால் இடது துடைமீதும், இடது குதிகால் வலது துடையினுமாக பதியவைத்துக் கொள்ளுமுறையில் உட்கார்ந்துகொண்டு பின்னர் தன் குரு தனக்கு உபதேசிக்கப்பட்ட முறையில் அவரை மனதில் ஸ்மரித்து மானஸிக வந்தனம் செலுத்தி, அல்லது குரு தன் ஸமீபமே யிருந்தால் அவரை ப்ரத்யக்ஷயமாய் வணங்கிவிட்டு அப்யாசத்திற்கு ஆரம்பிக்கவேண்டும். சர்வேஸ்வரனையே தன் குருவாய் வரித்து நமஸ்கரிக்கின்றவர்களுக்குள்ள பொதுவான மந்திரம் "குருர்ப்ருஹ்மா குருர்விஷ்ணு: ஹ்தகுருர்தேவோ மஹேஸ்வர:, குரு: சாக்ஷாத் பரம் ப்ருஹ்மா தஸ்மை ஸ்ரீ குரவே நம:" இதைத் தன் வாயினலோ, மனதினலோ ஸ்மரித்துக்கொண்டு அப்யாஸத்தை ஆரம்பிக்கவேண்டும். "மூலாதாரம் முதல் ப்ருஹ்ம மந்திரம் வரையில், குண்டலினி சக்தியை எழுப்பி ஜீவனை மேல்நோக்கி அழைத்துச் செல்வதே, "ப்ராணயாமம்" எனப்படும். இதற்கு ஆரம்பத்தில் சொல்லிக்கொள்ள வேண்டிய மந்திரம் பின்வருமாறு. "ஓம் பூ: ஓம் புவ: ஓம் ஸுவ: ஓம் மஹ: ஓம் ஜந: ஓம் தப: ஓம் சத்யம் ஓம் தத்ஸவிதுர்வரேண்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி தியோயோன: ப்ரசோதயாது. ஓமாபோஜ்யோதிரஸோமம்ருதம் ப்ருஹ்ம பூர்புவஸ் ஸுவரோம்." இவைகளில் சிலவற்றை நீக்கியும் சில

கூட்டு அக்ஷரங்களைச் சேர்த்தும் படிக்கும்பொழுது காயித்ரிதேவியின் மஹா மந்திரமாகின்றது. நிற்க, இம் மந்திரத்தை உச்சரித்தலைவிட மனதில் ஸ்மரிப்பது தான் சிலாக்கியம். அப்படிச் செய்யும்பொழுது, வலக்கை கட்டை விரலால், வலது நாஸித்வாரத்தை மூடிக் கொண்டு இடது நாசி த்வாரத்தின் வழியாக ஸ்வாஸத்தை மெதுவாக மேலே யிழுக்க வேண்டும். பின்னர் அக்கையின் பவித்திர விரலால் (மோதிர விரல்) இடது நாஸியை மூடிக்கொண்டு, வலப்பக்க த்வாரத்தின் வழியாக ஸ்வாஸத்தை மெதுவாய் வெளியே விட வேண்டும். இதற்கிடையில் உள்ளுக்கிழுத்த ஸ்வாஸத்தை (மூச்சை) சில நிமிஷம் அப்படியே நிறுத்தல் வேண்டும். அப்படி நிறுத்தும்பொழுது தன் சிரஸை (தலையை) அசையாமலும், நன்றாய் நிமிர்த்தியும், சம நிலையாக வைத்துக்கொள்ள வேண்டும். இரண்டு கண் இமைகளையும் ½ அளவிற்கு (முற்றிலும் மூடிக்கொள்ளாமல்) இருக்கும் வகையிலும் தன் பார்வையை மேல் நோக்கிச் செலுத்த வேண்டும். எப்படி யெனில், நாஸியின் நுனியைப் பார்க்கும் வகையிலும், இரண்டு புருவங்களுக் கிடையிலுள்ள மத்ய ஸ்தானத்தைப் பார்க்கும் வகையிலும் அமைத்துக் கொள்ளுதலே யாகும். ஸ்வாஸத்தை உள்ளுக்கிழுத்தலை பூரகமென்றும், அப்படியே நிறுத்துதலை கும்பகமென்றும், வெளியில் விடுவதை ரேசகமென்றும் கூறுகிறோம். இது ஒவ்வொன்றிற்கு நிர்ணயம் செய்யப்பட்டுள்ள

கால அளவின்படி பூரகம் (உள்ளுக் கிழுத்தல்) ஒரு நிமிஷம். கும்பகம் (ஸ்தம்பனம்) நான்கு நிமிஷங்கள். ரேசகம் (வெளியே விடுதல்) இரண்டு நிமிஷங்கள். இந்தக்கால நிர்ணயம் ஆரம்ப கால அப்யாஸத்திற்கே யன்றி, நீண்ட காலத்திற்கல்ல. நிற்க, இந்த விதி முறைப்படியே திடீரென்று, ஆரம்பத்தில் செய்ய முடியாதவர்கள் இதில் சரி பாதியளவேனும் செய்வ தற்கு முயற்சித்து பின்னர் முழு அளவின்படி செய்து வரலாம். சாதாரணமாய் இவ்வழியைப் பின்பற்ற ஆசை கொள்ளும் உபாசகர்கள் (சாதகர்கள்) குறைந்தபக்ஷம் (¾) முக்கால் மணி நேரமாவது பழக்கத் தில் கொண்டு காலக்ரமத்தில் மணிக் கணக்காக ஈஸ்வர த்யானத்தில் லயிக்க சுலபமாகி விடலாம்.

சி:- இவ்வழியினுல் உண்டாகும் பல னென்னவோ?

கு:- தன் இஷ்டத்திற்குத் தோன்றியபடி யெல்லாம் சஞ் சரித்துக் கொண்டிருக்கும் மனதிற்கு அதன் ஏவல் காரனுயிருந்து அடி பணிந்து வேலை செய்து ஊக்க மளித்துக் கொண்டிருக்கும் ஜீவனை அவனுடைய உண்மையான எஜமானனிடம் (சர்வேஸ்வரனிடம்) அழைத்துக்கொண்டு போய்ச் சேர்த்து அவனுடைய பாதுகாப்பில் வைத்துவிட்டால் திரும்பவும் மாய்கை நிறைந்த மண்ணுலகில் ஆசைகொண்டு சஞ்சரிக்க மாட்டா னல்லவா; அதோடு, மனிதன் அடைய வேண்டியதும், பெறவேண்டியதுமான, உண்மை

லக்ஷியமான, ஆநந்த நிலையென்ற பரம சுகத்தைப் பெற்றுக்கொள்வதே இதன் பலனென்று கூறலாம். இப்படி ஜீவனும், ப்ருஹ்மமும் ஒன்ருய் சேர்ந்து இருத்தல்தான் முக்தி நிலையென்று சொல்லப்படுவது. இது மட்டினுமல்ல, ஐக்யத்தன்மை யேற்பட்டவுடன், உலகத்தோற்றம் மறைந்து, ஜீவன் வேறு ஆத்மா வேறு என்ற த்வைதநிலை (அல்லது பேதத்தன்மை) நீங்கிவிடுகின்றது. இதையே சமாதி நிலையென்றும் கூறலாம். இப்படித் தனக்குள்ளாகவே ஜீவனைக் கட்டுப்படுத்திக்கொள்ளும் சாதனுவலிமை பெற்று விட்டால் தான் நினைத்தமாத்திரத்தில், சரீரமென்ற கூட்டைவிட்டு ஜீவனைப்பிரித்து ப்ருஹ்மத்துடன் லய மடைந்துவிடலாம். ஆனுல் இந்நிலை சாமான்யத்தில் ஏற்படக்கூடியதென்று எளிதில் சொல்லிவிடமுடி யாது. இதைத்தான் ஜீவ சமாதியென்றும் சொல்வ துண்டு. இவையெல்லாம் எப்படியிருந்தாலும், எதை யும் ரொம்ப பலவந்தப்படுத்தி, கஷ்டப்பட்டு அப்யா ஸித்து ஒரு முடிவு தெரிந்துகொள்வதைக் காட்டிலும், சுலபமாயும், இயற்கையாகவும் ஏற்படக்கூடிய வழி யைப்பின்பற்றுவதுதான் சிறந்தது. இதை சகஜ சமாதியென்றும் சொல்லலாம். அப்படியே இந்த அப்யாஸ முறைகளைப் பின்பற்ற வேண்டுமென்று விருப்பம் கொண்டால், சிலகாலம் வரையில் தன் குருவின் நிழலிலே (இருப்பிடத்தில்) தானும் வாஸம் செய்து, அவர் முன்னிலையில் செய்து, பழகிக்கொள்

வதுதான், நலம். ஏனென்றால், இந்த அப்யாஸ சாதனையினால், சில சமயங்களில் தன் சரீரத்தையும், தன் புத்தியையும் பாதிக்கக்கூடிய நிலைமை யேற்படவும் ஹேதுவுண்டு. சுருங்கக்கூறுமிடத்து, சரீரம் திடம்பெற்றவனும் குருபக்தி மிகுந்தவனும், அகந்தையற்றவனுமே இதற்கு அருகதையுடையவன் என்பதை நிச்சயித்துக்கூறமுடியும்.

சி:- இம்மாதிரியான காரியங்களில் ஈடுபட ஏதேனும் விரதங்கள் அனுஷ்டிக்கவேண்டுமோ?

கு:- விரதமென்பதின் கருத்து, தான் ஒரு காரியத்தை யேற்றுக்கொண்டு செய்வதற்குமுன்னால், முதலில் தனக்குள்ளாகவே யெடுத்துக்கொள்ளும் ப்ரதிஞ்ஞை அல்லது சங்கல்பமென்பதேயாம். எப்படியெனில், தான் செய்யப்புகும் நல்ல காரியம் செவ்வனே நடந்தேறுவதற்கு, தன் மனதைப் பரிசுத்தப்படுத்திக் கொள்வதென்றும் கூறலாம். தன் மனதில் எப்பொழுதும் தூய எண்ணமே நிரம்பியிருந்தால் அதிலிருந்து திக்கும் காரியங்களும் தூய்மையாகவே யிருக்குமென்பதில் சந்தேகமில்லை. அப்படி யிருக்கும்பக்ஷத்தில் அதற்கென்று தனியாக விரதமனுஷ்டிக்க வேண்டிய தவசியமில்லை. அது சகலருக்கும் ஏற்படக்கூடியதல்லவென்பதை யொட்டியும், காரியம் நிறைவேறும் வரையிலாவது தூய்மையுடனிருக்கட்டும், என்பதை யுத்தேசித்தே விரதங்களைக் கைக்கொள்ளவேண்டு

யென்று சொல்லப்படுகின்றது, அதன்படி யேற்றுக் கொள்வதுதான் நல்லதென்று நிச்சயமாய்க் கூற முடியும். நிற்க, உபாஸகர்களுக் கென்று ஒரு தனி யான விரத முறைகளென்று சொல்வதைவிட உலகில் தோன்றியுள்ள மனித வர்க்கம் சகலருக்குமே யுள்ள விதி முறைகளே, சாதகர்களுக்கு ப்ரத்யேகமாய் வற்புறுத்திக் கூறப்படுகின்ற தென்றே யுண்மை யாகும். நிற்க, சட்ட திட்டங்கள் எப்படி யிருந்த போதிலும், சாதகர்கள், சில நன்மை பயக்கும் விதி முறைகளைத் தங்களுக்குள்ளாகவே வகுத்து அதற்குத் தங்களைக் கட்டுப்படுத்திக் கொண்டு நடந்து வருதல் தான் மிகவும் முக்கியமான விஷயம். அவையாவன (1) பிரும்மசரியம் (இல்லற வாழ்வு நடத்துபவர்களும் சரியே). (2) ஆகார நியமம். (3) சோம்பித்திரி யாமை. (4) அதிகம் தூங்காமை. (5) உபவாஸ மிருத்தல். (6) அஹிம்ஸைக் கொள்கை. (7) பராகம நிந்தனை யில்லாமை. (8) பொய் கூறுமை. இவை களையே ஒரு மஹத்தான விரதத்திற்கு ஒப்பிட்டுச் சொல்லிவிடலாம்.

சி:- ஆகார நியமமென்ப தென்னவோ ?

கு:- அதில் எத்தனையோ வகைகளுண்டு. தேவையான வற்றை மட்டிலும் எடுத்துக்கொண்டால் போது மானது. சரீர போஷணைக் கதிகமான, புஷ்டியையும், மஸ்து தன்மையும், வளர்க்கும் ஆகாரங்களை யறவே

நீக்குதல் நலம். அப்படிக்கில்லையேல் இயன்ற அளவு புளி, காரம் அதிகமாய் சேர்க்காமலும், உருளைக் கிழங்கு, மாமிஸம், வெங்காயம், தயிர், போன்றவை களை அகற்ற முயர்ச்சிக்க வேண்டும். உண்மையில் கூறினல் இந்த உணவு வகைகளே தேவையில்லை யென்று ஒதுக்கித் தள்ளிவிடுவது தான் உபாஸகர் களுக்கு நலமாயிருக்கும். ஏனென்றால், இந்த ஆகார வகைகளை ஓரளவு அசைவ உணவிற்கு ஒப் பிட்டே சொல்லலாம். மாமிஸம் உண்ணுவது ஒன்று தான் அசைவ உணவு என்பதல்ல; அதைப்போன்ற பல மடங்கு புஷ்டியையும், மந்த புத்தியையும், கோபத்தையும், காமத்தையும் ஊட்டக் கூடியதான ஸைவ உணவு முண்டு என்பதை ஞாபகத்தில் வைத் துக் கொள்ளல் வேண்டும். இவ்வகைப்பட்ட ஆகா ரங்களே அஸத்வ குணத்தைப் பெருக்குவதற்கு உற்ற துணையாய் நிற்கின்றது.

சி:- அப்படியானல் சத்வ குணத்தைக் கொண்ட ஆகாரங் கள் எதுவோ ?

கு:- பாசிப்பருப்பு, மிளகு, எலுமிச்சம்பழம், கீரை வகை கள், வாழைப்பூ வாழைத்தண்டு, பசுவின்பால், மோர் இவைகளேயாம். இவைகளால் சமைக்கப்பட்ட உணவையும் ரொம்பவும் மிதமாகவே உட்கொள்ள வேண்டும்.

சி:- சிலர் தங்களுக்குத் தோன்றிய வகையில், அசைவ உணவை யெடுத்துக்கொள்கின்றனரே அவர்களுக்கு உபாஸனா மார்க்கம் கிட்டாதோ?

கு:- நிச்சயமாய்க் கிட்டாதென்றே சொல்லலாம். அதைப் பற்றிக் கூறும்பொழுது பூர்வஜென்ம, பாப புண்ய விசேஷங்கள் எப்படி யிருந்தபோதிலும் இம்மனிதப் பிறவி யெடுத்தங்கூட, தன் செயல்களினாலும் நடை முறைப் பழக்க வழக்கங்களினாலும், காம, க்ரோதாதி களுக்கும், க்ஷாத்ர புத்திக்கும், தன்னை யிருப்பிடமாக் கிக் கொள்வதற்கு, செயற்கை யிலுண்டான அசைவ உணவுதான் அதிக ஊக்கமளிக்கின்றது என்பதையே கூறலாம். ஆகவே அதைப்பற்றி அதிகம் கூறாமல் விட்டுவிடுவதே நலம்.

சி:- ஏன், அதைக் கூற இயலாதா?

கு:- அப்படிக்கொன்றும் பெரிய விஷயமல்ல; உலகவாழ் மக்களில் பெரும்பாலோர் சைவ உணவையே தங்கள் ஜீவாதாரமாய் வைத்துக்கொண்டுள்ளார்கள். அதில் தனக்கு சுகமும், விருப்பமும் அதிகமாயிருப்பதாகக் கருத்தில்கொண்டு; அதிலுள்ள தீயசக்திகளை மறந்து விடுகின்றார்கள். மேலும் அதைப்பற்றிய உண்மைகளை எவர் எடுத்துரைத்தாலும், தனது நீண்ட நாளைய பழக் கத்தை, தன் வயிற்றிற்கென்று எடுத்துக்கொள்ளும் உணவு விஷயத்தை தன் அனுபவத்தில் கண்டுகொள்

ளாமல் பிறர் சொல்வதைக்கொண்டு அகற்ற முடியா தென்பதை யுத்தேசித்தே, அத்துடன் விட்டுவிடுதல் நலமென்று கூறப்பட்டது. எது எப்படியிருந்தபோதிலும் விரதங்களின் முக்கியமான அம்சம் தன்னடக்கமும், புலனடக்கமுமேயாகும். மற்ற விஷயங்களைப் பற்றி அவரவர்களின் குரு ஆக்ஞையின்படி நடந்து கொள்வதே மேலாகும். இதைத்தவிர, சாதகனைப் பற்றிக்கூறுமிடத்து அவனுக்கென்று குறிப்பிட்டுள்ள சத்விஷயங்களைவிட்டு துன்மார்க்கங்களில் ஈடுபட்டுக் கொண்டிருக்கும்பக்ஷத்தில் அவன் எவ்வளவு ஜென்மங்கள் ஈஸனை வழிப்பட்டாலும் கடவுளின் கருணையும் அவன் அனுக்ரஹமும் கிட்டாதென்பதை நிச்சயமாய்க் கூறலாம். மேலும் தர்ம மெல்லாவற்றையும்விட சிறந்த தர்மம் அஹிம்ஸா தர்ம மொன்றேயாகும். அப்படியிருக்க, ஓர்புறம் உயிர்களை வதைத்து புசிப்பதும், மற்றொருபுறம் அதற்கு ஆகார புருஷனை ஈஸனைக்குறித்துப் பூஜிப்பதும் பொருத்தமற்ற செய்கையேயாகும்.

சி:- ஸ்வாமி, இம்மாதிரி உபாஸனைகள் செய்துகொண்டிருப்பவர்களில் சிலர் பிறர்கண்டு ஆச்சர்யப்படும் வகையிலும், பிரமிக்கவைக்கும் வகையிலும் சில காரியங்களைச்செய்து காண்பிக்கின்றார்களே, அதன் ரகசியமென்ன?

கு:- அதைத் தெரிந்துகொள்வதினுல் ஒரு லாபமும் அடைய முடியாது. அதைப்பற்றிச் சிந்திக்காமல் விட்டு விடுதலே நலம்.

சி:- அதனுல் செய்யப்போவது ஒன்றுமில்லை யென்ருல் அவ்விதம் செய்யப்படுவதின் காரணமென்ன வென் பதையாவது தெரிந்துகொள்ளலாமல்லவா?

கு:- அதுவும் சரிதான். அப்படிச் செய்யும் காரியங்களைத் தான் சித்தியென்று சொல்லப்படுவது. அனுஷ்டிப் பவர்களைச் சித்தர்கள் என்றும் சொல்லலாம். அவர் களால் செய்து காண்பிக்கப்படும் காரியங்களில் எட்டு வகை சித்திகளுண்டு (அஷ்டா சித்திகள்). இதை எவர் செய்துவந்தபோதிலும் இதில் உள்ள பலனைப் பற்றித்தான் சிந்திக்கவேண்டும். நீண்டகால ஈஸ்வர னைக்குறித்தோ அல்லது அவரவர்களின் இஷ்டப்பட்ட மற்ற அங்க தேவதைகளைக் குறித்துப் பூஜிப்பதின் மூலமும், அல்லது கடுந் தபஸின் மூலமும் பெற்றுக் கொண்ட வர ப்ரஸாதமே சித்தி யெனப்படலாம். ஆனுலும் இதன்மூலம் செய்து காண்பிக்கப்படும் எந்தக் காரியங்களும் அதிக நாள் நீடித்திருக்காதென் பது நிச்சயம். சுருங்கக்கூறின், மாயையின் தந்திர ஜாலங்களில் இதுவும் ஒன்ருகும். இதைச் செயல் முறையில் கையாள்பவர்களைப் பற்றி இரண்டு விஷயங்

களை ஞாபகப்படுத்திக்கொள்ளவேண்டும். தன் தபசின் மஹிமையால் பெற்ற அருளென்ற வர ப்ரஸாதத்தைக் கொண்டு உலகோர் தன்னைப் புகழ்ந்துகொள்ள வேண்டுமென்பதையும், தன்னைப் பெருமைப்படுத்திக் கொள்ளவேண்டுமென்பதையும் விரும்பிச் செய்வதே யாகும் அல்லது தன் சுய இச்சையைப் பூர்த்தி செய்துகொள்ளும்பொருட்டு (உலகில் தன் வாழ்வைக் கடத்துவதற்குண்டான வசதிகளைப் பெறுவதற்கு) செய்யப்படலாமென்பதை மற்றொரு காரணமாய்க் கொள்ளலாம். நிற்க, இதுவே உண்மை சாதகனுக் குரிய ஈஸ்வரனால் கொடுக்கப்படும் மஹத்தான சோதனையாகும். எப்படியெனில், ஈஸ்வர தரிசனம் ஒன்றை ப்ரதானமாய் எண்ணிப் பலகாலம் கஷ்டப் பட்டுப் பெற்ற அருளைக்கொண்டு ஈஸ்வரனுடன் ஒன்றாய்க் கலந்து நித்ய சுகத்தையடையவேண்டிய சக்தியைச் சித்தியென்ற வேறு வகையில் செலவிடப் பட்டுத் திரும்பவும் உபாஸனைகளை யனுபவிக்க இச்சை கொள்கின்றனா, பரந்தாமனின் அடியைச் சேருகின் றனா என்பதுதான்.

—: நான்காம் அத்தியாயம் முற்றிற்று :—

## ஐந்தாம் அத்தியாயம்.

சி:- ஸ்வாமி, இது வரையில் (இதற்கு முந்திய அத்தியாயங்களில்) தங்களால் எடுத்துரைக்கப்பட்ட ஒவ்வொரு விஷயத்தையும் அதிலுள்ள சூக்ஷ்ம தத்வங்களையும் அடியேனின் புத்திக் கெட்டிய வரையில் ஓரளவு தெரிந்து கொண்டேன். இனி எனக் கெடுத்துச் சொல்ல வேண்டியவை யேதேனும் உண்டோ ?

கு:- ஆம், இதற்குமுன் கேட்ட மரணம் பற்றிய விஷயமும், ஞான மார்க்கமும் தெரிந்துகொள்ள வேண்டியவையாம்.

சி:- ஸ்வாமி, அவைகளைப் பற்றித் தெரிந்துகொள்ள வேண்டுமென்றே விருப்பிக் கேட்டேன். ஆனல் அதைப் பின்னல் தெரிந்து கொள்ளலாமென்று அப்படியே விட்டு விட்டேன்.

கு:- மரண மென்பது நம் சரீரத்தில் இயங்கி கொண்டிருக்கும் ஜீவன் (சுவாசம்) இவ்வுடற் கூட்டை விட்டுப் பிரிந்து வெளிச் சென்று விடுதலே யாகும். இதைப் பற்றி நிதானமாய் யோசித்து முடிவு கொள்வதவசியம். ஏனென்றால், இதற்கு முந்திய கர்ம யோகத்தில் சொல்லப்பட்ட ஒவ்வொரு விஷயமும் இஜ்ஜீவனைப் பற்றியதே யாகும். இம்மரண ரஹசியத்தில் இரண்டு வகைகள் உண்டு. ஒன்று மனிதனுக்கு

நிர்ணயிக்கப்பட்ட காலம் வரையில் தங்கியிருந்து அது முடிந்தவுடன் இயற்கையாக வெளி யேறுவது. மனிதன் தானாகவே வருந்தி யழைத்துக் கொள்வது மற்ருென்று. இது எப்படியாயினும் தாயின் வயிற்றில் ஜெனித்து சரீர உருவம் பெற்று, பூமியில் விழுந்த அன்றே மரணம் நிச்சய மென்பது உலக மறிந்த விஷயமே.

சி:- மரணம் மனித சமூகத்திற்கு மட்டிலும் தானு?

கு:- இதைக்கூட பிறர் சொல்லித் தெரிந்துகொள்ள வேண்டுமா? உடற்கூடு என்பது மனிதன் மட்டிலும் பெற்றிருக்கவில்லை, மற்றய பகுத்தறிவற்ற ஜந்துக் களும், இன்னும் எத்தனையோ இனங்கள் உடற்கூட் டைப் பெற்றவைகள் தான் என்பதையும், அதில் சகல வற்றிலும் ஜீவன் தங்கியிருக்கின்ருன் என்பதையும் முன்னரே சொல்லப்பட்டிருந்தும் திரும்ப அதை யெடுத்துக் கூற அவசியமே யில்லை. ஆனல் மனிதன் தன் புத்தியின் உதவியினல் தன் மரணகாலம் நெருங்கு வதைத் (அவ்வப்பொழுது) தனக்கேற்படும் சூழ் நிலை யைக் கொண்டு அனுமானித்துப் பிறரிடம் சொல்லு கின்ருன். மற்ற ஜீவராசிகளோ வெனில், தன் முடிவு காலத்தைப்பற்றி அறியும் சக்தியை (புத்தி—அறிவு)யும், எடுத்துரைக்கும் நாவையும் பெற்றிருக்கவில்லை.

சி:- இப்படித் தனக்கு நிச்சயமாய் சம்பவிக்கப் போவ தைப்பற்றி ஏன் சிந்திக்காமலிருக்கின்ருன்?

கு:- நீ சொல்வதைப்போல் ஒருவரும் சிந்திக்காமலிருக்க மாட்டார்கள். ஆனால் எப்பொழுதும் அதைப்பற்றி சிந்தித்துக் கொண்டிருப்பதில்லை. அதை அவ்வளவு அவசியமென்று நினைப்பதில்லை. மேலும் என்றோ ஒரு நாள் நடக்கப் போகும் விஷயத்தை ஆரம்பத்தி லிருந்தே மனதில் நினைத்துக் கொண்டிருந்தால், தான் வாழும் வரையில் செய்துகொண்டிருக்க வேண்டிய காரியங்களெல்லாம் தடைப்பட்டு நின்றுவிடுமல்லவா! அதையும் காரணமாய்க் கூறலாம். இதற்குள்ள முக் கியமான மற்றொரு காரணம் பயமென்ற பேயின் வசப்பட்டு அல்லல் படுதலேயாகு மென்பதையே குறிப்பாய் சொல்லலாம்.

சி:- அப்படி பயமேற்படக்கூடிய காரணம் ?

கு:- உலகில் உள்ள சகல போக்ய விஷயங்களும் ஸ்திர மில்லை யென்று தெரிந்தும்கூட, தான் அனுபவிக்கும் சுக வாழ்வை கைவிட மனம் வருவதில்லை. அதுவும் சரீரம் இருந்தாலன்றி எதையும் அனுபவிக்க முடியா தல்லவா ? மரணமென்பது தன் சரீரம் அழிந்து போகும் சம்பவம் தானே ஆகவே அதைக் கண்டஞ் சுவதும் சகஜம் தான். எவருமே தன் அழிவைத் தானே தேடிக்கொள்வதில்லை. தன்னைச் சூழ்ந்துள்ள அக்ஞான விருத்தியினாலேற்படும், பந்த பாசங்களில் கட்டுண்டு, அவைகளெல்லாம் தனக்கென்றே உற்பத் திச் செய்யப்பட்டதாக மனதில் நினைத்துக் கொண்

டிருக்கும் வரையில் மரணத்தைக் கண்டு எப்படி பயப்படாமல் இருக்கமுடியும். இந்த மனிதப்பிறவி யெடுத்திருக்கும் வரையில் வேண்டுமானுல், தன் இனம், உற்ருர், உறவினர், தாய், தந்தையர், பெண்டு, பிள்ளைகள், தன் மனைவி யென்றும் மனதில் நினைத்துக் கொண்டிருக்கலாம். இதற்கடுத்த படியாக உள்ள பிறவியில் இவர்களெல்லோரும் தன்னை சூழ்ந்து வரப் போகின்ருர்களா என்பதை சிந்திக்க வேண்டும். மேலும் தன் சரீரத்தில் தெம்பும், திடமும் தன்னு டைய சுய ப்ரக்ஞை யிருக்கும் வரையில் அன்புடனும், சிரத்தையுடனும் போஷிக்கப்படும் தன்னைச் சார்ந்த வர்களென்ற எவரேனும் மரணமடைந்த பின்னர் தன்னைப் பின் பற்றி வருகின்ருர்களா வென்பதையும் சிந்திக்கவேண்டும். முன் வினைப் பயனுய் பந்த, பாசங்கள் ஏற்பட்டதாய் வைத்துக்கொண்ட போதி லும், காலதேவன் வரும்பொழுது (இவனைச் சார்ந்தவ ரென்று சூழ்ந்துகொண்டிருக்கும் எவரையும்) கேட் டுக்கொண்டு வருவதில்லை. அல்லது இவர்கள் தாஞ கட்டும், அவனைத் தடுத்து நிறுத்த முடிகின்றதா? இவைகளைப் பற்றி திட்டமான ஒரு முடிவுக்கு வரும் பக்ஷத்தில் மரணத்தைப் பற்றி கலங்க வேண்டிய தவசியமே யில்லை. மேலும் அதைக் கண்டு பயப்படு வதற்கு மூன்ருவதாயுள்ள காரணம், தன் வாழ்க்கை யில் செய்துள்ளதும், செய்துகொண்டிருப்பதுமான தீயக் காரியங்களைக் கண்டு உலகத்தவருக்குப் பயப்

படா விட்டாலும், அல்லது அறியா வண்ணம் மறைத்து வைத்திருந்தாலும், தன் உள்ளதே குடியிருக்கும் சர்வாந்தர்மியமான பரமேஸ்வரனிடம் மறைத்து வைக்க முடிவதில்லை. இவன் செய்யும் ஒவ்வொரு காரியத்தையும் பகவான் மறைமுகமாய் நின்று கண்காணித்து வருகின்றார். அது மட்டிலுமல்ல. ஒவ்வொருவன் செய்யும் தீய செயல்களையும் அவன் மனச்சாக்ஷி மூலமே அவனுக்கு எடுத்துக் காட்டுகின்றார். அப்படிப்பட்டவனை மனித சமூகம் ஒன்றும் செய்யாமல் விட்டாலும் பரமேஸ்வரன் மட்டிலும் ஒன்றும் செய்யாமல் விட்டு வைப்பதில்லை. இவன் கர்மங்களுக் கேற்ற ஜென்மங்களை கொடுப்பதோடு கூட, காலதேவன் வசம் சிக்கவும் வைத்து மனிதனை கதி கலங்கச் செய்து விடுகின்றார்.

சி:- அதை யெப்படி பிறர் அறியமுடியும்?

கு:- அதுவும் உண்மைதான். பிறர் தெரிந்து கொள்ளா விட்டாலும் அவரவர்களின் வாழ்வின் கடைசியாகவுள்ள ஒவ்வொரு நிமிஷத்திலும் அனுபவிக்கும் அவஸ்தைகள் சொல்லத் தரமன்று. ஜீவன் தன்னை விட்டுப் பிரியுங் காலத்தில் ஏற்படும் அவஸ்தையைத் தான் மரணவஸ்தை யென்றுச் சொல்லப்படும்.

சி:- ஸ்வாமி, இதன் உண்மை விளங்க வில்லையே? அப்படி அவஸ்தை யுண்டாகக் காரணம்?

கு:- இவன் வாழ்வில் சுகமென்றுக் கருதிச் செய்து வந்த பஞ்சமா, பாதகங்கள் ஒவ்வொன்றும் இவன் மனக் கண் முன் தோன்றி, இவன் ஜீவனைக் குத்திக் காட்டி, வாட்டி வதைக்கின்றது. அப்பொழுது அவனுக் கேற்படும் சேஷ்டைகளை பலர் தன் கண் முன்னால் பார்த்து வருகின்றனர். இப்படி அவஸ்தைக்குட் பட்டு மரணத்தருவாயில் இருப்பவன் தனக்குத் தோன்றுவதை வெளியில் சொல்ல முடியாமலும், தானும் அவைகளை மறந்து ஈசனை நினைக்க முடியா மலும், காலதேவன் குறுக்கிட்டு நின்றுவிடுகிறான். காலதேவனின் தண்டனையும் கடுமையாகத் தானிருக் கும். ஆகவே தான் மரணத்தைக் கண்டு சகலரும் அஞ்சுகின்றார்கள். நிற்க, இதன் உண்மை சூக்ஷ மத்தை யறிந்தவர்கள் (எப்படி யெனில், தானென்றும் நிலைத்திருக்கப் போவதில்லை யென்பதையும் தன்னைச் சார்ந்தவர் ஈசன் ஒருவனைத் தவிர வேறு எவருமே யில்லை யென்பதையும் எந்த இடத்திலிருந்து இந்த ஜீவன் சரீர கூட்டிற்கு வந்ததோ அதே யிடத்திற்கு திருப்பிச் சென்றுவிடுகின்ற தென்பதையும், திட்ட மாய் மனதில் வைத்துக் கொண்டிருப்பவர்கள்) இதைக் கண்டு கலங்குவதே யில்லை.

சி:- அப்படிப்பட்டவர்கள் எவரோ?

கு:- மெய்ஞ் ஞானிகளும் தன்னிடத்திலேயே ஜீவனை ஐக்கியப்படுத்திக் கொள்ளும் சக்தியைப் பெற்ற மகான்களுமே யாகும்.

சி:- சிலர் மரணமென்பதில்லையென்று கூறுகின்றனரே அதன் ரஹஸியமென்னவோ?

கு:- அதுவும் உண்மைதான். அப்படிக் கூறப்படுவதும் மஹான்களாலும், ஞானிகளாலுமேயாகும். அவர்கள் அதன் ரஹஸியத்தை தெரிந்தபின்னரே அதை ஸ்திரப் படுத்துகின்றார்கள். சாஸ்திர ப்ரமாணமும் அப்படியே தானிருக்கும். சுருங்கக்கூறின், ஜீவனுக்கு எந்த காலத்திலும் அழிவில்லை. அதற்கிருப்பிடமாக இருந்த சரீரத்திற்கே என்றும் அழிவேற்படும். மேலும் நிர்மலமாயுள்ள சர்வேஸ்வரனுடன் ஐக்கியப்பட்ட ஜீவனுக்கு ஜெனனம், மரணம் இவ்விரண்டைப்பற்றிய கவலையில்லையென்று நிச்சயமாய்க் கூறலாம். இதைத் தான் கற்றறிந்த பெரியார்களும் தங்கள் சித்தாந்தக மாய் வைத்துக்கொண்டிருப்பதினால்தான் எதைக் கண்டும் கலங்குவதில்லை. இதற்குமுன் (முந்திய அத்தியாயத்தில்) கூறிய ஜீவன், முக்தியின் ரஹஸியமும் இதை யொட்டியதுதான். தன் புத்தியும், மனமும் ஈசன்பால் ஒருமுகமாய் கலந்து, ஜீவன் பிரிவதுதான் (அல்லது தானே அப்பியாசத்தின் மூலம் ஈசனை அடையச்செய்தலே) மோக்ஷ நிலை யெனப்படும். தன் சிந்தனைக்கும் மனதிற்கும் எட்டாமலும் அவஸ்தைக் குள்ளாக்கப்பட்டு வெளிச்செல்லும் ஜீவனின் பிரிவைத்தான் மரணமென்றுக் கூறுவதின் உண்மைக் கருத்து.

சி:- அதை யெப்படி நிர்ணயிப்பது?

கு:- திட்டமாய் நிர்ணயிக்க முடியாதென்றாலும், அனுமானத்திலாவது அப்படித்தானிருக்குமென்றே கூறலாம். அது ஒருபுறமிருக்கட்டும். தனக்குத் தெரிந்தே ஜீவன் பிரியாவிட்டாலும் பரம பக்தனும் உண்மை உபாசகனும், நிர்மலமான மனதையும் பெற்றவனாயிருக்கும் பக்ஷத்தில் தன் அந்திய காலமுடிவின் லக்ஷணத்தை ஒரு சில நிமிஷங்களுக்கு முன்பாக சூஜனையாக வேனும் தெரிந்துகொள்ளலாம். அப்படியில்லாவிட்டாலும், பகவான் தன்னையே சரணமென்று உபாசித்துவந்த ஜீவனை மனக்கண்முன் தெரிந்தோ தெரியாமலோ வெளியே செல்லவொட்டாமலும் தடுத்து தன் விருப்பிடமே அழைத்துக்கொள்கின்றான். அதைத்தான் அனுகிரஹமென்றும் (அருளுதல்) கொள்ளலாம்.

சி:- ஸ்வாமி, ப்ராயசித்தமென்றும், சாந்தியென்றும் சில காரியங்களை செய்வதின் காரணமென்ன?

கு:- அன்பனே, கர்ம வினைப்பயனால் உலகில் ஜென்மமெடுத்திருந்தாலும் மனிதன் தன் விளைத்தெரிந்து (அறிவின் உதவியைக்கொண்டு) வாழ்க்கை நடத்தும் பொழுது எந்தத் தீச் செயல்களையும் புரியாமலிருக்க வேண்டுமென்பதே மும்மறைகளின் (ருக், யஜுர், சாம வேதங்கள்) பிரதான லக்ஷியமாய் எடுத்துரைக்கப் படுகின்றது. அவைகளை சகலரும் கற்றறிந்தவர்களுமல்ல (அது அவ்வளவு எளிதுமல்ல). இருந்தாலுங்

கூட, அவைகளை ஓரளவேனும் படித்தறிந்த பெரியோர்களால் அதற்கு அனுசரணையாகவும், பொது சித்தாந்தமாயும் இயற்றப்பட்டுள்ள சம்பரதாய சட்டதிட்டங்களில் கண்டுள்ள உண்மை விஷயங்களுக்கொத்தவாறு தன்னால் சாத்யப்பட்ட அளவேனும் கடைப்பிடித்தொழுகி தன்னைச் சீர்ப்படுத்திக்கொள்ள வேண்டுமென்பதே சாதாரண விதிமுறையாகும். அதை நன்றாகத் தெரிந்துகொண்டிருந்தாலும், அனைத்தையும் அசட்டைசெய்து ஒதுக்கித் தள்ளிவிட்டு தன் லக்ஷியமும், திட்டமும்தான் தனக்கு முக்கியமெனக் கருதி நடைமுறை செயல்களிலும் கொண்டுவந்து விடுவதும் மனிதனின் இயல்பாகிவிடுகின்றது. அதனால் எது நன்மை, எது தீமை யென்பதை நிதானமாய் யோசிக்க இடந்தருவதில்லை. தன் லக்ஷியம் கை கூடும்பொருட்டு தான் ஈடுபடும் செயல்முறை எப்படிப்பட்டதாயிருப்பினும் சரியே அதை செய்துமுடிக்க பின் வாங்குவதில்லை. இப்படி வாழ்க்கையில் நடைபெறும் காரியங்கள் எத்தனையோயுண்டு. பெரும்பாலும், இதில் நன்மையைவிடத் தீமையானவைகள் அதிகமாயிருக்கும். தீமையென்பது எப்பொழுதும் குற்றத்திற்கிருப்பிடமென்பதும் குற்றத்திற் கேற்ற தண்டனையுண்டென்பதும், உலக மறிந்த விஷயம். இப்படிச் செய்யப்படும் குற்றங்களுக்கு தானாகவே விரும்பி ஏற்றுக்கொள்ளும் தண்டனையே ப்ராயசித்தமெனப்படும் (அல்லது பரிஹாரமென்றும்) கூறலாம். அது

ஒரு புறமிருக்கட்டும். பாபம், புண்யம் இவ்விரண்டிற்கும் நிவர்த்தித் தேடிக்கொள்ள வேண்டுமேயானல் அதற்கென்ற ஒரு வஸ்துவும் தேவைப்படுகின்றது. அப்படியுள்ள வஸ்துவே நமக்குக் கிடைத்துள்ள மனித ஜென்மமென்றுக் கருதலாம். எதையும் செய்து சழிப்பதற்கு ஏதேனும் ஒரு இடத்தில் தங்கிக் கொண்டுதான் (வசித்துக்கொண்டுதான்) செய்யவும் வேண்டியிருக்கின்றது. அதற்கேற்ற வஸ்துவாகவே இப் ப்ருஹ்மாண்டமான உலகத்தைக் கருதலாம். இவையெல்லாம் எப்படி யிருந்தபோதிலும் மண்ணில் பிறந்த மனிதன் வாழும் கடைசி நாள் வரையில் எந்த குற்றமும் செய்யவில்லை யென்றோ, எவரையும் எந்த பாபதோஷமும், தீண்டவில்லை யென்றுச் சொல்லிக் கொண்டாலும் மனித பிறவி யெடுத்தே முன் ஜென்மாவில் தெரிந்துப், தெரியாமலும் செய்துள்ள, பாப, புண்யத்தை யொட்டியதே யாகும். ஆகவே அதற்கென்றுவது பரிஹாரம் தேடிக்கொண்டே யாக வேண்டும். நிற்க, தன் ஜீவ தசையில் (உலகில் உயிருடன் வாழும்போது) அக்ஞானத்தினல் சூழப்பட்டுச் செய்யப்படும் கர்மங்கள் எதுவுமே அநேகமாய் குற்றமும், தோஷத்தைக் கற்பிக்கக் கூடியதாகவே யிருக்குமென்பதில் சந்தேகமில்லை. அப்படியுள்ள காரியங்கள், ஒவ்வொன்றும் அவ்வப்பொழுது அத்துடன் கழிந்து போக வேண்டுமென்பதை யொட்டி எடுத்துரைக்கப் படும் வழிகளையும் பிராயசித்தமென்று சொல்லலாம்.

தன் பாப நிவர்த்திக்கான காரியங்களை தன்னுடைய முடிவு காலம் தெரியாமலிருப்பதினாலோ அல்லது எதையும் அலக்ஷியமாய் கருதுவதினாலோ எதையும் செய்துகொள்ளாமல் விட்டு விடுகின்றான். கர்மத்தைச் செய்து கழிப்பதற் கென்றே எடுத்து வந்துள்ள பிறவியைக் கொண்டு அதைச் செய்து கழிக்காமலிருப்பதினால் நம்மைக் கவ்விக்கொள்ளும் பாப தோஷத்திற்கு, மற்றொரு கர்மாவைச் செய்யவேண்டி வந்து விடும். அக்கர்மாவே மறு பிறவியாகவும் முடிந்து விடலாமென்பதும் பொருந்தும்.

சி:- ஸ்வாமி, இப்படி ஒன்றை யுத்தேசித்து மற்றொன்றையும், ஒன்றைவிட்டு மற்றெதையும் செய்து கொண்டிருந்தாலோ அதன் முடிவு என்னவாகும்?

கு:- இதைப்பற்றி அதிகம் கூறவும் வேண்டுமோ? இதன் முடிவு காலதேவனென்று பெயர் பெற்று விளங்கும் யமதர்மராஜனால் அளிக்கப்படும் மரணவஸ்தை யென்ற கடுந்தண்டனை யாகும். இத்தண்டனையும் இப் பிறவியுடன் கழிந்து விடுவதில்லை. எப்படி யெனில் சர்வேஸ்வரனால் கொடுக்கப்படும் ஜனன, மரணமென்ற தண்டனைக்கு ஒரு முடிவே யில்லாமல் தொடர்ந்து வந்து கொண்டிருக்கு மென்பதே யாகும். மேலும், ஒரு மனிதன் தன் சரீரத்தில் செயல்படும் சக்தியும் பெற்று, சூக்ஷும புத்தியும் பெற்று ஜீவித்து வாழும் காலத்தில் செய்ய முடியாத தொன்றை மரணத்தருவாயில் செய்

யவும் முடியாது, என்பதை ஒருவர் கூருபலே தெரிந்து கொள்ளலாம். இதை மட்டிலும் உலகம் நன்ருய் தெரிந்துகொண்டு மிருக்கின்றது. இதை யெல்லாவற் றையும் உத்தேசித்துத் தான் ஒருவனின் மரணம் சம்ப விக்கும் முன்னரும் ஜீவன் பிரிந்த பின்னரும் ஆகம முறைப்படியாயுள்ள மந்திர சாஸ்திர பூர்வமாயும் (அவனைச் சார்ந்தவர்களைக் கொண்டு) கிரியைகள் செய்து முடிக்கப்படுகின்றது. இதன் உண்மைக் காரணம் ஒன்றுதான்; என்னவெனில், தெரிந்தும், தெரியாமலும், செய்தும் செய்யாம லிருந்ததுமான பாப, புண்யமென்ற சகல கர்மங்களும் இம்மண்ணுல குடன் ஒழியட்டு மென்பதை கருத்தில் கொண்டும் அப்படி மறு பிறவியென்ற ிந்தாலும்-அதிலாவது நற் கதியடையட்டு மென்பதுவு மாகும்.

சி:- ஜீவன் முக்தி யேற்பட்டால் அதன்பிறகு பிறவியில்லை யென்றீர்களே அப்படி யிருக்க பரிஹாரம் செய்ய வேண்டிய (செய்துகொள்ள வேண்டிய) அவசிய மென்ன?

கு:- அதுவும் உண்மைதான். ஆனல் சகலருக்கும் அந்நிலை யேற்பட்டால் எந்த ப்ராயசித்தமும் வேண்டியதில்லை. உலகில் பிறந்துள்ள அத்தனைப் பேருக்கும் ஜீவன் முக்தி கிட்டு மென்ரே அல்லது கிட்டியதாகவோ கூற முடியாது. இது விஷயம் சகலரும் அறிந்துள்ள உண்மை. தவிர, அப்படியே ஜீவன் முக்தி கிடைப்ப

தாய் வைத்துக்கொண்டாலும் அது கிடைக்கும் வரையில் சரீரமென்ற அசுத்த பாத்திரத்தில் தங்கியிருந்த மட்டிலும் அதற்கு தோஷ மேற்பட்டு விடுகின்றது. ஆகவே தங்கியிருந்த சரீரத்தை யொட்டியாவது ப்ராயசித்தம் அவசியம், தேவைதானென்று கூறலாம்.

சி:- ஸ்வாமி, உலகில் பைசாசமென்றும், சில்லரை தெய்வங்களென்றும் அவையவைகளுக்குப் பெயரிட்டழைப்பதுடனில்லாமல், சிலவற்றை வழிபட்டுக் கொண்டுமிருக்கின்றார்களே இதன் உண்மை யென்னவோ ?

கு:- பரமேஸ்வரனிடமிருந்து அவன் ஆக்ஞைப்படித் தோன்றியுள்ள, கணங்கள் பல கோடிக்கணக்கானவை. அவைகளைப் பற்றிப் பொதுவாய் சிந்திக்குமளவில் உலகில் *அவ்வப்பொழுது தோன்றி மறையும் ஜீவன்கள் அனைத்துமே கணங்களாகவே மாறி விடுகின்ற தென்பதையே ஒருவாறு கூறலாம். அதையே தன் இஷ்டப்பட்ட வகையில் பெயரிட்டு அழைத்துக் கொள்ளவும் செய்யலாம்.

சி:- இப்படி மாறிவிடக் காரண மெதுவோ ?

கு:- மண்ணில் உடற் கூட்டிலிருந்து வெளியேறும் ஜீவனைப் பின் தொடர்ந்து செல்லும் எண்ணச் சுழல்களையும், கர்மத்தையும் கொண்டு நிர்ணயிக்க வேண்டிய இவ்விஷயத்தை எளிதில் கூற இயலாது.

சி:- அப்படி யானல் இதைத் தெரிந்து கொள்வ தெப்படி ?

கு:- அனுபவத்தில் காணமுடியாதொன்றை தன் புத்தியின் சூக்ஷமத்தைக் கொண்டு ஓரளவு அனுமானித்து நிர்ணயிக்கலாம்.

சி:- அப்படியாவது சிறிது விளக்கிக் கொள்ளலா மல்லவா?

கு:- மனித உடல் அழிந்த பின்னர் நடைபெறும் விஷயங்களை அதிலிருந்து பிரிந்து வெளிச் சென்ற ஜீவன் தான் அறியுமே யன்றி ஒரு கூட்டில் தங்கியிருக்கும் ஜீவன் தன் அக்ஞான விருத்தியினல் தனக்கப்பாற்பட்டதாயுள்ளவற்றை தெரிந்துகொள்ளும் சக்தியை இழந்து விடுகின்றது.

சி:- இவ்விஷயத்தை அறிவுக் கெட்டிய வரையிலாவது தெரிந்துகொள்ள முடியாதா ?

கு:- அதுவும் சரியே, ஒரு ஜீவன் தன் சரீரத்தில் தங்கியிருந்த வரையில் அதைக்கொண்டு செய்யப்பட்ட காரியங்களில் புண்ணிய விசேஷம் அதிகமாயிருக்கும் பக்ஷத்தில் அதற்கென்று நிர்ணயிக்கப்பட்ட காலம் வரையில் சுவர்க போக மனுபவிக்கும் தேவாம்ஸமாகவும், அது முடிந்த பின்னர் பாபத்திற் கேற்றபடி திரும்பவும் ஜெனனத்தை யளித்து மண்ணுலகத்திற்கு அனுப்பப்படுகின்றது. நன்மை செய்தறியாத ஜீவன் அதற்கு ஏற்பட்டபடி தீய குணங்களைக் கொண்ட

அசுராப்ஸமாகி, நரகத்தை யனுபவித்து, அக்காலம் முடிந்தவுடன் திரும்பவும் அசுரபுத்தி கொண்ட மனிதனாகவே பூமியில் தள்ளப்படுகின்றான். தர்ம சாஸ்திர பிரமாணங்களும் இதையே எடுத்துரைக்கலாம். இவ்விரண்டு ஜீவன்களுமே ஒரே யிடத்தில் ஸ்திரமான நிலையை அடைந்துவிட்டதெனக் கூற முடியாது. இதில் முக்கியமாய் தெரிந்துகொள்ள வேண்டியது என்னவென்றால், ஒரு ஜீவன் செய்த பாப, புண்யங்களுக்கேற்ற பலனை அதை யொத்த மற்றொரு ஜீவனைக் கொண்டே யளிக்கின்றாரென்பதை அறியவேண்டும்.

சி:- இது எப்படி?

கு:- ஒரு மனிதன் செய்த நல்ல காரியத்திற்கு (அல்லது உதவிக்கு) மற்றவன் உதவுவதைப் போலவும் ஒருவன் செய்த குற்றத்திற்கு மற்றவன் தண்டிப்பதைப் போலவுமே (குற்றவாளிகளை தண்டித்து சிறையில் அடைப்பது போலவும். தண்டனை முடிந்த பின்னர் வெளியில் அனுப்புவதைப் போலவுமே.)

சி:- இதைத் தவிர மற்ற பைசாசங்கள் எதுவோ?

கு:- சரீரமற்று சஞ்சரிக்கும் ஜீவன்களே, பைசாச மென்ற பெயரைப் பெற்றுக் கொள்கின்றன. அதற்கு தனி உருவமோ அல்லது ஏதேனும் அமைப்போ ஒன்றும் கிடையாது. அதையே க்ஷுத்ர தேவதை யென்றும் துர்கணங்கள் என்றும் கூறலாம்.

சி:- அவைகள் எதிலிருந்து தோன்றியவைகள்?

கு:- மனிதக் கூட்டிலிருந்து வெளிச் சென்ற ஜீவனிடமிருந்து உதயமானது தான்.

சி:- இப்படி ஏற்படக் காரணம் என்ன?

கு:- மனிதனுக்கு உண்டாகும் இயற்கைக்கு விரோதமான மரணமே யாகும் (அதைத் தான் துர்மரணமென்று சொல்லப்படுவதும்). ஒருவன் தன் ஜீவனை தன்னுடைய மனதிலுதித்த கொடூர எண்ணங்களைக் கொண்டு தற்கொலை செய்து கொள்கின்றான் (எப்படியெனில் தூக்கிட்டுக் கொள்வது, ஆற்றில் குளத்தில் விழுந்து மரணமடைவது, விஷமுண்டு இறப்பது, இம்மாதிரி எத்தனையோ காரியங்களை தனக்குத்தானே செய்துகொண்டு உயிரை மாய்த்துக் கொள்வதும், ஒருவனை அறியாமல் மற்றொருவன் பயங்கர ஆயுதங்களைக் கொண்டு வெட்டியும் குத்தியும் கொன்று விடுவது மாகும்.) இவை யெல்லாமே இயற்கைக்கு மாறுபட்ட செய்கை யென நிச்சயமாக கூறமுடியும். இதுபோன்ற அநேக நிகழ்ச்சிகளை கண்ணால் பார்த்துக் கொண்டும் செவியினால் கேட்டுக்கொண்டும் இருக்கிறார்கள்.

சி:- இவர்களும் (துர்மரணத்தை வலுவில் சம்பாதித்துக் கொள்ளுகின்றவர்கள்) காலதேவனால் அழைத்து செல்லப்பட்டவர்கள் தானே?

கு:— அப்படி கூறுவதற்கில்லை, ஏனென்றால் அவனால் அழைத்துச் செல்லப்படுகின்றவர்களுக்கு (இயற்கை மரணமெய்தியவர்களுக்கு) நிச்சயமாய் ஏதேனும் ஒரு புகலிடம் கிடைத்து விடலாம், அது எவ்வகைப் பட்ட பிறவியாயிருப்பினும் சரியே அதைப் பற்றிய சிந்தனைக் கிடமில்லை. ஆனால் துர்மரணம் அவ்வினத்தை சேர்ந்தது அல்ல. தன் மனதைக் கொண்டே (அஞ்ஞான விருத்தியினால்) வரவழைத்துக் கொள்ளும், தர்மத்திற்கு விரோதமானதொரு அசம்பாவித செயலே ஆகும். எப்படியெனில், தன்னைப் படைத்தவனொருவனிருக்க அவன் ஆக்ஞையின்றி (கட்டளையில்லாமல்) ஜீவனை அழித்துக் கொள்ள எவ்வகையிலும் அதிகாரமில்லை. அப்படியதற்கு உண்மையில் அதிகாரம் பெற்றவனாயிருக்கும் பக்ஷத்தில் தன் சரீர கூட்டிலேயே, தன் ஜீவனை நிரந்தரமாய் தங்கியிருக்கும்படி ஏன் செய்து கொள்ளக் கூடாது, என்பதையும் சிந்திக்கவேண்டும். காலதேவன் தன்னை நாடி வரும்பொழுது தான் பெற்றுள்ள அதிகாரத்தை நிலை நாட்டிக்கொள்வது தானே; அது எவராலும் முடிவதில்லை யென்பதை சிந்தித்துப் பார்த்தால் உண்மை விளங்கும். (இதையொட்டித்தான் தற்கொலைக்கு முயற்சிக்கின்றவனை அரசாங்கத்தார் தண்டிப்பதும்) அப்படி திட்டமாய் யோசித்து முடிவு கொள்பவர்கள் எவருமே இக் கொடூரமான செயல்களை விரும்ப மாட்டார்கள். இது ஒருபுறமிருக்க, வெளியே சென்ற ஜீவனைப்பற்றி கவனிப்போம். இப்படி திடீரென எதிர்பாராமல் வெளியே சென்ற ஜீவனானவன் பைசாசமாக மாறி அதற்கென்ற முடிவுக்காலம் வரையில்

உலகில் வாயு ரூபமாய் (காற்றுடன் கலந்து) சுற்றித் திரிந்துகொண்டே யிருக்கும். இது எப்படி யென்றால் ஒரு உத்யோகஸ்தன் தன் எஜமானனிடத்தில் சொல்லிக் கொள்ளாமல் தன் வேலையைவிட்டு நீங்கிவிட்டாலோ அல்லது நீக்கப்பட்டுவிட்டாலோ உடனே அவன் நினைத்த மாத்திரத்தில் வேலை கிடைப்பதில்லை. அப்படியே வேலை கிடைத்தாலும் அதற்கும் மிகுந்த பிரயாசைப்பட வேண்டும். இதற்கிடையில் தன் கைப்பொருள் யாவுமிழந்து கடைசியில் தன் ஒரு வயிற்று உணவிற்கு கூட தன் மானமரியாதை சகலவற்றையும் இழக்கும் தன்மை ஏற்பட்டு பிறரிடம் இரந்து கேட்கும் மளவிற்கு வந்து விடுகின்றான். ஒரு காரியஸ்தன் அவனுக்குக் கொடுத்துள்ள உத்தியோக காலம் வரையில் வேறு இடத்திற்கு வேலைக்குச் செல்லாமலும் கொடுத்துள்ளதை கடைசி வரையில் நெறி தவறாவல் நடந்தும் வருகின்றான். அவன் விலகும்பொழுது அவனுக்கு மரியாதைகளும் புகழ் மாலையும் கொடுத்துப் போற்றி அனுப்புவதுடனில்லாமல், அவன் தள்ளாத காலத்தில் வாழ்வை கழிப்பதற்கு வேண்டிய வசதிகளை செய்து கொடுப்பதுமுண்டு. இது ஒரு தனிமனிதனுக்குத்தான் பொருந்தும் என்பதைவிட சமுதாயத்திற்கு பொருந்துமென்று கூறலாம் தன் வேலையை இழக்கின்றவன் இரண்டு காரணங்களை ஒட்டித்தான் அதை இழக்க நேரிடுகிறது. தான் பார்த்த வேலையில் மன்னிக்கமுடியாத குற்றமிழைத்திருக்க வேண்டும் அல்லது தன் பேராசையின் காரணமாக அதிகப் பொருளை ஈட்ட வேண்டுமென்று நினைப்பது. இவ்விரண்டுமே

ஒரு மனிதனை தீய வழிகளில் செலுத்தி விடுகின்றது. இதை ஒரு உதாரணச் சான்றாக கூறப்பட்டதேயல்லாது, உலக நடைக்கு ஒப்பிட்டுப் பார்ப்பதற்கு அல்ல. இதைப்போல ஈஸ்வரனால் ஏவப்பட்ட ஜீவன் சரீரமென்ற கூட்டினால் அவனால் நிர்ணயிக்கப்பட்டுள்ள காலம்வரை தங்கியிருந்து, தன் கடமைகளை செய்து முடித்தபின் திரும்பவும் அவனிடம் போய்ச்சேர வேண்டியதுதான் பொதுவாயுள்ள முறை. தவிர ஈசனிடம்போய் சேராவிட்டாலும் அவன் ஆக்ஞைப்படி நடப்பதுதான் இயற்கை மரணத்வத எய்த ஹேதுவாகும். பகவானை மீறிச்செல்கின்ற எவருக்குமே அவனிடம் புகலிடம் கிடையாது என்பது நிச்சியம். அப்படி இயற்கைக்கு விரோதமாய் மாய்த்துக் கொள்வதற்குமுள்ள காரணமும் எதையும் சகிக்கமாட்டாத கோழைத்தனமும் பிறரிடம்கொள்ளும் க்ஷாத்ர தன்மையுமேயாகும். மேலும் இப்படி துர்மரணம் எய்துகிறவர்களுக்கு எந்த பிராயச்சித்தமும் பலனளிப்பதில்லை. இதை சிந்தித்துப் பார்த்தால் அவர்களுக்கென்ற எந்த பரிஹாரச் செயல்களும் தேவையில்லையென்பதும் புலப்படும்.

சி:— ஸ்வாமி, இப்படி பைசாச உருக்கொண்ட ஜீவன்கள் மற்ற மனிதர்களைப் பிடித்து வதைப்பதும், அதற்கு பரிஹாரம் செய்துகொள்வதும் எதையுத்தேசித்து?

கு:— அதற்கு உருவத்தை கற்பிப்பது மனிதன் மனமேயன்றி வேறில்லை. நிற்க, காற்றிற்கு ஏதேனும் உருவமுண்டோ; காற்று ரூபமாய் உள்ள ஜீவனுக்கு எந்த

உருவத்தை நிர்ணயிப்பது; மனதில் எந்த பயங்கர தோற்றத்தை உண்டு பண்ணிக் கொள்ளப்படுகிறதோ, அது பைசாசமாகி விடுகின்றது. இது சாதாரணமாய் மனிதனைத் தீண்ட மார்க்கமுண்டு. காற்று என்பது சகலரின்மீதுதான் வீசுகிறது; அதற்கு மனிதனென்றும் மிருகமென்றும் எப்பாகுபாடுகளும கிடையாது. பைசாசமென்பது காற்றுடன் கலந்து சஞ்சரிக்கும் ஜீவன்தானே ஆகையால் அது மனிதனைத் தீண்டுவது சகஜம் தானே.

சி:- அப்படி மனிதனைத் தீண்டக்காரணம்?

கு:- அந்த ஜீவன் பூமியில் சரீரம் தாங்கி வாழ்ந்த காலத்தில் என்னென்ன கஷ்டங்களையும், துன்பங்களையும், கொடூரத்தன்மைகளையும் அனுபவித்ததோ, அல்லது கூட்டை விட்டு பிரிந்து செல்லும்பொழுது எந்த எண்ணத்துடன் வெளியேறிற்றோ அதை யறிந்தவர்கள் ஒருவருமில்லை. மேலும் தன் எண்ணத்தை பூர்த்தி செய்து கொள்வதற்கு வேண்டிய சரீரத்தை இழந்து விடுவதினால், எண்ணம் இச்சையாகவும் அதுவே வெறியாகவும் மாறி தன்முன் தோன்றும் பலரையும் அதுவும் மனித சமூகத்தில், திடமும் தன்நம்பிக்கையுமற்று நடமாடும் கோழை நெஞ்சமுள்ளவர்களைத்தான் அதிகமாய் சாடுகின்றது. தவிர இந்த மாமிசங்கள் நிறைந்த ஒரு கூட்டில் வசித்ததின் காரணத்தினால் அதைப் போன்ற அவாதான் அதிகமாயிருக்குமென்பதில் சந்தேகமில்லை.

சி:- இதனால் ஏற்படும் விளைவுகளென்னவோ?

கு:— தீமையினுல் ஏற்பட்டதுதானே பைசாச உருப்பெற்றது. ஆகவே அதனிடம் எதிர்பார்க்கக்கூடியதும் அதற்கேற்றபடிதான் இருக்கும். இது ஒரு புறமிருந்தாலும் மனிதனிடம் தோன்றும் தீய எண்ணங்களை பைசாசமாகவும் கூறிவிடலாம். எண்ணம் எதையும் செயலில் காட்டுவதற்கு மூல காரணமாய் விளங்குகின்றது. பொதுவாய் தீய செயல்களின் முடிவே பைசாசமென்று நிச்சயித்துக் கொள்ளலாம். இதன் பலன் எப்படி மனிதனை பந்தப்படுத்துகின்றதென்பதுதான் முக்கியமாய் தெரிந்துகொள்ளவேண்டியவை. குறிப்பாய் அதெற்கென்ற காலம் வருமளவும் ஈசனுல் நிரந்தரமாய் நிர்ணயிக்கப்படும் மற்ருெரு ஜெனனம் வரையில் பிறரை சாடாமலும் தீங்கு செய்யாமலிருப்பதுமில்லை.

சி:— ஸ்வாமி, அதற்குத்தான் சரீரமில்லையென்றீர்களே அது எப்படி தீங்கு செய்யமுடியும்?

கு:— அது உண்மையே. ஒரு சரீரத்தைக் கவ்விக்கொண்டபிறகு தானே சேஷ்டைகளை மனிதன் அனுபவிக்கின்ருன். எப்படியெனில் அவன் சரீரத்தை சில காலம் வரையில் தனக்கென்றே ஆட்கொண்டு விடுகின்றது (மனித ஜீவனுடன் கலந்து கொண்டு விடுகின்றது) அந்த சேஷ்டைகளைக் கொண்டுதான் அதன் தன்மைகள் நிர்ணயிக்கப்படுகின்றது. அப்படியே அதற்கு எந்த தீங்கும் செய்ய வேண்டாமென்ற எண்ணமிருந்தபோதிலும் அதையொத்த ஜீவனைத் தன்வசம் பெற்று உலகில் சரீரத்துடன் நடமாடிக்கொண்டிருக்கும் மானிட

பைசாசங்கள் அவைகளை சும்மா விட்டுவைத்திருப்பதில்லை.

சி:– இந்த மானிட பைசாசங்கள் எதுவோ ?

கு:– அதில் எத்தனையோ வகையுண்டு. உதாரணத்திற்கு ஒன்றிரண்டு மட்டிலும் எடுத்துக்கொண்டாலே போதுமானது. அதுதான் ஜால வித்தைக்காரர்களென்றும், பேயோட்டும் மந்திரவாதிகளென்றும் சொல்லிக் கொண்டிருப்பவர்களேயாகும். இவர்களின் ஜீவிய காலத்தை கழிப்பதற்கும், இன்னும் எவ்வளவோ, மாய மாலங்களை செய்து காட்டுவதற்கும் உலகில் நிலையற்று சஞ்சரிக்கும் ஜீவன்களை பேயுருவாய் சிருஷ்டித்து தன் வசப்படுத்திக் கொண்டு தனக்குற்ற பிரதான தெய்வமாய் வணங்குவதே தன் முக்கிய லக்ஷ்யமாய் கருதப்படுகின்றது.

சி:– இதைக் கொண்டு மனிதன் என்ன செய்ய முடியும்?

கு:– அதனாலேற்படும் பலனைப்பற்றிச் சிந்திக்கும் பொழுது அதைக் கணக்கிட்டுச் சொல்லத்தரமன்று. பொதுவாய் அதிலும் சில காலம் நல்ல பலனும், சில காலம் தீமையான பலனுமுண்டென்பது நிச்சயம். ஆனால் உண்மையில் தீமைதான் ஓங்கி நிற்கும். ஏனென்றால், தீய சக்தியினால் உருவாக்கப்பட்ட ஒரு வஸ்துவைக்கொண்டு தீய பலனைத்தான் சிருஷ்டித்துக் கொள்ளமுடியுமேயன்றி நன்மையென்ற சொல்லிற்கேயிடமில்லை. தவிர இது அதிக காலம் நீடிக்காவிட்டாலும், அது வியாபித்

திருக்கும் வரையில் சரீரத்தையோ, மனதையோ பாதிக்காமலிருப்பதில்லை.

சி:– ஸ்வாமி, அப்படிப் பாதிக்கப்படும் தீய செயல்களென்னவோ?

கு:– (1) தன் இச்சையை பூர்த்தி செய்துகொள்ள செல்வம் பெற்றுள்ளவர்களை தன் வசமாக்கிக்கொள்வது (2)பிறர் பொருளை அபகரிக்க நினைத்து மறைமுகமாய் அவர்கள் சரீரத்திற்கு ஹானியேற்படும் வண்ணம் ஊனமாக்கி விடுவது (சரீரத்தின் முக்கிய பாகங்களை மடக்கி விடுவது) சித்தத்தை கலங்கவைத்து ப்ரமைப் பிடிக்கச் செய்வது அல்லது பைத்தியமாக்குவது. சுருங்கக் கூறினால், ஒரு ஜீவனைக்கொண்டு மற்றொரு ஜீவனை அழிப்பதற்கென்றுச் செய்யப்படும் மறைமுகமாக கையாளப்படும் சதிகார திட்டம் அத்தனை முறைகளும் இந்த பைசாசத்திகள் உதவிகரமாய் உபயோகப்படுத்தப்பட்டுவிடும். இதைத்தான் வெளிப்படையாய் ஏவலென்றும், சூன்யமென்றும் சொல்லப்படுவதும். இத்தகைய தீயச் சக்திகளை மெய்ஞானிகளும், பரம பக்தர்களும் தன்னம்பிக்கைக் கொண்டவர்களும் தன் ஆத்மபலத்தைக்கொண்டு (உண்மை தெய்வத்தை சரணடைந்து) விரட்டியடிக்கின்றார்கள். மற்றவர்களோவெனில் அதனால் தன் சரீரம் படும் துன்பம் தாங்க மாட்டாது அதே பேயினத்தை நாடிச் செல்வதுமுண்டு.

சி:– ஸ்வாமி, இதைக் கேட்கும்பொழுதே மனதில் பீதியும், கலக்கமும் அடைகின்றதே அப்படியிருக்க, இச் செயல்

களேயே தன் லக்ஷியமாய்க் கொண்டுள்ளவர்களே பரமேஸ்வரன் ஏற்றுக்கொள்கின்ருனு?

கு:— அதை யோசிக்குமளவில் அப்படிப்பட்டவர்களே இப்பொழுது பெற்றுள்ள ஜென்மத்தைப்போல் எத்தனேயோ ஆயிரம் ஜென்மங்கள் எடுத்தாக வேண்டியிருக்கின்றது. அதுவரையில் ஈஸ்வரன் தன்னிடம் அண்ட விடமாட்டான். இதன் உண்மைக் கருத்து ஒன்றை விட்டு ஒன்றை பற்றி நிற்கும் ஜென்மங்களே பிரதிபந்தமெனப்படுவது. இதையொட்டியவர்கள் எந்த ஜீவனேத் தன் கைபாவையாக அமைத்துக்கொண்டு தன் தீய செயல்களில் ஈடுபடுகின்ருர்களோ அதைப்போலுள்ள பல்லாயிரக்கணக்கான ஜீவன்களின் ப்ரதிபந்தம் (ப்ராப்தம்) இவனேச் சேர்ந்து ஒவ்வொன்றிற்கும் ஒரு ஜென்மத்தை யெடுக்கவேண்டி நேரிட்டுவிடும். அதுவும் தன் கைவசத்தில் வைத்து ஆட்டிவைக்கும் பேயென்ற நீச்ச ஜென்மம்தான் உண்மை பலனுக முடியும். பொதுவாய் மனிதனின் எண்ணம்தான் அதற்கேற்றப் பிறவிக்கு இடமளிக்கின்றது, என்பதை மட்டிலும் நிச்சயமாய் மனதில் வைத்துகொள்ள வேண்டும். இத்துடன் இதைவிட்டு அடுத்த விஷயத்தை கவனிப்போம்.

சி:— குருதேவா, இனி அடியேனுக்கு சொல்ல வேண்டிய விஷயம் ஞான மார்க்கமல்லவா ?

கு:— ஆம். அது ஒன்றுதான் ரொம்பவும் முக்கியமான விஷயமும்கூட.

சி:— அதற்கென்று ஏதேனும் தனி முறை அப்பியாசம் வேண்டுமோ?

கு:— இதற்கென்று ஒரு தனி வழிபாட்டு முறைகளோ அல்லது அப்பியாச சாதனைகளோ எதுவுமில்லையென்றாலும் வகுக்கப்பட்டுள்ள ஒவ்வொரு தெய்வீக மார்க்கத்தையும் ஓரளவேனும் நன்றாய் தெரிந்து கொண்ட பின்னர் அதன் முடிவு தன் மனதை விட்டகலாமல் அனுசந்தானம் (மௌனம்) செய்து கொண்டிருப்பதே ஞான மார்க்கத்தின் சூக்ஷம ரகசியம்.

சி:— அப்படிப்பட்ட ஞானிகளின் லக்ஷணமென்னவோ?

கு:— அதை எளிதில் சொல்லக்கூடியதல்ல.

சி:— ஏன் அப்படி?

கு:— உலகில் சகலரும் ஞானிகளாய்த்தான் விளங்குகின்றார்கள் அல்லது புகழ் பாடுகின்றார்கள். இதில் யார் எத்தன்மை கொண்டவர்களென்பதை எப்படி நிச்சயிப்பது?

சி:— ஸ்வாமி, சிலர் அப்படி சந்தேகமில்லாமல் நிச்சயமாய்ச் சொல்கின்றார்களே?

கு:— அப்படி யாரென்று நிச்சயிக்கப்படுகிறது?

சி:— ஏதோ ஒரு சிலர் துறவரம் (சன்யாசம்) பெற்றுக்கொள்கின்றார்களே அவர்களைத்தான் ஞானிகளென்று கூறுகின்றார்கள்.

கு:– அது ஒரு முறையில் சரிதானென்றாலும் அதைக் கொண்ட மட்டிலும் நிச்சயிக்க முடியாது?

சி:– ஏன் அப்படி?

கு:– சாதாரணமாய் துறவு என்பதின் உண்மைப்பொருள் எதையும் விட்டு விடுதல் (அல்லது) தனக்கொன்றும் தேவையில்லை யென்று அகற்றிவிடல் யென்பதேயாகும். அதில் எதை விட்டு விடுவது, எதைப் பிடித்துக்கொள்வது என்பதை எது நம்மை விட்டது அல்லது பற்றிக் கொண்டுள்ளது யென்பதைத் தான் சிந்திக்க வேண்டும்.

சி:– அப்படியானால் சன்யாசம் பூண்டவர்கள் ஞானத்தை யடைந்தவர்களல்லவா?

கு:– இல்லை யென்று ஒரு முடிவாகச் சொல்லவில்லையே! அதிலும் "ஞானி" "அக்ஞானி" என்ற இவ்விருபால மிருக்கலாம்.

சி:– இதைக் கொஞ்சம் விளக்கமாய் தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.

கு:– ஞான மென்பது துறவு கொண்ட சன்யாசிகளுக்கு மட்டிலும் உண்டென்று சொல்வதை விட சர்வேஸ்வரனால் படைக்கப்பட்ட அனைவருக்கு முண்டென்றே சொல்லலாம். ஆனால் தன் அஞ்ஞானமென்ற திரை யிட்டு மறைத்துக்கொள்வதினால் பெரும்பாலோர் தெரிந்து கொள்வதில்லை. அதைக் கூறுமிடத்து துறவு கொண்டவர்கள், இல்லறம் நடத்துபவர்கள் இவ்விரு

பாலோருக்குமே பொருந்தும். ஞானத்தைப் பற்றிய மட்டிலும் குறிப்பாக தெரிந்து கொள்வதென்பது அவரவர்களின் ஜென்மாந்திர புண்ய விசேஷத்தை யொட்டித்தான் நிர்ணயித்துக் கொள்ள முடியும். ஏனென்றால் இதற்கு முன் (முந்திய இரண்டு அத்யாயங்களில்) கூறியபடி ஞானத்தின் இருப்பிடமே ஈஸ்வரனென்ற விஷயத்தை ஞாபகப் படுத்திக்கொள்ள வேண்டும். மேலும் அது சகலருக்கும் கிட்டிவிட்ட தால் மனித யத்தினத்தில் தன் வாயளவில் கூறிக் கொண்டிருக்கலாமே யல்லாது அதை ஊர்ஜிதப்படுத்திக் கூற முடியாது. மேலும் ஞான மென்பது இரண்டு வகையில் ஏற்படுகின்றது. ஒன்று தன் பிறப்பை யொட்டிய பூர்வ புண்ணிய வாசனையினால் தானாகவே ஏற்பட்டு விடுகின்றது. மற்றொன்று தர்ம சாஸ்திர சூக்ஷம ரகஸியங்களை நன்றாய் தெரிந்துகொள்வதி லிருந்து தன் நீண்ட நாளைய அனுபவப் பழக்க வழக்கங் களிலிருந்துமே யாகும். அதோடு ஒரு குறிப்பிட்ட சட்ட திட்டங்களுக்குட்பட்டோ அல்லது ஏதேனும் வரையறுக்கப்பட்ட அளவுக்கோ ஏற்பட்டுமுள்ள தாகவே கூற முடியாது. ஞானமென்பது எந்த சட்ட திட்டங்களைக் கொண்டும் கட்டுப்படுத்தக் கூடிய வஸ்துவுமல்ல.

சி:— ஞானத்தின் உண்மை லக்ஷணந்தான் என்னவோ?

கு:— ஒரு மனிதன் தன் இல்லற தர்மத்தைப் பொறுப் பேற்று நடத்தும் பொழுது இப் பொறுப்பேற்று

கடவுளின்றி தான் காரணமல்ல வென்பதையும் பூர்வா ஜென்மத்தின் வினையும் தன் காலத்தை யுணர்ந்தும் அதை யொட்டி தனக்கேற்படும் கஷ்ட, நஷ்டங்களை பொறுமையுடன் சகித்துக்கொண்டு எடுத்தக் காரியத்தை மட்டிலும் செய்து வருகின்ற ஒருவன் தன் குடும்ப ரக்ஷணைக்காக எந்தக் காரணத்தைக் கொண்டும் தீய வழியில் பொருளீட்ட முயற்சிக்காமலும் தன்னைப் போலவே பிறர் கஷ்டங்களையும் எண்ணி தன்னாலியன்ற உதவியளிப்பதும், தன் வயிற்றுக் குணவில்லாவிட்டாலும், பிறர் பசி கண்டு சகிக்காமல் தன் உணவை யளிப்பதும் இவற்றிற்கு மேலாக தானே சகலவற்றையும் செய்வதாயுள்ள எண்ணத்தை சுற்றியிருப்பதுமான இத் தகைய பண்பு கொண்ட குணங்களே வெளிப் படையாகவுள்ள ஞானத்தின் லக்ஷணமெனலாம். இவன் இல்லறம் நடத்துவதினால் எந்த தீய சத்திகளும் குறுக்கிட்டு தடை செய்து நிறுத்துவதுமில்லை. மேலும் தனக்கென்று வாழாமல் பிறர்க்கென்றே வாழுகின்றவனை எந்த சட்ட திட்டங்களும் தடை செய்து நிறுத்துவதுமில்லை.

சி:— கட்டுப்படுத்தவில்லையென்று எதை ஆதாரமாய்க் கொண்டு சொல்லுகின்றீர்கள்?

கு:— ஈசன் ஒருவன் வகுத்துள்ள உண்மை வழிகளைக் காட்டிலும் மனிதன் கற்பித்த சட்ட திட்டங்கள் அவ்வளவு உயர்வானதல்ல என்பதைக் கருத்தில் கொண்டே அவ்விதம் கூறப்பட்டது?

சி:— ஸ்வாமி, ஞானமடைய எதைச் செய்ய வேண்டும் அல்லது எப்படி நடந்து கொள்ள வேண்டும்?

கு:— அன்ப, இவ்விஷயத்தைப் பொதுப்படையாகத்தான் எடுத்துரைக்கலாமே யல்லாது, இதைத்தான் செய்ய வேண்டுமென்றும் அல்லது இதைத்தான் செய்யக் கூடாதென்றோ திட்டமிட்டுக் கூறலாகாது.

சி:— என் அப்படி?

கு:— ஞானமடைவ தென்பது உலகில் சாதாரணமாய் தினசரி நடத்தும், வாழ்க்கைக் கப்பாற்பட்ட விஷயம். மேலும் உலக வாழ்வை பொருத்த மட்டில் அதற் கென்று இயற்றப்பட்டுள்ள சட்ட திட்டங்களைக் கொண்டு மனித சமுதாயத்தை கட்டுப்படுத்திவிடலாம். அதை பின் பற்றி நடக்கவேண்டியதவசியமே, அப்படி யில்லையேல் ஆளும் அரசாங்கத்தின் தண்டனை எப்பொழுதும் போல் காத்துக்கொண்டே யிருக்கின் றது. இது நிற்க, நாம் எடுத்துக்கொண்ட விஷயமோ வெனில், இகம் பரம் என்று சொல்லப்படும் (உலகம், தெய்வீகம்) இரண்டு வகைப்பட்ட சுகத்தை யொட்டி யதும் தெய்வ நிலைக்கு அழைத்துச் செல்லும் மார்க்கத் தைப் பற்றியதாகும் அதுவும் ஒருவருக்கு தேவைப் படுவதும், மற்றொருவருக்குத் தேவையில்லை யென்று ஒதுக்கித் தள்ளும் இவ்விஷயத்தை கட்டுப்பாட்டுடன் கூடிய கட்டளையாகக் கொண்டு கூறுவது பொருத்தமற்ற தாகும்

சி:— ஸ்வாமி, என்னைப் பொருத்த மட்டிலாவது மனம் தெளிவடைய அதைத் திட்டமாய் கூறலாகாதா?

கு:- உலகில் இல்லறம் நடத்துபவரர்யினும் அல்லது துறவு கொண்டவர்களும் சரியே, அந்தந்த தர்மங்களுக் கென்று வகுத்து வைத்துள்ள திட்டப்படிதான் நடந்து கொள்ள வேண்டுமென்பதையே ஹிந்து தர்ம சாஸ்திர நூல்களாலும் தெளிவாக்கப் படுவதோடு அதைக் கற்றறிந்த பெரியோர்களாலும் வற்புறுத்தப்படு கின்றன. அதன் படி நடப்பதுதான் உசிதமான முறை என்றாலும் அதைப் பெரும்பாலோர் படித் தறிந்து கொள்ள முடிவதில்லை, அல்லது கேட்டு தெரிந்து கொண்டாலும் அதிகம் விளக்காமலிருக்க லாம். அப்படிக்கிருந்த போதிலும் அதை தீர யோசித் தும் கூடுமான வரையில் தர்மங்களுக்கு விரோதமில்லா மலும், தன் புத்திக்கும், மனோ சாக்ஷிக்கும் உகந்த வழியிலும் தன் குருவின் ஆக்ஞைப்படியும் (கட்டளைப் படியும்) நடந்துகொள்வதே சிலாக்யமான முறை

சி:- எல்லாக் கர்மங்களையும் விட்டவர்களைத் தானே துறவி களென்றும் (சன்யாசிகளென்றும்) சொல்லப்படு கின்றது. அவர்களுக்குச் செய்ய வேண்டிய கடமைகள் தான் ஒன்றுமில்லையே.

கு:- அப்படிச் சொல்லிக் கொண்டிருக்கலாம்; பலரும் சொல்லவும் படலாம். ஆனாலும் மண்ணில் மாமிச பண்டத்தைத் தாங்கி நிற்கும் வரையில் உடன் பிறந்த பசி, தாகம் அற்றுப்போகும் வரையில் தனக்கு இல்லற தர்மம் தேவையில்லை யென்று உதறித் தள்ளி உலகில் வாழும் மற்ற சகல குடும்பங்களும், பிரஜைகளும், தனதென்று பாவிக்கும் வரையில், கர்மாக்களை விட்ட

தாய் கொண்டாலும் அவைகள் எவரையும் விட்டு வைப்பதில்லை. ஆகவே, இதில் ஒருவருக்குண்டு மற்றொருவருக்கில்லை யென்ற வீண் சர்ச்சையில் புக அவசியமில்லை. நிற்க, ஒரு கிரஹஸ்தனை (இல்வாழ்வு நடத்துபவனை) பற்றி சிந்திக்குமளவில் ஈசனின் உதவியால் தனக்கு கிடைக்கப்பெற்றப் பொருளைக்கொண்டு தனக்கேற்பட்ட கடமைகளை மட்டிலும் செவ்வனே நடத்தி வந்தாலே போதுமானதெனலாம். தர்ம சாஸ்திரங்கள் பிறருக்கு உதவிதான், ஆகவேண்டுமென்று வற்புறுத்தினாலும் அவையெல்லாம் தன் தேவைக்கு மிஞ்சிய அளவு கடந்த செல்வம் நிரம்ப பெற்றவர்களைத் தான் கட்டுப்படுத்துவதாய் கூறலாமே யன்றி மிகக் குறைந்த ஊதியத்தைக்கொண்டு எளிய வாழ்க்கை நடத்துபவர்களை எதுவும் பலவந்தப்படுத்துமென்று கூறுவதற்கில்லை. அவர்கள் முதலில் தன் ஒரு குடும்ப க்ஷேமத்திற்கு பின்னர்தான் பிற தர்மங்களைப் பற்றிச் சிந்திக்க வேண்டும். மேலும் பிறரிடம் தன் ஏழ்மையைக் காட்டாமல் தன் வரையில் கண்ணியமாகக் குடும்பம் நடத்துபவனை எந்த பரோபகாரமும் செய்யவில்லை யென்று குற்றம் சாட்டவும் இயலாது. இது ஒருபுறமிருக்கட்டும்; துறவிகளையோ அல்லது ஞானிகளைப் பற்றி சிந்திக்குமளவில் ஒரு வகையில் இல்லறம் நடத்துபவனைக் காட்டிலும் கடமைகள் அதிகமென்றே கூற வேண்டியிருக்கின்றது. எப்படி யெனில், உலகில் படைப்பிக்கப்பட்டுள்ள சகலமானவர்களையும் ஈஸ்வரனாகவே பாவித்து (தன் இனமென்றே கருதி)

வாழ்வை கடத்த வேண்டியதே துறவிகளின் முக்கிய கடமைகளாகும்.

சி.— தனக்கென்று ஒன்றையும் விரும்பாதவர்களுக்கு மற்ற வர்களைப் பற்றிய கவலை கொள்ள வேண்டியதின் அவசியமென்ன?

கு:— அதுவும் உண்மைதான். ஆனால் தனக்கெதுவும் தேவையில்லையென்று வாயளவில் கூறிக்கொண்டிருக் கலாம். நாட்டில் வாழும் வரையில் ஏதோ ஒன்று தேவைப்படத்தான் செய்கின்றது. மேலும் துறவு பூண்ட சகலருமே நாட்டை விட்டுக் காட்டில் போய் தங்கள் வாழ்நாளை கடத்துவதில்லையல்லவா? ஒரு சிலர் வேண்டுமானால் அப்படி யிருக்கலாம், அப்படியே அங்கு சென்று வசித்தாலும் கூட ஏகாந்தமாய் (ஒரு தனி மனிதனாய்) வாழ்வதில்லை. உதாரணமாய் ஒரு பறவை, தான் இரை தேடுவதை யொட்டி காலையில் தன் கூட்டை விட்டு புறப்பட்டு உலகெல்லாம் சுற்று திரிந்தாலும், மாலை திரும்பியதும் பழையபடி தன்னிருப்பிடத்திற்கே வந்து விடுகின்றது. அப்பறவை யும் கூட தனக்கென்று ஒரு தங்குமிடத்தை நிர்ணயம் செய்து கொண்டுள்ளதல்லவா! அதைப்போலவே துறவிகளும் அல்லும் பகலும் தேசங்கள் தோறும் வனங்கள் தோறும் சஞ்சரித்துக்கொண்டிருப்பது மில்லை. அப்படியே சஞ்சரித்து கொண்டிருந்தாலும் ஏதோ ஒரு தங்குமிடந் தேடி இளைப்பாறத் தான் செய்கின்றார்கள். தவிர கானகத்தில் வசிப்பவ

ராயினும் சரியே அவர்களும் தங்குவதற்கு குடீரம் (குடிசை) உபதேசம் பெற்றுக்கொள்ள சீடர்கள், சீடர்களைப் பராமரிக்க தேவைப்படும் இதர சாதனங்கள் (தன தான்ய வசதிகள்) சக்திக்கெட்டிய வரையில் சேகரித்துக்கொள்ளாமலிருப்பதில்லை, இருக்கவும் முடிவதில்லை. அப்படி யிருக்க நாட்டில் வாழ்கின்றவர்களுக்கு எந்த கடமையுமில்லை என்று யெப்படிக் கூறுவது.

சி:— துறவு மார்க்கத்தில் எத்தனை வகையுண்டு?

கு:— இதில் எத்தனை வகைகளிலிருந்தால்தானென்ன, அவைகளின் உட்கருத்துகள், சகலரும் ஒன்றைக்குறித்தே யென்பதை மட்டிலு நிச்சயமாய் கூறலாம். எதிலும் பற்றற்றத் தன்மையுடன், சமுதாயத்துடன் கூடி வாழ்ந்தாலும், அல்லது தன்னளவில் தனித்திருந்தாலும் தன்னை சீர்படுத்திக்கொள்வதற்கென்ற வாழ்க்கை முறைகளை மாற்றிக்கொள்வது வேண்டுமானல் பல வழிகளிலிருக்கலாம்.

சி:— அவைகளில் ஏதேனும் ஒன்றிரெண்டை தெரிந்து கொள்ள ஆசைப்படுகின்றேன்.

கு:— பண்டைகால ஆகம விதி முறைப்படி மனிதனுக்கேற்பட்டுள்ள ஆசிரமங்கள் நான்குண்டு. அவையாவன:—
1) ப்ருஹ்மசரியம், பாலபருவம் முதல் யவ்வன பருவம் வரையில் (விவாஹம் ஆவதற்கு முந்தியகாலம்)
2) கிரஹஸ்தம் (மனைவியுடன் கூடிய இல்வாழ்க்கை)
3) வானப்ரஸ்தம் இல்லறத்தை விட்டு வெளிச்சென்று

தேசங்கள்தோறும், வனங்களில் சஞ்சரித்தல். 4) சன்யாசம் (துறவுகொள்ளல்). இந்நான்கு அம்சங்களும், சாஸ்திரம் அல்லது வைதீக சம்பிரதாய முறைப்படி நடத்தப்படவேண்டிய தர்மங்களென்றும் கூறப்படுகின்றது. ஆனால் அந்த கிரமப்படி சன்யாசம் பெற்றுக்கொள்வதென்பது பல கோடிக்கணக்கிலுள்ள பாரத் சமுதாயத்தினிடையே ஏதோ விரல்விட்டு எண்ணக்கூடிய அளவிற்கு ஒரு சிலரால்தான் முடியும். அப்படித்தான் நடந்தும் வருகின்றனவென்றாலும் தொன்றுதொட்டு முன்னாள் பெரியோர்களால் அனுஷ்டித்து வந்த முறைகளும் இதைப் பின் பற்றியதாகும்.

சி:— ஏன்? அப்படி நான்கு விதிகள் விதிக்கப்பட்டுள்ளது?

கு:— அந்தந்தப் பருவங்களில் செய்யவேண்டிய கடமைகளைச் சரிவரத் தெரிந்துகொண்டால் ஒரு பருவத்திற்கும் மற்றொன்றிற்குமுள்ள அடிப்படை வித்தியாசங்கள் நன்கு புலப்படும். அதுவும் தவிர, இந்நான்கு ஆசிரமங்களிலும் அவைகளுக்கென்றுத் தனித்தனியே உள்ளக் காரியங்களைச் செய்து வரும் பொழுது தன் அனுபவ உண்மைகளைக்கொண்டு எதையெல்லாம் தன்னை விட்டகற்ற வேண்டுமோ அவைகளை நீக்கியும், எதையெல்லாம் தன் மனதில் இருத்திக்கொள்ள முடியுமோ அவைகளை மட்டிலும் கடைபிடிக்கவும், கடைசியில் சகலவற்றையும் துறந்து விடுவதற்கு சுலபமாகிவிடும் என்பதை ஒட்டித்தான் இப்படி வகுக்கப்பட்டுள்ளது.

சி:— இம்முறைப்படிதான் செய்யவேண்டுமோ?

கு:— வேண்டும் அல்லது வேண்டாமென்பதை பிறர் கூறுவதைவிட அவரவர்களே சிந்தித்து முடிவுகொள்வதே நலம். நிற்க, இப்படி யேற்றுக்கொள்ளும் சந்நியாசத்தை தான், வைதீக மல்லது ஆகம சன்யாசமென்று கூறப் படுவது.

சி:— இதன் கருத்து விளங்கவில்லையே?

கு:— உலகில் சர்வேஸ்வரனால் படைக்கப்பட்டுள்ள சகலவற்றிற்கும் ஒரு முடிவுயேற்பட்டேயாக வேண்டும். அதையொட்டி, இனி எந்த தீய சக்திகளும் தன்னை தீண்டவொட்டாமல் தடுத்துக்கொள்வதற்கு, மந்திர பூர்வமாய் சகல கர்மங்களையும் விட்டொழித்தலே சன்யாசம் கொள்வதின் கருத்தென்றும் கூறலாம். அதுமட்டிலுமல்ல; இப்பொழுது எடுத்துள்ள இம்மனிதப்பிறவியை, இம்மனதிலேயே ஈஸ்வரார்ப்பணம் செய்வித்து, பிறப்புயர இவ்விரண்டு மற்ற தன் ஆத்மஜோதியால் விளங்கும் பரமேஸ்வரனுடன் ஒன்றாய் கலந்து விடுவதென்றும் அதையொட்டித்தான் துறவறம் மேற்கொண்டவர்களை ஈஸ்வரனாகவே பாவிப்பதும், மற்றவர்களுக்கில்லாத ஒரு தனி மரியாதையும்கூட செலுத்தப் படுகின்றது. இவையெல்லாம் எப்படி யிருந்தபோதிலும் தன் சரீரம் இருக்கும் வரையில் தனக்கென்று வாழாவிட்டாலும் பிறருக்கென்றாவது ஏதேனும் காரியங்கள் செய்தேயாக வேண்டுமென்றுதான் கூறலாம்.

சி:— துறவுக்கென்று ஒரு தனி மந்திரமுண்டோ?

கு:— அதை கடைசியில் (இவ்வத்தியாயத்தின் முடிவில்) தெரிந்துகொள்ளலாம்.

சி:— ஆகம முறையை விட்டு வேறுவழியினும் துறவி பெற்றுக்கொள்பவர்களுண்டோ?

கு:— அதுவே பெரும்பாலும் அதிகமாயுள்ளது.

சி:— துறவுகொண்டவர்கள் தன்வீட்டைவிட்டு வெளிச் செல்லத்தான் வேண்டுமோ?

கு:— சாஸ்திரம் ஒன்று நிச்சயமென்றும் ப்ரமாணமெனறும் பறைசாற்றிக் கொண்டிருப்பவர்களும், கருதிக்கொண்டிருப்பவர்களும் திட்டமாய் அப்படித்தான் கூறுவார்கள். ஞானமென்ற வஸ்துவையடைவதற்கும், துறவுகொள்வதற்கும் எந்த சம்பந்தமுமில்லையென்றே கூறலாம். இவ்விஷயம் மனப்பண்பை பொருத்ததாகும். ஏனெனில், தன்னை திடப்ரக்ஞையுடன் பாதுகார்த்துக் கொள்ளுகின்றவர்கள் (மோகமென்றதும், பாசமென்றதுமான, மாயாவினோதங்களில் சிக்கிக்கொள்ளாமலிருப்பவர்கள்) எங்கு வாழ்ந்தாலும் ஒன்றுதான். துறவு பூண்டு தன் வீட்டை விட்டு நாட்டில் நடமாடினும் சரியே, அல்லது காட்டில் காலம் கழிப்பதாயினும் சரியே; மனம் தெளிவடைவது மட்டிலும், எப்படியென்று எவராலும் எடுத்துரைக்க இயலாது. தன்னகத்தே காணமுடியாத தனி ஒரு வஸ்துவை பாரெங்கும் சுற்றி வருவதினால் மட்டிலும் கண்டு கொள்ள முடியுமோவென்பதை நன்குய் சிந்திக்க

வேண்டும். இவ்விஷயங்கள் அனைத்தையும் அவரவர் களின் குருதேவரின் உபதேச முறைகளையனுசரித்து தான் நிர்ணயம் செய்துகொள்ள முடியும் அல்லது செய்துகொள்ளவேண்டும்.

சி:— ஆகம வழிகளைத்தவிர மற்றைய மார்க்கத்தைப்பற்றிச் சொல்லவில்லையே?

கு:— அதுதான் மெய்ஞானிகளிடம் பெற்றுக்கொள்ளும் ஞானத்துறவென்ற தீக்ஷையாகும்.

சி:— அதுவும் சாஸ்திர சம்பந்தம் பெற்றதுதானா?

கு:— அப்படியுமிருக்கலாம், அப்படியில்லாமலுமிருக்கலாம் அதற்கென்று ஒன்று உயர்வென்றும், மற்றது தாழ் வென்பதுமில்லை. அதைப்பற்றி சிந்தித்துக்கொண்டிருப்பது வீண் கற்பனைக்கும், விவாதங்களுக்கிடம் தந்து கொண்டிருப்பதுதான் நிலைத்திருக்குமேயல்லாது அடையப்போகும் பலன் யாதொன்றுமில்லை. பொது வாய் மனம் செம்மை பட்டபின்னர் அது எந்த வகையில் ஏற்பட்ட துறவியாயிருப்பினும் சரியே, அதைப் பற்றி கருத்தில் கொள்ளவேண்டியதவசியமேயில்லை. ஏனென்றால் ஒரு சிலர், தானாகவே தன் விதிவசத்தினால் எதையும் உதறிதள்ளி வெளியேறிவிடுவதுண்டு. அல்லது அவ்வழிவந்த பெரியோர்களிடம் நாடி தீக்ஷைப் பெற்றுக்கொள்வதுமுண்டு. நிற்க. யார் எவ்வழியில் ஞானம் பெற்றவர்களாயிருப்பினும் (அல்லது துறவு மேற்கொண்டவராயிருப்பினும்) சரியே, அவரவர்களின்

புண்ய விசேஷத்தையன்றி வேறெதையும் காரணம் காட்டி கூறிக்கொண்டிருப்பது பொருத்தமற்ற விஷயம் என்பதை உணரவேண்டும்.

சி:— உலகில் ஜீவன் சரீரத்தைவிட்டு பிரிந்தபின்னர் (அல்லது மரணமடைந்த பின்னர்) சிலரைப் புதைப்பதும், சிலரை சுட்டெரிப்பதுமாய் நடைபெறுகின்றனவே அதன் காரணம் என்னவோ?

கு:— (இதற்கு முந்திய அத்தியாயங்களில் கூறப்பட்டுள்ளபடி) உயிரற்று கிடக்கும் சரீரமானது எதற்கும் லாபக்கற்றதாய் விடுகின்றது. நிற்க, அவைகளை சுட்டெரிப்பதும், புதைப்பதும், சம்பிரதாய முறையில் பண்டைகாலம் தொட்டு அவர்களின் மதாச்சாரப்படி அனுஷ்டித்து வந்துகொண்டிருக்கும் கொள்கைகளையொட்டியதேயாகும். இந்து மதாச்சாரத்தைப் பொருத்தவரையில் பெரும்பாலும் சுட்டெரிப்பதுதான் நடைமுறை பழக்கம். மண்ணில் பிறந்த மனிதன், தன் வாழ்நாளிலேயே மாயையின் வசப்பட்ட அக்ஞான விருத்திகளை, தன் புத்தியின் உதவியைக்கொண்டும், தன்மனோதிடத்தைக்கொண்டும், தன்னிடத்தில் ஆவிர்பவித்துள்ள அக்னியாக விளங்கும் ஆத்ம ஜோதியில் தன்னை அர்பணித்துக்கொள்ளாமல் விட்டுவைத்தக் காரணத்தினால், அச்சரீரத்தை சுட்டெரித்து பஸ்மமாக்குவதைத்தவிர வேறு எவ்விதமான சம்ஹாரத்தைக்கொண்டும் புனிதப் படுத்திக்கொள்ள முடியாதென்பதை யொட்டியதேயாகும். நிற்க, புதைக்கப்படுவதின் உட்கருத்தாவது

பொதுவாய் தன் உள்ளத்தே குடிகொண்ட சர்வேஸ்வரனுடன் தன் ஜீவனை ஐக்கியப்படுத்திக்கொண்டவர்கள் (அதாவது ப்ருஹ்மநிலை எய்திய மெய்ஞானிகளும், துறவிகளும்) ஈஸ்வரன் என்றும் உலகில் நிலைத்திருப்பதைப்போல இவர்களுடைய சரீரத்தினிடையே ஆன்மா ஐக்கியபட்டுவிட்டதை எடுத்துக்காட்டு முறையிலும் மற்றைய சாதாரன பாமர மனிதனுக்கு இல்லாத ஓர் தனி முறையை எடுத்துக்காட்டும் வகையிலுமே அவ்விதம் செய்யப்படுகின்றது. நிற்க, மெய்ஞானிகளாயும், துறவரப பூண்டவர்களாயும் உலகில் வாழ்ந்தவர்களை புதைப்பதற்கு மற்றொரு காரணமாகிறது. சமுதாயத்திலே இத்தகை பெரியார்கள் வாழ்ந்த தெய்வீக பண்பு நிறைந்த தன்மைகளை அவ்வப்பொழுது மக்கள் ஞாபகத்தில் வலியுறுத்திக்கொள்ள வேண்டுமென்பதையும் அதே முறைகளை தங்கள் வாழ்க்கை முறையின் லக்ஷியமாய்கொள்ள வேண்டுமென்பதையும், எடுத்துக்காட்டும் ஞாபகசின்னமாகவும் பலரும் மரியாதைக் காட்டும் வகையில் செய்யப்படுவதேயாகும்.

சி:- ஆகம சாஸ்திர முறைப்படி சன்யாச தீக்ஷைப்பெற்றுக் கொண்டவர்களுக்கும் மற்றய வழிகளில் ஞானம் அடைந்தவர்களுக்கும் உபதேசம் ஒன்றுதானோ?

கு:- அப்படி நிச்சயமாய் கூற முடியாவிட்டாலும் அதற்கென்ற அடிப்படை தத்வ ரகசியத்தை விளக்கிக்காட்டுவது எதுவோ அதையேதான் உபதேசிக்கப்படுமென்றே கூறலாம்.

சி:— அதென்னவோ?

கு:— ஆகம முறைப்படி சன்யாச தீக்ஷை பெற்றுக்கொள்ளா விட்டாலும் உண்மையில் ஒரு துறவிக்கு எந்த ப்ருஹ்ம தத்வ ரகசியத்தை எடுத்துரைக்கப்படுகின்றதோ அதே விஷயத்தைதான் வேறு வகையில் எடுத்துரைக்கப்படு மென்று ஓரளவு கூறலாம். நிற்க, தனக்குள்ளாக துறவு நிலையடையப்பெற்றவனை எந்த விதிமுறைகளும், தடுக்து நிற்பதில்லை. அப்படித்தடுப்பதாய் கூறவும் முடியாது. எவனொருவன் சுகம் துக்கம் இவ்விரண்டையும் சமமாக பாவித்து, சர்வேஸ்வரன் ஒருவனைத் தவிர மற்றெதுவும், நிலையற்றதுயென்ற உண்மைதத்துவத்தையறிந்து அவனையன்றிய மற்றெந்த விஷயத்திற்கும் தன் மனதில் புகலிடம் தராமலிருக்கின்றானோ அந்த நிமிஷமே உண்மை துறவு நிலையேற்பட்டுவிட்டதாகவே கூறலாம் இப்படி ஞானத்தையடைந்தவன் சம்பிரதாய முறைப்படி தீக்ஷைப் பெற்றுக்கொண்ட சன்யாசிகளுக்கு எந்த நிலை யேற்படுகின்றதென்று கூறப்படுகின்றதோ அதே ஸ்தானத்தை தான் இவனும் ஈசனிடமிருந்துப் பெற்றுக்கொள்கின்றானென்பதில் சந்தேகமில்லை. மேலும், சன்யாச தர்மத்திற்கு அணிகலமாயுள்ளது, பற்று நீங்கிய தன்மையும், திட வைராக்யமும், சமத்துவ குணமுமேயாகும். அப்படி பார்க்குமளவில் தன் வாழ்நாளில் சர்வேஸ்வரன் ஒருவனை கதியென்று சரணடைந்து உள்ளன்புடன் பிரார்த்திக்கின்ற ஒருவனுக்கு இம்மனப் பண்பு நிறைந்த குணங்களேற்பட்டு விடுகின்றது. எப்படி

யெனில் ஒரு மனிதன் சில காலம் வரையில் தீய காரியங்களையே செய்து வந்து கொண்டிருப்பதாய் வைத்துக் கொள்வோம். திடீரென்று தான் செய்வதெல்லாம் தவறானவை என்று மனதில் தோன்றி அத்துடன், தான் செய்த தீச்செயல்களனைத்தையும் நிறுத்திக் கொண்டு இது வரை செய்து வந்த பாப கர்மங்களுக்கு மனம் வருந்தி கடவுளை சரணமடைந்து உள்ளன்புடன் கசிந்துருகி, மன்னிப்புக் கோருகின்றான். அதோடல்லாமல் தான் எடுத்த இப்பிறவிக்கே மாறுதல் வேண்டியிறைஞ்சுகின்றான். ஒரு ஞானியை நாடி, தன்னைத் தேற்றி நல்வழி காட்டும் குருவாக யேற்றுக்கொள்கின்றான். அவரிடம் அடி பணிந்து தத்வோபதேசம் பெற்றுக்கொள்கின்றான். இப்படி ஞானம் பெற்ற இவனுக்குற்ற துணையாயிருந்து உதவியளிக்கும் திடவைராக்யத்தை எவராலும் அசைக்க முடிவதில்லை. அதை தளர்த்தி விடவும் முடியாது. இதில் ஒரு முக்கியமான விஷயத்தை மட்டிலும் ஊன்றி கவனிக்க வேண்டும். என்னவெனில், தன் முன்னாளில் செய்த செயல்களை யாரைக் கேட்டுக்கொண்டுச் செய்ய முற்பட்டான், பின்னர் எவரைக் கேட்டுக்கொண்டு அக்காரியங்களை நிறுத்தினனென்பதேயாகும். இவனை இதை செய்யென்றோ அல்லது செய்யாதே யென்றோ சாஸ்திரங்கள் கூறிற்றோ. அல்லது எவரேனும் கட்டளையிட்டார்களா என்பதை நன்றாய் சிந்திக்குமளவில், இவ்விரண்டிற்குமே அவனது மனமேயல்லவா காரண பூதமாய் நிற்கின்றது. மேலும், தன் குற்றத்தை யுணர்ந்து தன்னைத் தண்டித்துக் கொள்ள வேண்டுமெனக் கருதி

கடவுளை நினைத்தானு (சரண் புகுந்தானு) அல்லது சாஸ்திரங்களைக் கேட்டுக்கொண்டிருந்தானு; எதைக் கொண்டு ஞானமடைந்தான்; இவைகளை சுருங்கக்கூறின் அவனுக்கிடப்பட்ட கட்டளையானது 'அவனுளத்தே மறை முகமாய் குடிகொண்ட தயாநிதியான சர்வேஸ்வரனிடமிருந்து வந்ததாகவே கூறமுடியும்.

சி:— ஸ்வாமி, இனி துறவுக்கென்ற மந்திரோபதேசத்தைப் பற்றிக் கூறலாமல்லவா ?

கு:— இதை யெவருக்கும் எளிதில் எடுத்துரைக்கக் கூடிய அவ்வளவு சாதாரண விஷயமல்ல, ஏனென்றால் எவன் ஒருவன் தான் வேறு, ஈஸ்வரன் வேறு என்றும் உலகம் வேறென்றும், மற்ற மக்கள் வேறென்றும் நினைத்துக்கொண்டிருப்பவனுக்கு தன் இச்சைப் பூர்த்தியாகும் வகையில் நிர்மலமான ஈசனுக்கு பாகு பாடுகளையும் சகுணங்களையும், கற்பித்துக் கொள்ளுகின்றவனுக்கும், தன் கர்மாவிற்கேற்ற பலன் வேண்டுமென்று நினைத்து வழி படுகின்றவனுக்கும், இம்மஹா வாக்கியத்தினுல் யாதொரு உதவியில்லை யென்பதினுல் இதை தோன்றியபடி, தோன்றியவர்களெல்லாம் எடுத்துரைக்கக் கூடாது, என்பது பொதுவாய் உள்ள விதி முறை.

சி:— பின்னர் யார்தான் இவ்வுபதேசம் பெற்றுக்கொள்ள அருகதையுடையவர்கள் ?

கு:— தான் செய்த பாப, புண்யமென்ற சகல கர்மங்களையும் பரமேஸ்வரனுக்கு அர்பணித்து தன் மனதை

பரிசுத்தப் படுத்தி கொண்டவனும், எதையும் தனக் கன்னியமாய் கருதாமல் சகல வற்றிலும் பகவான் வியாபித்துள்ளாரென்பதை திட்டமாய் கொண்டுள்ள நிஷ்கபடமாகத் தனக்குத் தோன்றும் உண்மை நெறி தவறாத விஷயங்கள் எதையும் ஒளி மறைவு இன்றி எடுத்துரைக்கப்படுபவனும், எதை சமநிலையுடன் நோக்குகின்றவன் எவனோ அவன்தான் இதை உபதேசம் பெற்றுக்கொள்ளத் தகுந்தவன். நிற்க, எதையடையப் பெற்றால் உலகின் பந்த, பாசம் நீங்கி, காமக்குரோதிகள் நீங்கி, ஜனன மரணமென்ற உபாதிகள் நீங்கி சாந்தி நிலைப்பெற்று, நிரந்தர சுகமாகும் சாயுஜ்ய பதவியென்ற மோக்ஷ நிலையெதுவோ, அதுவே மஹா வாக்கியத்தின் இருப்பிடமெனக் கூறலாம்.

சி:— இது வரையில் தங்களால் கூறப்பட்ட சகல விஷயங்களையும் செவியினால் கேட்டு, சந்தேகம் நீங்கி, மனத் தெளிவடைந்தேன். இனி மேல் இம்மஹா வாக்யத்தின் லக்ஷணத்தை யறிவதன்றி என் மனம் வேறொன்றையும் பற்றி நில்லாது. நிற்க, என் நிர்மலமான வாழ்விற்கும், இனி அடைய வேண்டிய நற்கதிக்கும் வழி வகுப்பது தங்கள் கடமையன்றோ. அதை யுத்தேசித்தாவது அடியேனுக்கு இவ்விஷயத்தை எடுத்துரைக்கப் ப்ரார்த்திக்கிறேன்.

கு:— அன்பனே, இது வரையில் கேட்டுள்ள எந்த விஷயங்களையும் உன்னிடம் மறைத்து சொல்லவில்லை. அதைப் போல இவ்விஷயத்தையும் மறைத்து வைக்க வேண்டிய

தவசியமேயில்லை யென்றாலும், எதையும் தெரிந்து கொண்ட பின்னர் அலக்ஷிய மேற்படாமலும் ஒன்றை விட்டு மற்றொரு வழியில் புத்தியை செலுத்தவிடாம லிருக்க வேண்டிய திடத்தன்மை நிரம்பியிருக்க வேண்டு மென்பதை மறைமுகமாய் வற்புறுத்துவதற்கென்றே இதைச் சொல்லாமல் விடப்பட்டது. ஆகவே இனி எடுத்துரைக்கும் இவ் விஷயத்தை ரொம்பவும் பய பக்தி சிரத்தையுடனும் ரகசியமாயும் காப்பாற்றி வர வேண்டியது அதி முக்கியமான கடமையாகும். வேதங் களுக்கெல்லாம் தாயகமாயும், இருப்பிடமாயும், ஜீவநாடி போன்றதும் (மனிதனுக்குப் ப்ராணன் எப்படியோ அது போல) உலகில் விமர்சனம் செய்யப்பட்டுள்ள சப்த கோடி மஹா மந்திரங்களுக்கு இருப்பிட மானதும், நாத ப்ருஹ்மத்திலிருந்து உத்பலமானதும், இகத்திற்கும், பரத்திற்கும் காரணமானதும், வேத, தர்ம சாஸ்திரங்களுக்கு இருப்பிடமானதும் "ஆதியும், அந்தியமும்" அற்றதுமான (மூன்று நான்கு அத்தியாயத் தில் கூறப்பட்டுள்ள) அதே "ஓம்" என்ற ப்ரணவமே மஹா வாக்கியத்தின் ரூப லக்ஷணமாம். இதிலிருந்து உதயமானவைகளே மஹா வாக்ய சார மெனப்படும். ப்ரஜ்ஞானம் ப்ருஹ்ம அஹம்ப்ருஹ்மாஸ்மி, தத்வமஸி அயமாத்மா ப்ருஹ்ம என்பதே உண்மை சூக்ஷம பொரு ளாம். ப்ருஹ்மம், என்று சொல்லப்படும் பொருள் எது வோ அது நானாகவே இருக்கின்றேன். நானே ஆத்மா, ஆத்மாவே ப்ருஹ்மம் என்பதே யாகும். அப்படிக்கூறும் பொழுது நானே ப்ருஹ்மமென்றாகின்றது. இதன் சூக்ஷம ரகசியம் தன்னையன்றில்லான் வேறாக இருக்க

வில்லையென்பதேயாகும். இது வரையில் சொல்லி வந்த வொன்றும் மனிதனிடம் குடி கொண்டு ஆட்டி வைக்கும், மனம் செம்மை பட்டாலன்றி சாந்தி நிலை யெய்த முடியாது. மனம் செம்மைபட வேண்டுமேயானால்தனக்கென்று, கடவுளால் கட்டளையிடப் பட்டுள்ள கடமைகளை செய்தே கழிக்க வேண்டும். சமநிலைப் பெற்று சாந்தியடைந்த மனம் ஒருமை பட்டால், மந்திரம் ஜெபிக்க வேண்டியதில்லை, பூஜைகள் செய்யவேண்டியதில்லை, யோகத்திலிருக்க வேண்டியதில்லை. மனம் செம்மைப்பட்டு சிந்தனையற்று கிடக்கும் வரையில் அவன் நாமத்தை சொல்லியே தீரவேண்டும், அவன் புகழ் பாடியே தீரவேண்டும், அவனடி பணிந்தே தீரவேண்டும். இதுவே அவனருள் பெற்று சாந்தி நிலையடைவதற் கேற்ற மருந்து, மற்றெந்த மருந்தும் வந்த வினைகளை யகற்றும் மருந்தல்ல வென்பதை சகலரும் உணர்ந்து நடத்தலே நலம் பெற்று நீடூழி வாழ நிலையான வழியாகும்.

சத்குரு சரணம், ஸ்ரீ குரு சரணம்
சத்யானந்த ஸ்ரீ சரஸ்வதி சரணம்
ஸ்ரீ குரு சரணம் சிவ குரு சரணம்
சித் வடிவான சிவ குரு சரணம்.

———o———

சிவ சிவ சங்கர மஹா தேவா
சாம்ப சதாசிவ மஹா தேவா
கௌரி மனோகர மஹா தேவா
காருண்ய மூர்த்தே மஹா தேவா

தாண்டவப்ரிய ஸ்ரீ மஹா தேவா
தர்ம ஸம் ரக்ஷக மஹா தேவா
வேதாந்த வேத்யா மஹா தேவா
விந்தியாசல வாஸா மஹா தேவா
நிர்மல ரூபா மஹா தேவா
நிஜ நித்யானந்த மஹா தேவா
காருண்ய மூர்த்தே
கருணா சாகர மஹா தேவா
பக்த ஸம்ரக்ஷக மஹா தேவா
பாப விமோசன மஹா தேவா
தீன தயாள ஸ்ரீ மஹா தேவா
தீன பந்து ஸ்ரீ மஹா தேவா
மோக்ஷ த்வார மஹா தேவா
முக்தி நிலையா மஹா தேவா
ஸ்மஸானவாஸா மஹா தேவா
ஸ்வயம் பிரகாசா மஹா தேவா
பஸ்மதாரண மஹா தேவா
பார்வதி ரமண மஹா தேவா
த்ரு சூலதார மஹா தேவா
த்ரிணேத்ர ரூபா மஹா தேவா
யோகா நந்தா மஹா தேவா
யோகஸ்வ ரூபா மஹா தேவா
சின்மயா நந்தா மஹா தேவா
சித் ஸ்வரூபா மஹா தேவா

பந்த விமோசன மஹா தேவா
பவ்ய குணாலய மஹா தேவா
பரப் பிரும்ம ரூபா மஹா தேவா
தேவாதி தேவா மஹா தேவா
திவ்ய குணாலய மஹா தேவா
நிர் குண ரூபா மஹா தேவா
தாஸ நித்யானந்த ரக்ஷக மஹா தேவா.

" ஓம் தத்ஸத் ப்ருஹ்மார்பணமஸ்து "

' முற்றும் '

---

## முக்கிய நல்லுரைகள்.

(1) உலகில் தோன்றுவ தெல்லாம் புறக்கண்ணல் கண்டு மகிழ்ந்து மாய்கையின் வசப்பட்டு சிக்கி உழலுவதற் கேயாம்.

(2) புறக்கண்ணல் காண்பதை மறந்து அகக்கண் ணைத் திறந்து உள்ளத்தே உற்று நோக்கலே உண்மை ஒளியை காணும் வழியாம்.

(3) சிந்தையற்று செயலற்று நிர்மலமாயிருத்தலே தெய்வ த்யானத்தின் எல்லையாம்.

(4) அந்நிலை யெய்தவே ஒழுக்கமும், வழிபாடுகளும் நிறைந்த சாதனங்களாம்.

(5) சலனத்தில் தோன்றும் தோற்றங்க ளெதுவுமே எண்ணத்தின் எதிரொலியே யாகும்.

(6) சிந்தனையற்ற நிலையிலே காண்பதென்பதொன்று மில்லை. அதுவே நிர்குணத்தின் உண்மை நிலையாகும்.

(7) உலகுடன் ஒட்டியிருந்தாலும் தன் நிலை அறிவ தெற் கென்றிருப்பதே உண்மை கருத்தாம்.

(8) மாய உலகம் மற்றெதையும் செய்ய வொட்டா மல் தடுத்து நின்றாலும் மரணத்தை மட்டிலும் தடுத்து நிறுத்துவதில்லை யென்பதை தெரிந்தும் மறந்திருப்பதே அழிவிற்கு காரணமாகும்.

(9) அதை மீறித் தன் நிலை காண்பதுதான் தெய்வ நிலை யடைந்த ஞானிகளின் தன்மையாம்.

(10) தியாகத்தின் இருப்பிடமே சேவைக்கு இருப்பிட மாம். சேவைக்கு இருப்பிடமே தூய்மைக்கு இருப்பிட மாம். தூய்மைக்கு இருப்பிடமே ஞானத்தின் இருப்பிட மாம். ஞானத்தின் இருப்பிடமே எங்கும் எல்லாமாயும் ஏகமாயும் இருக்கும் பரம்பொருளின் இருப்பிடமாம்.

(11) ஓமென்று உறக்க கூவி நம: என்று நம் உள் ளன்புடன் தண்டனிட்டு சிவாய மென்று சிந்தனையற்று கிடத்தலே ப்ருஹ்ம நிலையறியும் தத்துவ ரஹஸிய வழியாம்.

(12) அதற்கென்றே ஒன்றையே பற்றி, ஒன்றையே நினைத்து, ஒன்றையே துதித்து, ஒன்றையே போற்றி ஒன் றையே அடைவதற்கான பல வழி முறைகளாம்.

(13) உலகத் தோற்றத் தன்மை மனதை கவர்ந்து சிக்கி உழலத்தான் செய்யும்.

(14) கவர்ச்சிகரமான உலகில் புறக்கண்ணின் ப்ரகாசமே ஓங்கி அறிவென்ற அகக் கண் மறைந்து தான் இருக்கும்.

(15) அகக் கண் கொண்டு காண்பதே உண்மை ஞான ஒளி தென்பட சிறந்த சாதனமாகும்.

(16) நன்மை தீமையற்று, ஏற்றத் தாழ்வற்று, சுக துக்கமற்று, பாசபந்தமற்று, ப்ரமையும் சஞ்சலமுமற்று, ஒன்றை தேடி அதன் வழி சென்று தன் நிலை காண்பது தான் ஞானத்தின் முடிவாம்.

(17) தூய வாழ்வை வளம் பெறச் செய்யும் வழியை வகுத்து அதை துலக்கி காட்டி அதன் வழி யழைத்துச் செல்பவனே ஞானச் சுடரென்ற உண்மை குருவாம்.

(18) அவனடி பணிந்து அவனருள் பெற்று அவன் பணி செய்து அவன் நிலை யடைதலே உண்மைச் சாந்திக்கு உற்ற இடமாகும்.

---

## முன்னுரையில் பிழைத்திருத்தம்.

| பக்கம் | வரி | நீக்கம் | சேர்த்தல் | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|---|
| 5 | | .... | .... | சர்வத்தம் | சர்வத்வம் |
| 7 | 12 | .... | .... | ஸ்வாமி ஸ்ரீ | ஸ்வாமிஜீ |
| 8 | 14 | .... | .... | சுபீக்ஷ | சுபிக்ஷ |

## பிழைத்திருத்தம்.

| பக்கம் | வரி | நீக்கம் | சேர்த்தல் | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|---|
| 7 | 1 | .... | அல்லது, திர்கதிருஷ்டி | .... | .... |
| 8 | 1 | .... | .... | இனியவைகளை | இனி அவைகளை |
| 9 | 22 | .... | தொன்று தொட்டு நிலவிவந்த | .... | .... |
| 11 | 6 | .... | .... | அவையளிக்கும் | அநுபவிக்கும் |
| 25 | 25 | .... | .... | தன்னுடன் | தன்னிடம் |
| 35 | 6 | .... | .... | வேறுமுறையில் தான் | வேறு முறையில், தானென்ற. |
| 38 | 20 | .... | .... | ஓங்கி வளர்த்தால் | ஓங்கவிட்டால் |
| 52 | 14 | .... | குணங்களும் செயல்களும் | .... | .... |
| 57 | 21 | .... | .... | படிப்பிக்கப்பட்டுள்ள | படைப்பிக்கபட்டுள்ள |

| பக்கம் | வரி | நீக்கம் | சேர்த்தல் | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|---|
| 58 | 25 | .... | .... | பரிபாலனர் | பரிபாலகர் |
| 59 | 10 | .... | .... | உத்தியோகஸ்தர் | உத்தியோகத்தை |
| 60 | 10 | .... | .... | இதை | இது |
| 62 | 14 | .... | .... | எதையாவது | எவரையாவது |
| 63 | 22 | அல்ல தானும் | ஏற்றுகொள்வதென்பது | .... | .... |
| 64 | 7 | .... | .... | கல்வியறை | கல்வியறிவை |
| ,, | 18 | .... | .... | இந் நான்கும் | இவ் வாறும் |
| 65 | 3 | .... | .... | நன்ருய் தெரிந்த | நன்ருய் தெளிந்த |
| ,, | 10 | .... | .... | எதற்கு குருவை | எதற்கும், குருவை |
| 66 | 21 | .... | .... | ஆன்மீகவறிவு | ஆன்மீக, அறிவு |
| 69 | 3 | .... | .... | மார்கடகதந்திரம் | மர்கடக தந்திரம் |
| 73 | 6 | .... | .... | பலி பாதகங்களுக்கு | பழி பாதகங்களுக்கு |
| 74 | 12 | .... | ஆனல் | .... | .... |
| 75 | 4 | .... | .... | (முட்டைக் கருவொப்பாக) | (முட்டைக் கருவுக்கொப்பாக) |
| 76 | 19 | .... | .... | உத்பத்திக் | உத்பத்தியாக |
| 79 | 1 | .... | .... | காமக்ருேதிகள் | காமக்ரோதாதிகள் |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 80 | 24 | .... | .... | உண்டாகும் பொழுதுதான். | உண்டாகும் பொழுதேயாகும். |
| 82 | 19 | .... | .... | கண்டதாய் | காணமுடியா தென்று |
| 84 | 9 | .... | .... | உத்பலமான | உத்பவமான |
| 85 | 10 | .... | .... | எதிலு மடங்கி யுள்ள | எதிலும் அடங்கி யுள்ள |
| ,, | 21 | அவ்வழிகளில் தேர்ச்சியுமில்லாமல் | .... | .... | .... |
| 89 | .... | ... | .... | சாத்யமற்றது என்று | சாத்யமற்ற தென்று |
| 90 | 5 | உபாதை | க்ஷுத்பாதை | .... | .... |
| 91 | 24 | .... | .... | பஞ்சகேஸங்களாகவும் | பஞ்சகோசங்களாகவும் |
| 92 | 21 | அல்லது | மிகைப்படுத்திக் கொள்ள | .... | ... |
| 95 | 15 | .... | .... | உற்ற துணை | உற்ற துணையாக |
| 97 | 20 | .... | .... | கூறிவிடக்கூடியதல்ல | கூறிவிடமுடியாது |
| ,, | ,, | .... | .... | எதைச் செய்யாமவிருக்க | எதையும் செய்யாமலிருக்க. |

| பக்கம் | வரி | நீக்கம் | சேர்த்தல் | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|---|
| 104 | 1 | .... | .... | சி :— | கு :— |
| 109 | 25 | .... | எந்த ஒரு தனி மனிதனையும் | .... | .... |
| 110 | 23 | .... | .... | ஸ்வாபத்தின் | ஸ்வபாவத்தின். |
| 111 | 2 | அப்படி தன்னை | அப்படி இவ்விரெண்டிற்கும் தன்னை | | |
| 112 | 3 | பெயரோவெனில் அல்ல | கட்டளையோ வெனில் | | |
| 115 | 1 | .... | .... | முடிப்பதற்கு | முடிப்பதற்குதான் |
| 117 | 13 | .... | .... | அதிகம் விரித்து | அதிகம் விவரித்து |
| ,, | 24 | .... | .... | வேண்டுமென்றே | வேண்டுமென்பதற்கே |
| 118 | 15 | .... | .... | மனிதனின் | மனிதன் |
| 121 | 19 | .... | .... | தன் பக்தியையும் | தன் புத்தியையும் |
| 124 | 6 | .... | .... | கூறுவதைப்பற்றியோ | கூறுவதைபற்றி |
| 127 | 4 | .... | .... | கடைப்பிடிக்கலாகாதென்றே | கடைப்பிடிக்கலாகாதென்று |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 127 | 15 | .... | .... | சூ றப்பட்டுள் ளவைதான் | சூழப்பட்டுள்ள வைதான் |
| 134 | 2 | .... | .... | ஜாக்கிரதாவஸ்தை | ஜாக்ராவஸ்தை |
| ,, | 23 | .... | .... | ஜாக்கிரதை ,, | ,, |
| ,, | 24 | .... | .... | ,, | ,, |
| 145 | 9 | .... | .... | சிந்தனை நித்திரை | சிந்தனையற்ற நித்திரை |
| 168 | 16 | .... | .... | பரமேஸ்வரத் தையே | பரமேஸ்வர தத்வத்தையே |
| 175 | 15 | .... | .... | அதைப்போல் | அதைப் போல்தான் |
| 176 | 16 | தன் | எந்த | .... | .... |
| 180 | 7 | .... | .... | தெளிவ | தெளிவு |
| 181 | 10 | கபால | பாவ | .... | .... |
| ,, | 19 | விரும்பாமல் | எவ்வித பலனும் கிடைக்காமல் | .... | .... |
| 190 | 8 | .... | .... | (சுஷூப்ணே | (சுஷூம்ணு |
| 198 | 17 | .... | .... | ப்ருஹ்ம மந்திரம் | ப்ருஹ்மாந்திரம் |
| 205 | 16 | .... | .... | சைவ | அசைவ |
| 207 | 8 | .... | .... | அநுஷ்டிப்பவர் களை | அதை யநுஷ்டிப் பவர்களை |

| பக்கம் | வரி | நீக்கம் | சேர்த்தல் | பிழை | திருத்தம் |
| --- | --- | --- | --- | --- | --- |
| 207 | 13 | .... | .... | நீண்டகால | நீண்டகாலம் |
| ,, | 15 | .... | .... | குறித்து | குறித்தோ |
| 208 | 17 | .... | .... | உபாஸனைகளை | உலக வாஸனைகளை |
| ,, | 18 | .... | அல்லதுபரந்தாமனின் | .... | .... |
| 216 | 14 | .... | .... | யெடுத்தே | யெடுத்ததே |
| 223 | 22 | .... | .... | ஈஷூக்ர | ஈஷூத்ர |
| 227 | 5 | .... | .... | கூட்டினல் | கூட்டில் |
| 228 | 22 | .... | சரீரத்தையே அடைய விருப்பமதிகமா யிருக்குமென்பதில் | .... | .... |
| 233 | 14 | .... | .... | புகழ் | புகழ |
| 234 | 2 | .... | .... | கொண்ட | அதைக்கொண்டு |
| ,, | 8 | .... | .... | என்பதை | என்பதையும் |
| 235 | 9 | .... | .... | கிட்டிவிட்டதால் | கிட்டிவிட்டதாய் |
| ,, | 19 | .... | .... | ஏற்பட்டுமுள்ள தாகவே | ஏற்பட்டுள்ள தாகவோ |
| ,, | 25 | .... | .... | இப்பொறுப் பேற்று | இப்பொறுப் பேற்க |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 236 | 2 | .... | .... | வினையும் | வினையையும் |
| ,, | ,, | .... | .... | காலத்தை | காலத்தையும் |
| ,, | 12 | .... | .... | சுற்றியிருப்பது மான | அகற்றியிருப்பது மான |
| 238 | 10 | .... | .... | விளக்காமலிருக்க லாம் | விளங்காமலிருக்க லாம் |
| ,, | 20 | .... | .... | பலரும்சொல்லவும் | பலராலும் சொல்ல |
| ,, | 21 | .... | .... | மாமிசப்பண்டம் | மாமிசப்பிண் டத்தை |
| 243 | 14 | .... | .... | இம் மனதிலேயே | இம்மண்ணுலகி லேயே |
| ,, | ,, | .... | .... | பிறப்புயா | பிறப்பு, இறப்பு |
| ,, | 15 | .... | .... | ஆத்ம ஜோதியால் | ஆத்ம ஜோதியாக |
| 246 | 23 | .... | .... | ஸம்ஹாரத்தை | ஸம்ஸ்காரத்தை |
| 250 | 13 | .... | .... | நினைத்துக்கொண் டிருப்பவனுக்கு | நினைத்துக்கொண் டிருப்பவனுக்கும் |
| 251 | 4 | .... | .... | நெறித்தவருத | நெறிதவருத |
| 252 | 14 | .... | .... | உத்பலமானதும் | உத்பவமானதும் |
| ,, | 27 | .... | .... | தன்னையன்றில் லான் | தன்னையன்றி ஈசன் |
| 253 | 2 | .... | .... | வொன்றும் | ஒவ்வொன்றும் |

இந்நூல் கிடைக்குமிடம்

**ஸ்வாமி நித்யாநந்தம்**

பிரசிடெண்ட்

ஸ்ரீ கிருஷ்ண அய்யர் ஹை ஸ்கூல் கமிட்டி

தேவி மந்திரம்

**சின்னமனூர்**

மதுரை ஜில்லா

ஜனதா பிரிண்டர்ஸ், வடக்கு ஆவணி மூலவீதி, மதுரை-53.